# கு ம ர கு ரு

பொறியியற் கல்லூரி | வணிக மேலாண்மைப் பள்ளி | வேளாண்மைக் கல்லூரி
பன்முகக் கலை அறிவியல் கல்லூரி | சக்தி மேம்பாட்டுக் கல்வி மையம்

**ஒழுக்கமே வாழ்வு**



*“கல்வியைப் போலவே தொழில்களும் கடவுளுக்குச் சமமானவை. படிக்கும் காலத்திலேயே தொழிலுக்கான பயிற்சியை மாணவர்கள் பெறவேண்டும்.”*

**அருட்செல்வர் டாக்டர்.நா.மகாலிங்கம்**






## குமரகுரு பன்முக கலை அறிவியல் கல்லூரி

அடிப்படை அறிவியலிலிருந்து சமூக அறிவியல் வரையும், இலக்கியத்திலிருந்து நுண்கலைவரையும் அனைத்தையும் வழங்கி, சமூக முன்னேற்றத்திற்கான ஆய்வுகளை முன்னெடுத்து, வாழ்நாள் முழுதும் கற்றலில் ஆர்வம் கொண்டு, உலகியலின் போக்கில் தாக்கத்தை ஏற்படுத்தும் தனியாத ஆர்வம் கொண்ட இளைஞர்களை உருவாக்கும் கல்வி நிறுவனம்.




## குமரகுரு தொழில்நுட்பக் கல்லூரி

150 ஏக்கர் வளாகத்தில் 6000 மாணவர்களுடனும் 400 பேராசிரியர்களுடனும் 34 ஆண்டுகளாக ‘ஒழுக்கமே வாழ்வு’ எனும் உயர் குறிக்கோளுடன், ஆராய்ச்சியையும் தொழில் இணைவையும் அடிப்டையாகக் கொண்டு தேசிய தர வரிசையில் முதல் நூறு நிறுவனங்களில் ஒன்றாகத் திகழ்கிறது.




## கே.சி.டி. வணிக மேலாண்மைப் பள்ளி

தொழிலகங்கள் மற்றும் சமூகத்தின் முன்னேற்றத்தில் முனைப்புடன் செயல்படும் இளைய தலைமுறைக்கான தலைவர்களை உருவாக்கும் இந்தியாவின் முதல் 100 நிறுவனங்களில் ஒன்றாகும் கல்வி, மனித வளம், மாணவர்கள் சேவை, ஐ.டி. தொழில்நுட்பம், தொழிலினைவு, சமூக பங்களிப்பு போன்றவைகளில் மிகுந்த ஈடுபாட்டுடன் செயல்படும் இணையற்ற நிறுவனம்.




## குமரகுரு வேளாண்மைக் கல்லூரி

தொழில்நுட்பம் மூலமாக வேளாண்மை உற்பத்தியைப் பெருக்கி, வேளாண்மையைத் தற்சார்புத் தொழிலாக மாற்றுவதற்குரிய வேளாண்மைக் கல்வியை, கிராமப்புற மாணவர்களுக்கு வழங்குவதை நோக்கமாகக் கொண்ட நிறுவனம்.

## ஆராய்ச்சி அமைப்புக்கள்

**மாணவர் ஆராய்ச்சிகள்**




GARAGE




**தொழிலக ஆராய்ச்சிகள்**










**போர்ஜ்**

கே.சி.டி.யின் ஒர் அங்கமான ‘போர்ஜ்’ வளர்ந்து வரும் நவீனத் தொழில்நுட்பத்தையும், கணினி அறிவியலையும் இணைத்து ரோபோட் தானியங்கிஇயந்திரங்களையும் செயற்கை அறிவூட்டல் கருவிகளையும், டிஜிட்டல் வணிகத்தையும் வளர்த்தெடுத்துப் பல்வேறு தொழில் துறைகளிலும் இந்த நுண்ணறிவுப் பயன்பாட்டைக் கொண்டுசெல்லும் நோக்கில் செயல்படுகிறது.

குமரகுரு கல்வி வளாகம்
சரவணம்பட்டி
கோயம்புத்தூர்
**0422 2661100**
**kct.ac.in**
**kctbs.ac.in**
**kclas.ac.in**
**kia.ac.in**



# சுரங்கம்

**வ**யது வந்தோர்க்கெல்லாம் வாக்குரிமை என்பதை 1952-இல் இந்திய அரசியல் சாசனம் வழங்கிவிட்டது. இதன்படி, வாக்காளர்களுக்கு 21 வயது என்று நிர்ணயித்தோம். பிறகு அது 18 வயதாகியது. வயது வந்தோர்க்கு வாக்குரிமை என்பது சரியான கண்ணோட்டமா என்ற கேள்வி முதல் தேர்தலிலேயே தொடங்கிவிட்டது.

வாக்குரிமையை வயது காரணமாகத் தரப்படுவதைவிட, படிப்பறிவு காரணமாகத் தரப்படுவதே சிறப்பு.

இதேபோல அரசியல்வாதிகள் எம்.எல்.ஏ., எம்.பி.-க்களுக்குத் தேர்தலில் போட்டியிட 25 வயது என்று அரசியல் சட்டம் நிர்ணயித்துள்ளது. ஆனால், அவர்கள் ஓய்வு பெறும் வயதை நிர்ணயிக்க வில்லை. தகுதிக்கு வயது நிர்ணயிக்கிற பொழுது, ஓய்வுக்கும் வயதை நிர்ணயிப்பதுதானே நியாயம்.

இதனை எண்ணிய அருட்செல்வர், 15 ஆண்டுகளுக்கு முன்பே (2005-இல்) இதைப் பற்றிச் சிந்தித்து எழுதிய கட்டுரையை இந்த மாதச் ‘சுரங்கம்’ பகுதியில் வாசகர்களுக்கு வழங்குகிறோம்.

மக்களவை சபாநாயகர் திருமதி சுமித்ரா மகாஜன் தமக்கு 75 வயது என்பதால், தேர்தலில் போட்டியிட விரும்பவில்லை என்பது நினைவுகூரத் தக்கது.

– இ.ஆர்.

# அரசியல்வாதிகள் ஓய்வு பெறுவதற்கு வயது...?

**2004** ஆகஸ்ட் மாதம் தலைமைத் தேர்தல் ஆணையர் திரு. கிருஷ்ணமூர்த்தி 22 சீர்திருத்தங்களைப் பிரதமர் மன்மோகன்சிங்கிடம் அளித்தார்.

எட்டு மாதங்களுக்குப் பின் மீண்டும் பிப்ரவரியில் இரண்டாவது முறையாக மேலும் சில சீர்திருத் தங்களைக் கூறியுள்ளார். அவற் றைப் பரிசீலிப்பது நமது கடமை யாகும்.

ஏனெனில், இந்திய தேசம் விடுதலை பெற்ற கடந்த 57 ஆண்டுகளில் இரண்டு அம்சங் களை மிகச்சிறப்பாகப் போற்றி வளர்த்துள்ளது.

முதல் அம்சம், இந்தியா ஒரே நாடு. பிரிவினைக்கு இடமே இல்லை. இதற்காகவே தனது இன்னுயிரைப் பலி கொடுத்தார் பிரதமர் இந்திராஜி.

சீக்கியரின் காலிஸ்தான் பிரச்சனையால்தான் அவரை நாம் இழக்க நேர்ந்தது. இன்றைக்குப் பிரதமராக வீற்றிருப்பவர் அதே சீக்கிய மதத்தைச் சேர்ந்த ஒரு பொருளாதார மேதை.



**டாக்டர் நா. மகாலிங்கம்**

இதற்கும் முன்பே பேரறிஞர் அண்ணா 1966–ஆம் ஆண்டே பிரிவினையைக் கைவிட்டு விட்ட தாக ராஜ்யசபையில் அறிவித்து, இந்திய தேசத்தின் பெருமதிப் பிற்குரிய தலைவரானார்.

இது, இந்தியா ஒரே தேசம் என்ற இறையாண்மையை உறுதிப் படுத்தி விட்டது. இது முதல் அம்சம்.

இரண்டாவது அம்சம் : இந்தியாவில் சர்தார் வல்லபபாய் படேலின் முயற்சியால் சமஸ்தானங்களின் மன்னர் ஆட்சிகள்


திரு. கிருஷ்ணமூர்த்தி


இந்திரா காந்தி


மன்மோகன் சிங்

ஒழிக்கப்பட்டன. ஜனநாயக ஆட்சி மலர்ந்திட அது வழிவகுத்தது. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் ஜனநாயக ஆட்சி செயல்பட்டு வருகிறது.

இதுவரை மத்திய ஆட்சியில் 14 பிரதமர் களையும் மாநிலங்களில் பல முதல்வர்களையும் கண்டுள்ளோம்.

இவ்வாறான ஆட்சி மாற்றத்திற்கு ஜன நாயகம் உதவுகிறது. மன்னர்களின் வாரிசு ஆட்சி இனி இல்லை. இந்திய இறையாண்மையைப் போல இந்த இரண்டாவது அம்சமான ஜன நாயகமும் 57 ஆண்டுகளாக வளர்ந்து நமது நாட்டில் நிலைபெற்று விட்டது.

இன்றைய தலைமுறையைச் சார்ந்த நம் அனைவரின் பங்களிப் பும் இந்த இரு அம்சங்களிலும் உள்ளன.

இந்தச் சூழ்நிலையில், நமது ஜனநாயகத்தை மேலும் சிறப்புக் குரியதாக ஆக்க வேண்டுமென் றால், அதில் இன்னும் நாம் சந்தித் துக் கொண்டிருக்கிற சில தீய அம்சங்களை நீக்க வேண்டும்.


வல்லபாய் படேல்

நமது அரசமைப்புச் சட்டப்படி 18 வயது நிரம்பிய நமது வாக்காளர் ஒவ்வொருவரும் சுயமாகச் சிந்தித்து, தான் விரும்பிய வேட்பாளர் ஒருவருக்கு ஆதரவாக வாக்களிக்கலாம்.

அதேபோல, வேட்பாளர்களாகப் போட்டியிடு கிறவர்களுக்கு வயது 25 என்று நிர்ணயித்திருக் கிறோம். இந்த வயதில் அனுபவ ஞானம் அதிகம் பெறமுடியாது. அதனை அதிகப்படுத்தியாக வேண்டும்.

எம்.எல்.ஏ. பதவிக்குப் போட்டியிட 40 வயது என்றும், எம்.பி. பதவிக்குப் போட்டியிட 45 வயது என்றும், ராஜ்யசபைக்கு 50 வயது என்றும் அதேபோல கிராமப் பஞ்சாயத்துத் தலைவருக்கும் நகரசபைத் தலைவருக்கும் 30 வயது என்றும், உள்ளாட்சி உறுப்பினருக்கு 25 வயது என்றும் குறைந்தபட்ச வயதை நிர்ணயிக்கலாம்.

அப்போதுதான் வேட்பாளர்கள் தங்கள் கல்வி அறிவினால் மட்டுமல்லாமல், அனுபவ ஞானத்தி னாலும் சிறப்பாகப் பணி செய்வார்கள். அது நமது ஜனநாயகத்திற்கு மேலும் வலுவூட்டுவதாக அமையும்.

**இவ்வாறு, பதவி வகிக்கத் தகுதியான வயதை மட்டுமல்ல, பதவியிலிருந்து ஓய்வு பெறும் வய தையும் நிர்ணயிக்க வேண்டு மென்று தலைமைத் தேர்தல் ஆணையர் கூறியுள்ளர். ஆனால், அந்த வயது எது என்று அவர் ஏனோ தெரிவிக்கவில்லை. அரசி யல்வாதிகள் உயிரோடு இருக்கும் வரை அரசியலிலிருந்து அநேகமாக ஓய்வு பெறுவதே இல்லை.**

தேர்தல் ஆணையரின் இக் கருத்தை அரசியல் கட்சித் தலைவர்கள் வரவேற் பார்கள் என எதிர்பார்க்க முடியாது.

நீதிபதிகளுக்கு அதிகபட்ச வயது 65 என்று நிர்ணயிக்கப் பட்டிருப்பதுபோல, அரசியல்வாதி களுக்கு 75 வயது என்று நிர்ணயிக்கலாம். தேர்தல் ஆணையர் இதனைப் பரிசீலிக்கலாம். திருப்திப்பட்டால் இதனையே பரிந்துரைக்கலாம்.

40 வயதில் பணியாற்றத் தொடங்கினால் எம்.எல்.ஏ.-வாக, எம்.பி.-யாக, ராஜ்யசபா எம்.பி.-யாக 75 வயதுவரை பதவிகளை வகிக்கலாம்.

எம்.எல்.ஏ. மற்றும் எம்.பி.-க்களை






மட்டுமல்லாமல், பிரதமர்களைக்கூட இந்த வயது வரம்புக்கு உட்படுத்தலாம்.

அத்துடன், எந்தப் பதவியாக இருந்தாலும், இரண்டு முறை மட்டுமே பதவி வகிக்குமாறு நிர்ணயிக்க வேண்டும்.

அமெரிக்காவின் அதிபர் இரண்டு முறை தான் பதவி வகிக்க முடியும். அதேபோல நாமும் ஒருவர் 75 வயது வரை ஒவ்வொரு பதவியையும் இரண்டு முறை மட்டுமே வகிக்க அனுமதிக்கலாம்.

அறிஞர் அண்ணா

தேர்தல் ஆணையர் திரு. கிருஷ்ணமூர்த்தி இதனை ஏனோ பரிந்துரை செய்யவில்லை. ஆகவே, ஆணையர் இதனைப் பற்றியும் சிந்திப்பது நல்லது.

தேர்தல் ஆணையரின் சிபாரிசில் இன்னொரு முக்கிய அம்சம் கவனிக்கத் தக்கதாக உள்ளது. ஒரு தொகுதியில் போட்டி போடுகிற வேட்பாளர்கள் எவருக்குமே வாக்களிக்க ஒருவருக்கு விருப்பமில்லை என்றால், வாக்குச் சீட்டில் அதைத் தெரிவிக்க வசதியிருக்க வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார்.

இந்த நிராகரிப்பு வாக்குரிமை நமது தேர்தலில் இதுவரை இடம் பெறவில்லை. இந்த அம்சம், நமது தேர்தலில் இடம்பெறுமானால், கட்சிக்காரர்கள் திருட்டு வோட்டுப் போடுவதைத் தடுக்க இது உதவி செய்யும் என்று தேர்தல் ஆணையர் கருதுகிறார். இது மிகவும் சிரமமானது.

கள்ள வோட்டைத் தடுப்பதற்குப் புகைப்படத்துடன் உள்ள வாக்காளர் அட்டையே போதும். கேரளாவில் அது சிறப்பாக வெற்றி பெற்றுள்ளது. அதனால், நிராகரிப்பு வாக்குரிமைக்கு அவசியம் இல்லை.

தேர்தல் ஆணையர் இன்னொரு முக்கியமான அம்சத்தையும் குறிப்பிட்டுள்ளார். மாநிலத் தேர்தல் அறிவிக்கப்பட்டால், முதலமைச்சர், உள்துறை அமைச்சர், நிதியமைச்சர் ஆகிய மூவரைத் தவிர மீதியுள்ள அமைச்சர்கள் ராஜினாமா செய்ய வேண்டும் என்று கூறியுள்ளார்.

இதேபோல, நாடாளுமன்றத் தேர்தல் அறிவிக்கப்பட்டால் பிரதமர், உள்துறை அமைச்சர், நிதியமைச்சர் ஆகிய மூவரைத் தவிர மற்ற மத்திய அமைச்சர்கள் பதவி விலக வேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

ஆணையர் குறிப்பிட்டுள்ள அமைச்சர்கள் பதவியிலிருந்து விலகினால், ஆளும் கட்சிக்கு ஆதரவாக அரசு எந்திரம் பயன்படாமல் செய்ய முடியும் என்று நம்புகிறார்.

உண்மையில், பதவி விலக வேண்டிய அமைச்சர்கள் மத்தியிலும் மாநிலத்திலும் பிரதமரும் முதலமைச்சரும்தான். அவர்களுடன் சேர்ந்து மத்திய – மாநில உள்துறை அமைச்சரும் நிதியமைச்சர்களும்தான்.

மற்ற அமைச்சர்களுக்கு இந்த அளவு முக்கியத்துவம் இல்லை. தேர்தல் ஆணையர் இதனை மறுபரிசீலனை செய்யலாம்.

இன்னொரு கருத்துப் பற்றியும் நாம் இத்தருணத்தில் சிந்திக்கலாம். நமது நாடாளுமன்ற, சட்டமன்றத் தேர்தல்கள் அறிவிக்கப்பட்டவுடன் அரசியல் கட்சிகள் தங்கள் வேட்பாளர்களை மட்டும்தான் போட்டியிடும் தொகுதிகளில் அறிவிக்க வேண்டும். தேர்தல் முடிந்த பின்னர்தான், கட்சியின் பிரதிநிதிகள் கூடி முதலமைச்சரையோ, பிரதமரையோ தேர்ந்தெடுக்க வேண்டும். இது தான் முறையான ஜனநாயகம். முன்பு அப்படித்தான் இந்தியத் தேர்தல் நடந்தது.

ஆனால், இப்போது தேர்தல் அறிவிக்கப்

*தொடர்ச்சி 15-ம் பக்கம்*



இந்தியா மட்டுமல்ல, உலகமே குலை நடுங்கும்படியான ஒரு படுகொலை நடந்து 100 ஆண்டுகள் நிறைவு பெற்றன. அப்படுகொலை பஞ்சாப் அமிர்தசரஸ் பொற்கோவிலுக்கு அருகில் ஜாலியன் வாலாபாக் பூங்கா 6 ஏக்கர் மைதானத்தில் நடந்த மாபெரும் கொடூரம் அது.

# படுகொலைக்கு நூற்றாண்டு

1919 ஏப்ரல் மாதம் 13–ஆம் தேதி மாலை நேரத்தில் ஏறக்குறைய 15 – 20 ஆயிரம் மக்கள் அந்த மைதானத்தில் கூடியிருந்தார்கள். திடீரென்று முன்னறிவிப்பில்லாமல் சுட்டதால் ஆயிரக்கணக்கானோர் பலியானார்கள்.

மைதானத்தில் உள்ளே நுழைவதற்கும், வெளியே வருவதற்கும் ஒரே வழிதான். அந்த வழியை மறித்து நின்று கொண்டு பிரிட்டிஷ் ராணுவத்தின் 50 சிப்பாய்கள் ஜெனரல் டயரின் உத்தரவின்படி, 1650 ரவுண்டு சுட்டதால் 15 நிமிடத்துக்குள் 379 பேர் பலியானார்கள். காயம் பட்டவர்கள் 1200 பேர். சுடுவதற்குத் தோட்டாக்கள் தீர்ந்துவிட்ட காரணத்தால், மேலும் சுட முடியவில்லை என்று வீரம் பேசினான் ஜெனரல் டயர்.

இது ஒரு தோராயமான அரசுக் கணக்கு. உண்மையில் கொல்லப் பட்டவர்கள் ஆயிரக்கணக்கானோர். உயிர் தப்பிப்பதற்காக அந்த மைதானத்தின் ஓரத்தில் இருந்த கிணற்றில் விழுந்து மாண்டு போனவர்கள் எத்தனையோ பேர்.

ஏப்ரல் 13 அன்று சீக்கியர்களின் புத்தாண்டான பைசாகிப் பண்டிகை என்பதால், அப்படி ஒரு கூட்டம் அங்குக் கூடியது. பொற்கோவிலுக்குச் சென்று வந்த ஏதுமறியாதவர்களும்கூட அக்கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

அங்கே கூடுவதற்கான காரணம், தேசத்தின் விடுதலைக்காகப் போராடி வந்த மக்கள் பிரிட்டிஷ் சர்வாதிகார ஆட்சியின் ரௌலட் சட்டத்தை எதிர்த்து ஒரு கண்டனக் கூட்டம் நடத்துவதாக அறிவித்தார்கள்.

பிரிட்டிஷ் அரசு அந்தக் கூட்டத்திற்குத் தடை விதித்தது. தடையை மீறி அக்கூட்டத்தில் பேசுவதாக இருந்த டாக்டர் சத்யபால் – சர்புதீன் கிச்சிலி இருவரும் கைது செய்யப்பட்டனர். அதனை எதிர்த்து நடந்த கூட்டம்தான் அது.



பாராட்டினான். இப்படு கொலையைச் செய்த ஜெனரல் டயர் சிப்பாய்களைப் பார்த்து, அருமையான துப்பாக்கிச்சூடு (Good shooting) என்றான்.

*1857*–இல் 'சிப்பாய்க் கலகம்' என்று பிரிட்டிஷாரால் சொல்லப்பட்ட முதல் சுதந்திரப் போராட்டத்தை, பிரிட்டிஷ் அரசு, இரும்புக் கரம் கொண்டு ஒடுக்கியது. அந்தப் போராட்டத்தைச் செய்த ராணுவத்தினரைச் சுட்டுத் தள்ளியது. சுட்டுத்தள்ளப்பட்டவர்களும் இந்திய ராணுவத்தினர் தான், சுட்டுத் தள்ளியவர்களும் இந்திய ராணுவத்தினர்தான்.



ஜெனரல் டயர்

பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராக மக்கள் கொந்தளித்துக் கூட்டம் நடத்துவதைச் சகித்துக் கொள்ளாத பஞ்சாப் ஆட்சி நிர்வாகி மைக்கேல் ஓ' டயர் (O' Dwyer) கூட்டத்தினரைச் சுடுவதற்கு அனுமதி அளித்தான். சுடுவதற்கு ஆணையிட்டவன் ஜெனரல் டயர் (General Dyer).

*55* வயதுள்ள இந்த ஜெனரல் டயர், ஜாலியன் வாலாபாக் மைதானத்தில் நடக்கும் கூட்டத்தில் மக்களுக்கு ஒரு நல்ல பாடத்தைப் புகட்டுவதற்காக *50* பேர் கொண்ட ராணுவத்துடன் மைதானத்தின் வாசலுக்கு வந்தான்.

அந்த வாசல் சற்று உயரமானது, மைதானமோ தாழ்வானது. இந்த *50* சிப்பாய்கள் நேபாள கூர்க்காக்களும், பலுசிஸ்தான் துப்பாக்கி வீரர்களும் தான். இந்தியர்களே இந்தியர்களைச் சுட்டார்கள்.

இந்நடவடிக்கையை எடுக்கச் சொல்லி அனுமதி அளித்த மைக்கேல் டயர் இந்தப் படுகொலையை அபாரமானது (Wonderful) என்று

முதலாமவர்கள் தேசபக்தி உள்ள ராணுவ வீரர்கள். இரண்டாமவரோ தேசபக்தி இல்லாத ராணுவத்தினர். இவ்வாறு, ஏற்கனவே ராணுவத்தை ஒடுக்கிய பிரிட்டிஷ் ஆட்சி, ஜாலியன் வாலாபாக் மைதானத்தில் நடந்த கண்டனக் கூட்டத்தையும் அதேபோல் ஒடுக்க வேண்டுமென்று திட்டமிட்டது. அப்படி ஒடுக்கினால்தான் சட்டம் ஒழுங்கைக் காப்பாற்ற முடியும் என்று பஞ்சாப் நிர்வாகத் தலைவர் மைக்கேல் டயர் நினைத்தான்.

அமிர்தசரசிலிருந்த போலீஸ் டெபுடி கமிஷனர் மைல்ஸ் இர்விங் என்பவன் மைக்கேல் டயருக்கு ஏப்ரல் *9*–ஆம் தேதி ஒரு தந்தி அனுப்பினான். அத்தந்தியில் அமிர்தசரஸ் ஜாலியன் வாலாபாக் மைதானத்தில் இந்துக்களும், முஸ்லிம்களும் இணைந்து ஒரு கண்டனக் கூட்டத்தை நடத்த உள்ளனர்.

தொடர்ச்சி 16-ம் பக்கம்

# வெயில்!



வெ. ஜெயலட்சுமி

மஞ்சள் பூக்களுடன்
மலர்ந்து மின்னும்
சரக்கொன்றை மரங்கள்...

இலைகளற்ற அம்மரங்களில்
இளைப்பாறிக் கொண்டிருக்கும்
காக்கைகள்...

உச்சி வெயிலில் வியர்க்க வியர்க்க
குச்சி ஐஸ் விற்கும்
வியாபாரிகள்...

கிடைத்த நிழலில்
குட்டித் தூக்கம் போடும்
தெரு நாய்கள்...

தேடி வந்து அருந்தும்
தேவாமிர்தமாக
இளநீர், நீர்மோர்...

சிறுவர் பெரியவர் விரும்பும்
சில்லென்ற தேவதையாக வலம்வரும்
ஐஸ்கிரீம் வண்டிகள்...

தகித்திருக்கும்
தார்ச்சாலையோரம் குவிக்கப்பட்ட
தர்பூசணிப் பழங்கள்...

தள்ளுவண்டியில் அமர்ந்து
தாகம் தீர்க்கும்
குளுகுளு கம்பங்கூழ் பானைகள்...

விதவிதமான வடிவத்துடன்
விற்பனைக்குக் காத்திருக்கும்
மண் பாண்டங்கள்...

உதிரும் வியர்வைத் துளிகளுடன்
உடல் கறுத்து
பாதாளச் சாக்கடை தோண்டும்
பணியாளர்கள்...

எனக் களைகட்டியிருந்தன
எமது நகரத்து வீதிகள்
வெயிலில்...!







# சக்தி ஆட்டோ நிறுவனத்திற்கு

# “ஹோண்டா நிறுவன சிறப்பு விருது”




புதுதில்லியில் நடைபெற்ற விழாவில், விருதினை ‘சக்தி ஆட்டோ காம்பொனன்ட்’ நிறுவனத்தின் சார்பாகப் பெற்றுக்கொண்ட செயல் இயக்குநர் திரு. மா. ஹரிஹரசுதன் அவர்கள் விருதுடன் நிற்கிற காட்சி.

சக்தி ஆட்டோ காம்பொனன்ட் நிறுவனம், உள்நாட்டில் உள்ள புகழ்பெற்ற கார் தயாரிக்கும் நிறுவனங்களுக்குத் தரமான உதிரி பாகங்களைத் தயாரித்து வழங்கி வருவதில் தனிச்சிறப்புப் பெற்ற நிறுவனமாக விளங்குகிறது.

தரமான தயாரிப்புகளுக்குச் சான்றாக, சக்தி ஆட்டோ காம்பொனன்ட் நிறுவனம் பல்வேறு விருதுகளைப் பெற்றுள்ளது. அவ்வகையில், புகழ்பெற்ற ஹோண்டா கார் நிறுவனத்திற்கும் சக்தி ஆட்டோ நிறுவனம் கார் உதிரி பாகங்களைத் தயாரித்து வழங்குகிறது.

துல்லியமான தரத்தில், குறித்த நேரத்தில் கார் உதிரி பாகங்களைத் தயாரித்து வழங்கியதற்காக, ஹோண்டா நிறுவனத்தின் “DELIVERY PERFORMANCE - SILVER AWARD” என்ற விருது சக்தி ஆட்டோ நிறுவனத்திற்குச் சமீபத்தில் வழங்கப்பட்டது.

இந்நிகழ்ச்சியில் ஹோண்டா கார் நிறுவனத்தின் உயரதிகாரிகள், சக்தி ஆட்டோ காம்பொனன்ட் நிறுவனத்தின் வைஸ் பிரசிடெண்ட் (மார்க்கெட்டிங்) திரு. பெருமாள் ஆகியோர் உடனிருந்தனர்.

கட்டுரை

# பழகிப் பார்த்ததில் இவர்கள்... 5

## 'சிலம்பொலி' சு. செல்லப்பன்



**கோ**வை இளங்கோவடிகள் இலக்கிய மன்றம் அமரர் பி.எஸ்.ஜி.ஜி. கோவிந்தசாமி அவர்கள் தலைமையில் இயங்கி வந்தது. என் தமிழாசிரியர் புலவர் க.மீ. வெங்கடேசன் மன்றத்தின் செயலாளர்களில் ஒருவர். எனவே நான் ஏற்பாடுகளில் அவருக்குத் துணை நிற்பேன்.



சிலப்பதிகார விழாப் பட்டிமன்றத்திற்கு நடுவர் பொறுப்பேற்க ஒரு பிரமுகர் அழைக்கப்பட்டிருந்தார். அவர்தான் சிலம்பொலி செல்லப்பன். அப்போது அவர் தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர். முக்கியப் பிரமுகர் என்பதால் அவருக்கு ஒரு பெரிய தங்கும் விடுதியில் அறை ஒதுக்கப்பட்டு இருந்தது. 1980–களில் கோவையில் தரமான தங்கும் விடுதிகள் குறைவு.

இரு நாட்கள் விழா. இரண்டாம் நாள் நிகழ்ச்சிகள் முடிந்தன. மாலையில் நிகழும் பட்டிமண்டபத்திற்குச் சிலம்பொலியார் நடுவர். "மதிய உணவுக்குப் பிறகு சிலம்பொலியார் வந்துவிட்டாரா என்று பார்க்கலாம் வா" என என் ஆசிரியர் அழைக்க, அவருடன் அந்த விடுதிக்குச் சென்றேன். எங்களுக்குப்

மரபின் மைந்தன் முத்தையா

பேரதிர்ச்சி காத்திருந்தது. அவர் வந்திருக்கிறார். ஆனால் விடுதியில் இருப்பவர்கள் கவனக் குறைவாக, அறை இல்லை என்று சொல்லிவிட்டார்கள். அதனால் திரும்பிவிட்டார் என்று விடுதியில் இருந்தவர்கள் சொன்னார்கள்.

எங்களுக்கோ பதற்றம். அரசு விருந்தினர் மாளிகை போயிருப்பாரா அல்லது கோபித்துக்கொண்டு ஊருக்குப் போய்விட்டாரா என்றெல்லாம் குழம்பினோம்.

எதற்கும் பார்க்கலாம் என்று விழா நடக்கும் மணி மேல்நிலைப் பள்ளி வளாகத்துக்குப் போனோம். பக்கத்துக் கிராமங்களிலிருந்து விழாவுக்காக வந்தவர்கள் மதிய உணவிற்குப் பிறகு பள்ளியில் இருந்த மைதானத்தில் அமர்ந்து இளைப்பாறிக் கொண்டு இருந்தார்கள்.

அவர்கள் நடுவில் சந்தன நிறச் சட்டையும் வேட்டியுமாய் கைப்பெட்டி அருகில் இருக்க மைதானத்தில் அமர்ந்து அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தார் சிலம்பொலியார்.

பதறிப்போன என் ஆசிரியர், ஓடிப் போய் அவரிடம் மன்னிப்புக் கேட்கத் தொடங்க, 'ஒண்ணும் பதறாதீங்க' என்று அவரை ஆசுவாசப்படுத்தினார். "ஐயா புறப்படுங்கள். அறைக்கு அழைத்துப் போகிறோம்" என்றதும் கைக் கடிகாரத்தைப் பார்த்தார்.

"விழாவுக்கு இன்னும் நாலு மணி நேரம்தான் இருக்கு. பள்ளிக்கூடத்திலேயே முகம் கழுவிக் கொண்டால் போதும். இதற்கு எதற்கு அறை" என்றார். கலைஅரங்கத்திற்கு பின்னாலேயே ஓர் அறை இருந்தது. அங்கே அழைத்துப் போனோம். அவர் பெட்டியை எடுத்துக் கொள்ளக்கூட யாரையும் அனுமதிக்கவில்லை. தன் பெட்டியை எடுத்துக் கொண்டு அவர் மாடிப்படி ஏறுவதைப் பார்த்த புலவர் வெங்கடேசன், என்னிடம் "என்ன மனுஷன்யா" என்றது இப்போது சொன்னது போல் இருக்கிறது.

அறைக்குப் போன பிறகும் சட்டையைக் கழற்றி ஆணியில் மாட்டிவிட்டு வேட்டியும் கை வைத்த பனியனுமாய் அங்கிருந்த ஒரு கட்டிலில் சாய்ந்து கொண்டே எங்களுடன் பேசிக் கொண்டிருந்தார்.

அன்றுதான் அவருடன் அறிமுகமே தவிர, அவர் உரைகளை அதற்கு முன்னர் நிறையக் கேட்டிருந்தேன். என் பள்ளிப் பருவத்தில் பாவேந்தர் பாரதிதாசனின் 'குடும்ப விளக்கு' நூலின் விருந்தோம்பல் பகுதியை நான் மனப்பாடம் செய்தது – அந்தப் பகுதியைச் சிலம்பொலியார் சுவைபட விளக்கியதைக் கேட்ட பிறகுதான்.

சிலப்பதிகாரத்தில் வருகிற நடன விவரணைகளை அவர் மேடையில் எடுத்துச் சொல்லும் பாங்கே தனி. குறிப்பாகக் கொடுகொட்டி நடனம் பற்றி அவர் விளக்கும்போது மேடையில் யாரோ அந்த நடனத்தை நிகழ்த்துவது போலவே இருக்கும்.

காலப்போக்கில் பல மேடைகளை அவரோடு பகிர்ந்துகொண்ட போதெல்லாம் நெருங்கிப் பழகும் வாய்ப்புகள் கிடைத்தன. அவருடைய புலமையைப் போலவே அவருடைய எளிமையும் நம்மை அதிசயத்தில் ஆழ்த்தும்.

சங்கப் பாடல்கள் தொடங்கி, சமகாலக் கவிஞர்களின் கவிதைகள் வரை மனனமாகச் சொல்வதில் அவருக்கு நிகர் அவர்தான். அரசுப் பணியில் உயர் பொறுப்பில் இருந்தாலும் எந்தச் சலுகைகளையும் ஏற்கச் சம்மதிக்காதவர் அவர்.

அதேபோல எல்லா வயதினரையும் சமமாக நடத்தக் கூடிய பண்பு அவருடைய தனிச்சிறப்பு. தமிழிசையிலும் தனித் தமிழிலும் மிகுந்த நாட்டம் கொண்டிருந்தார். ஒருமுறை ஓர் அரிமா சங்கத்தின் மண்டல மாநாடு ஒன்றில் அவரும் நானும் சிறப்பு விருந்தினர்களாகக் கலந்து கொண்டோம்.

Presentation of Banners என்கிற நிரல் முறை அறிவிக்கப்பட்டது. அந்த மண்டலத்துக்கு உட்பட்ட சங்கத்தினர் அவரவர் பேனர்களை வரிசையாகக் கொண்டு வந்தார்கள். சிலம்பொலியார்

பேசியபோது, "இதையெல்லாம் கூட நீங்கள் தமிழில்தான் சொல்ல வேண்டும். Presentation of Banners என்பதற்குப் பதில் 'பதாகைகள் ஏந்தி வருதல்' என்று சொன்னால் எவ்வளவு நன்றாக இருக்கும்" என்று குறிப்பிட்டார்

அவர் பேசுகிறபோது அடிக்கடி சொல்கிற செய்தி, "இசைக் கருவிகள் தோல் கருவி, துளைக் கருவி, நரம்புக் கருவி ஆகிய மூன்று வகைப்படும். தமிழின் தனிச்சிறப்பு 'ழ'கரம்.

"தோல் கருவியாகிய முழவு எனும் பெயரில் 'ழ'கரம் இருக்கிறது. துளைக் கருவி குழல் என்பதிலும் 'ழ'கரம் இருக்கிறது. நரம்புக் கருவியாகிய யாழ் என்பதிலும் 'ழ'கரம் இருக்கிறது. எனவே இசையே தமிழனால் உருவாக்கப் பட்டதுதான்" என்பார்.

கோவையில் 'கண்ணதாசன் கழகம்' என்னும் அமைப்பு ஆண்டுதோறும் கண்ணதாசன் விழா நடத்தி விருதுகளும் வழங்கி வருகிறது. 2011–இல் அந்த விழாவிற்குச் சிலம்பொலியாரை அழைத்திருந்தோம்.

அப்போதுதான் வியப்புக்குரிய ஒரு செய்தியைச் சொன்னார். "நான் கவிஞர் கண்ணதாசனுடன் பழகியிருக்கிறேன். அவர் அரசவைக் கவிஞராக இருந்த போது அதற்குரிய மாதாந்திர ஊதியத்தை வழங்கும் பொறுப்பு என்னிடம் இருந்தது. அந்த வகையிலும் கவிஞர் எனக்குப் பழக்கம். ஆனால் இத்தனை ஆண்டுகளில் இப்போதுதான் முதல் முறையாகக் கண்ணதாசன் விழாவில் பேசுகிறேன்" என்றார்.

அவருக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ரயில் பயணச்சீட்டு உறுதியாக வில்லை. விழாப் புரவலரும் விருதுகளின் நிறுவனருமான திரு. கிருஷ்ண குமார் சிலம்பொலியாருக்கும் அவர் புதல்விக்கும் உடனே விமானச் சீட்டுக் களைப் பதிவு செய்துவிட்டார். ஏனெனில், அடுத்த தினம் சிலம்பொலி அவர்களுக்குச் சென்னையில் விழா இருந்தது.

சிலம்பொலி பதறிவிட்டார். பத்து தடவைகளாவது புலம்பி இருப்பார். "ரயிலில் எங்காவது உட்கார்ந்து கொண்டே போயிருப்பேனே. இப்படி விரயம் செய்யலாமா?" என்று மிகவும் வருத்தப்பட்டார்.

சிலம்பொலி மேடையேறுகிறார் என்றால் உரையாற்றத் தொடங்கிய ஐந்தாவது மணித்துளி அரங்கம் அவர் கட்டுப்பாட்டுக்குள் வரும். அவர் நிறைவு செய்யும்வரை அவருடைய ஆளுமைக்குள் அரங்கம் இருக்கும்.

மேடையைவிட்டு இறங்கியதும் எத்தனை பேர் நெருங்கி அவருடன் உரையாட முற்பட்டாலும், சற்றும் சலிப்பின்றி மேடையில் பேசிய அதே உற்சாகத்துடன் அவர்களுடன் உரையாடுவார்.

பாடல்களை நினைவு வைத்திருப்பது போலவே மனிதர்களையும் நினைவு வைத்திருப்பார். ஒருமுறை பார்த்துப் பழகியவரைக்கூட மறுமுறை பார்க்கும் போது அவர் தடுமாறியது இல்லை.

அருட்செல்வர் ஐயா அவர்கள் ஒருமுறை என்னிடத்தில் "சிலம்பொலி செல்லப்பனை அழைத்துக் கோவையில் பத்து நாட்கள் தங்கவைத்து 'காந்தி காவியம்' பேசச் சொல்ல வேண்டும்" என்றார். அரங்க ஸ்ரீநிவாசன் என்னும் பெருங்கவிஞர் எழுதியது காந்தி காவியம்.

அதற்கான முயற்சிகளை முன்னெடுப்பதற்கு முன்னர் அருட்செல்வர் அமரராகிவிட்டார். இந்தத் தகவலை சிலம்பொலியாரிடம் சொன்னபோது, "உண்மைதான். 'காந்தி காவியம்', 'இராவண காவியம்' எல்லாம் தொடர் உரைகளாகப் பேச வேண்டியவை" என்றார். அவர் அந்த நூல்களில் பலமுறை தொடர் உரைகளும் நிகழ்த்தியுள்ளாராம்.

"இராவண காவியம் சீதையை ஆபாசமாகச் சித்தரிப்பதாகக் கேள்விப் பட்டு இருக்கிறேனே" என்று அவரிடம் கேட்டேன். அதை முற்றிலும் மறுத்தார். "கண்ணியக் குறைவான எந்தப் பகுதியும் அதில் இல்லை" என்றார்.

*கணித ஆசிரியராய் வாழ்வைத் தொடங்கி, கல்வித் துறையில் உயர் அலுவலர் பொறுப்புகளை வகித்து, தமிழ் வளர்ச்சித் துறையில் உயர் பதவிக்கு வந்து, தனித்தமிழ் மேம்பாட்டுக்கும் மேடைத் தமிழ் மேன்மைக்கும் பண்டைய இலக்கியங்களைப் புதுமையுடன் சொல்வதற்கும் தன் வாழ்வை அர்ப்பணித்தவர் சிலம்பொலியார்.*

*கொங்குத் தமிழ் மணக்கும் சங்கத் தமிழ் அறிஞராய், செவ்வியல் தமிழ் வளர்த்த செவ்வியல் மனிதராய், மனித நேயத்தின் மகுடமாய் வாழ்ந்த சிலம்பொலியார் சமகாலத் தமிழுலகம் கண்ட சிகரங்களில் ஒருவர்.*

*அவர் மறைவுச் செய்தி கேட்டதும் நான் வடித்த இரங்கல் கவிதை இது :*



*'சிலம்பொலி'*
*சு. செல்லப்பன்*

**சிலம்பொலிக்கு மரணமில்லை!**

**வெ**ண்கல மணியின் வாக்கு
வித்தகம் ததும்பும் நாக்கு
கண்களில் சாந்த நோக்கு
கனிவு தான் வாழ்வின் போக்கு
பண்பெனும் குணமே இந்தப்
புவிமிசை வந்தாற் போல
தண்ணெனும் நிலவாய் வாழ்ந்த
தமிழ் சிலம்பொலியார் வாழ்வு

துறைகளின் தலைவர் ஆனால்
தொண்டராய் வாழ்ந்தார் என்றும்
நிறைகுட அறிஞர் அன்பின்
நிழலென நின்றார்; ஏதும்
கறையிலா வாழ்வு வாழ்ந்து
களப்பணி தினம் புரிந்து
மறைந்த நம் சிலம்பொலிக்கு
மரணமே என்றும் இல்லை

கணிதத்தைக் கற்று வந்தார்
கல்வியில் உயர்ந்து நின்றார்
அணிசெய்யும் இலக்கியங்கள்
ஆர்வத்தால் பயின்று கொண்டார்
துணிவுடைச் செந்நா வீறு
துலங்கிடும் புலமை பெற்று
மணியென எழுந்தார் எங்கள்
மகுடமாய் நின்றிருந்தார்

சிவஞானம் போனபின்னே
சிலம்புக்கு இவர்தான் என்றோம்
கவிஞானம் மிக்கோர்க்கெல்லாம்
கலங்கரை விளக்கம் என்றோம்
நவ ஞானம் படைக்கத் தோன்றும்
நாளைய இளைஞருக்கும்
சுவையான உவமை எங்கள்
சிலம்பொலி செல்லப்பன் தான்

கொங்கிலே கடலே இல்லை
கொண்ட இக் குறையை நீக்க
இங்கிவர் கடலாய் வந்தார்
இலக்கிய அலைகள் தந்தார்
தங்குவார் – இன்னும் இன்னும்
தருவார் என்றிருந்தோம் ஆனால்
சிங்கமாய் வாழ்ந்த எங்கள்
சிலம்பொலி மறைந்துபோனார்!

5-ம் பக்கத் தொடர்ச்சி

பட்டவுடனேயே அரசியல் கட்சிகள் பிரதமர் யார் என்றும், முதலமைச்சர் யார் என்றும் அறிவிப்பதில் அதிகக் கவனம் செலுத்துகின்றன.

இன்னும் சில தேசியக் கட்சிகள் தாங்கள் வெற்றி பெற்றால் 'இவர்தான் பிரதமர்.' மாற்றுக் கட்சி வெற்றி பெற்றால், யார் பிரதமர்? என்று அறைகூவலே விடுக்கின்றன.

ஜனநாயகத்திற்கு இந்த அம்சம் எதிரானது. இதைத் தவிர்ப்பதற்கே அரசியல் கட்சிகள் முன் வர வேண்டும். சம்பந்தப்பட்ட அரசியல் கட்சித் தலைவர்களும் இதற்குரிய அறிவுரைகளைத் தங் களின் கட்சிக்காரர்களுக்குக் கூற வேண்டும்.

முதலமைச்சர் மற்றும் பிரதமர் யார் என்பதைத் தேர்தல் முடியும்வரை மறைமுகமாகக்கூட அரசி யல் கட்சிகள் அறிவிக்க முயற்சி செய்யக்கூடாது.

அந்த மனப்பக்குவம் நமது அரசியல் தலைவர் களுக்கு வருமானால், நமது ஜனநாயகம் உலகத்தி லேயே புகழ் பெற்றதாக விளங்கும்.

தேர்தல் ஆணையர் இதனையும் தேர்தல் சீர்திருத்தமாகப் பரிந்துரை செய்யலாம்.

மாநிலக் கட்சிகள் இப்போது மலிந்துள்ளன. ஏறக்குறைய 560 கட்சிகள் உள்ளதாகக் கணக் கிடப்பட்டுள்ளன. இச்சூழலில், தேசிய அளவில் நடத்தப்படும் நாடாளுமன்றத் தேர்தலில் மாநிலத் தில் மட்டுமே உள்ள கட்சிகள் போட்டியிடுவதைத் தவிர்க்குமாறு செய்வது நல்லது.

வேண்டுமானால், தேசியக் கட்சிகளின் சின்னங்களில் மாநிலக் கட்சிகள் போட்டியிடுமாறு அனுமதிக்கலாம். தேசியக் கட்சிகளுக்கு மாநிலக் கட்சிகள் ஆதரவு தரலாம்.

மாநிலக் கட்சிகளே நேரடியாக நாடாளு மன்றத் தேர்தலில் போட்டியிட அனுமதிக்கக் கூடாது. மாநிலக் கட்சிகள், மாநில சட்டசபைத் தேர்தலில் போட்டியிடுவதுதான் பொருத்தமானது.

தேர்தல் ஆணையரின் இக்கருத்து இன் றைக்கு முக்கியமாகப் பரிசீலிக்கப்பட வேண்டிய கருத்தாகும். ஏனெனில், தேசியக் கட்சிகளின் எண்ணிக்கை 4 அல்லது 5 எனக் குறைந்து விட்டன. இச்சூழ்நிலையில், அவை மாநிலக் கட்சி களிடம் மண்டியிட்டு நிற்கின்ற பரிதாபகரமான நிலையை ஒவ்வொரு தேர்தலிலும் நாம் பார்த்து வருகிறோம்.

மாநிலக் கட்சியின் செல்வாக்கு அக்குறிப் பிட்ட மாநிலத்திற்கு அப்பால் இருக்குமா என்பது சந்தேகமே.

இதே மதிப்பீட்டை இன்னும் விரிவாக்கி, மத ரீதியான கட்சிகளையும் சாதீயக் கட்சிகளையும் தேர்தலில் போட்டியிடத் தடை செய்யலாம். சமயச் சார்பில்லாத நமது நாட்டில் மதத்தின் பெயரிலும் சாதிகளின் பெயரிலும் அரசியல் கட்சிகளாக அவை இயங்குவதை இனியும் அனுமதிக்கத் தேவையில்லை. இந்தக் கருத்தையும் தேர்தல் ஆணையர் தமது பரிந்துரையாக அரசுக்கு அளிக்கலாம்.

நமது நாட்டில் இனி நாடாளுமன்றம், சட்டப் பேரவைகள், உள்ளாட்சிகளான நகரசபைகள் மற்றும் பஞ்சாயத்து ஒன்றியங்கள் ஆகியவற்றில் தான் நான்கு தேர்தல்களும் எல்லா மாநிலங் களிலும் ஒரே நாளில் நடக்கும்படியாகச் செய்தாக வேண்டும்.

ஒரே நாளில் தேர்தல் நடத்தப்படுமானால், அரசுக்குத் தேர்தல் செலவு குறையும். அரசுக்கு மட்டுமல்ல, கட்சிகளுக்கும் வேட்பாளர்களுக்கும் செலவு குறையும்.

மேலும், ஒரே நாளில் தேர்தல் நடத்தப்படு மானால், பஞ்சாயத்துத் தேர்தல் முதல், பார்லி மெண்ட் வரை பல்வேறு தேர்தல் பணிகளைச் செய்ய அதிக அளவில் தொண்டர்களும் கிடைப் பார்கள்.

நமது தேர்தல் நடத்தப்படும் முறையை உலக நாடுகள் வியப்போடு பார்க்கின்றன. கலவரங்கள் இல்லாமல் இந்தியாவில் ஆட்சி மாற்றம் நடைபெறு வதைக் கண்டு பல நாடுகள் பாராட்டுகின்றன.

அண்மையில், பயங்கரவாதத்தால் பாதிக்கப் பட்ட ஈராக்கில் தேர்தலை நடத்துவதற்கு இந்தியா வுக்கு அழைப்பு வந்தது. ஈராக் அரசு இந்தியத் தேர்தல் ஆணையத்தை அணுகித் தங்களுடைய நட்டுத் தேர்தலை நடத்தித் தருமாறு கோரியது. ஆனால், மத்திய அரசு அதை விரும்பவில்லை.

இந்த அளவுக்கு நம்முடைய தேர்தல் முறையை உலக நாடுகள் பாராட்டுவது நமது தேர்தல் ஆணையத்திற்குக் கிடைத்துள்ள பெரு மையாகும்.

அத்தகைய சிறப்புமிக்க தேர்தல் ஆணை யத்தைப் பெற்றிருக்கிற நாம், தேர்தல் விதிகளில் உரிய சீர்திருத்தங்களைத் தொடர்ந்து செய்து இன்னும் சிறப்பாகத் தேர்தலை நடத்தலாம்.

அவ்வாறு செய்தால்தான் அறிவாளிகளும் அனுபவசாலிகளும், கல்விமான்களும், நீதிமான் களும், தொழிலதிபர்களும், பல்துறை நிபுணர் களும் நமது நாடாளுமன்ற இரு அவைகளிலும் மாநில சட்டப்பேரவைகளிலும் மற்றும் உள்ளாட்சி களிலும் பிரதிநிதிகளாக இடம்பெற்று மக்களுக் குச் சேவை செய்ய முடியும். •

7-ம் பக்கத் தொடர்ச்சி

இது ஓர் ஆபத்தான ஒற்றுமை என்று அதில் குறிப்பிட்டான்.

அக்கூட்டத்தில் பேசவிருந்த டாக்டர் சத்யபால், டாக்டர் சைபுதீன் கிச்சிலி, இருவரும் முன்கூட்டியே கைது செய்யப்பட்டார்கள். அதுமட்டுமல்ல. மார்ஷியா என்ற ஓர் ஆங்கிலப் பெண்ணை அடித்து நொறுக்கி, சிலர் மானபங்கம் செய்துவிட்டார்கள்.

இதற்காக 20 இந்தியர்கள் சுட்டுக் கொல்லப்பட்டனர். எந்தத் தெருவில் மார்ஷியா என்ற ஆங்கிலப் பெண் மானபங்கப் படுத்தப்பட்டாளோ, அந்தத் தெருவில் இருந்தவர்கள் தெருவைக் கடந்து செல்வதற்கு ஊர்ந்துதான் செல்ல வேண்டும் என்று உத்தரவிடப் பட்டது. நகரம் முழுவதும் ராணுவத்தின் கட்டுப்பாட்டில் இருந்தது.

ரௌலட் சட்டத்தை காந்திஜி கண்டித்தார். ‘ஊர்ந்துதான் செல்ல வேண்டும் என்ற உத்தரவை அவமான மாகக் கருதினார். ஜாலியன் வாலாபாக் நிகழ்ச்சி இதற்குப் பிறகுதான் நடந்தது.

இப்படுகொலையை வரலாறு Massacre என்றது. பிரிட்டிஷ் Disturbance என்றது. இதேபோலத்தான் 1857–இல் நடந்த சம்பவத்தை பிரிட்டிஷ் அரசு சிப்பாய்க் கலகம் என்றது. வரலாறு அதை முதல் இந்திய சுதந்திரப்போர் என்றது.

இக்கண்டனக் கூட்டத்தை நடத்தியவர்களைக் “கொடூரமானவர்கள்” என்றான் ஜெனரல் டயர். அவர்களுக்கு ஒரு படிப்பினையைத் தந்ததாகப் பெருமிதமடைந்தான். இதனைப் பற்றி விசாரிப்பதற்கு லண்டனில் உள்ள பிரிட்டிஷ் அரசு ஹண்ட்டர் கமிஷனை அமைத்தது.

காங்கிரஸ் கட்சியும் தனியாக ஒரு விசாரணைக் குழுவை அமைத்தது. அதில் திலகர், நேரு, காந்தி ஆகியோரை உறுப்பினர்களாக நியமித்தது. ஜாலியன் வாலாபாக் படுகொலையைப் பற்றி லண்டன் பிரதிநிதிகள் சபையிலும், பிரபுக்கள் சபையிலும் விவாதிக்கப் பட்டது.

இந்தியாவுக்கான செயலாளர் எட்வின் மாண்டேகு இந்த விவாதத்தைத் தொடங்கி வைத்தார். அப்போது ஜெனரல் டயரை தைரியம் மிக்கவர் தான் என்றும், பஞ்சாபியருக்கு ஒரு படிப்பினையைக் கற்றுத் தருவதற்காக அவர் செய்த முயற்சியானது, குற்றச் செயலுக்குரியதுதான் என்றும் கூறினார். இப்படுகொலையைப் பயங்கர வாதமாகவே கருதினார். முதல் உலக யுத்தத்தில் பெல்ஜியத்தின்மீது ஜெர்மனி செய்த கொடூரத்திற்குச் சமமானது என்றார்.

பிரிட்டிஷ் கன்சர்வேடிவ் கட்சி, ஜெனரல் டயரைக் கடுமையாகக் கண்டித்தது. பதவி நீக்கம் செய்ய வேண்டும் என்று கூறியது.

பிரிட்டிஷ் ஆட்சி நியமித்த ஹண்ட்டர் கமிஷன், ஜெனரல் டயர் அசம்பாவிதம் நடக்கும் என்ற தனது யூகத்தின் அடிப்படையில்தான் இந்தக் குற்றத்தைச் செய்தார் என்றாலும் அவர் செய்தது குற்றம்தான். அதற்காக அவர் பதவியில் நீடிக்கக்கூடாது என்றது.

இதற்கு மத்தியில் லண்டன் மார்னிங் போஸ்ட் பத்திரிகை பதவி நீக்கம் செய்யப்பட்ட ஜெனரல் டயருக்கு ரூ. 10 லட்சம் மதிப்புள்ள நிதி வசூல் செய்து கொடுத்தது. இறுதிக் காலத்தில் அவர் சிரமமில்லாமல் வாழ்க்கை நடத்த வேண்டும் என்பதற்காக இதனைச் செய்தது. ஆனாலும் பக்கவாத நோயால் பாதிக்கப்பட்ட அவர் வெகு விரைவிலேயே மரணமடைந்தார்.

ஜாலியன் வாலாபாக் படுகொலையைப் பற்றிக் கடுமையாக விமர்சித்தவர் மகாகவி ரவீந்திரநாத் தாகூர். உலக வரலாற்றில் இந்தப் படுகொலைக்கு

இணையான ஒரு கோரச் சம்பவம் நடக்கவில்லை என்றே கூறினார். ஜெனரல் டயர் செய்த படுகொலையை, உத்தம்சிங் என்ற 20 வயது சீக்கிய இளைஞன் அப்போதே நேரில் பார்த்தவன். அவன் லண்டனுக்குப் படிப்பதற்காகப் போயிருந்தான். ஜெனரல் டயர் இறந்து போனதால், உயிரோடிருந்த மைக்கேல் ஓ டயர் அங்கே உள்ள ஒரு பொதுக்கூட்டத்தில் பேசுவதை அறிந்தான். அந்தக் கூட்டத் திற்குள் மெதுவாக நுழைந்து மைக்கேல் டயரைக் கைத்துப்பாக்கியால் சுட்டுக் கொன்றான்.

அவனைப் பிடித்தபோது, அவனு டைய பெயரை ராம் முகமது சிங் ஆசாத் என்று கூறினான். அதாவது, இந்து, முஸ்லிம், சீக்கிய மதங்களின் பெயர்கள் அது. இவ்வாறு கூறியதற்குக் காரணம், இந்தியா என்பது மதக் கலவரங்கள் உள்ள பூமி என்று பிரிட் டிஷார் கூறிவந்தார்கள். அது தவறு என்று சுட்டிக் காட்டவே தனது பெயரை இவ்வாறு கூறினான்.

மகாத்மா காந்தி, இப்படு கொலையை அடையாளப்படுத்த "டயரிசம்" என்ற வார்த்தையை உரு வாக்கினார். பிரதிநிதிகள் சபையில் வின்ஸ்டன் சர்ச்சில் பேசியபோது, இந்தப் படுகொலையை முன்னுதாரண மில்லாத 'ஸ்லாட்டர்' (Slaughter) என்று கூறினார். இதற்கு இணையானது பிரிட்டிஷ் வரலாற்றில் இல்லையென் றும் குறிப்பிட்டார். ஜெனரல் டயரை அயோக்கியன் (Rogue) என்றார்.

எப்படியிருந்த போதிலும், ஜெனரல் டயரோ, மைக்கேல் டயரோ, பிரதமர் சர்ச்சிலோ இதற்காக மனதார வருந்தியதாகத் தெரியவில்லை.

ஜாலியன் வாலாபாக் பூங்கா, தனியார் பலருக்கு உரியது. இந்த இடத் தைத்தான் மக்கள் மைதானமாகப் பயன்படுத்தி அங்குப் பொதுக் கூட்டங்கள் நடத்தி வந்தனர். அப்படி நடந்த கூட்டங்களில் ஒன்றுதான் ஜெனரல் டயர் துப்பாக்கிச்சூடு நடத்திய கூட்டம். இந்தப் படு கொலையால் உலகம் முழுவதும் இது காட்டுத்தீ போலப் பரவியது. அந்த மைதானம் வரலாற்றுச் சம்பவம் நடந்த இடமாக மாறிவிட்டது. காங்கிரஸ் கட்சி, அந்த 6 ஏக்கர் தனியார் மைதா னத்தை 1919–இல் ரூ. 5 லட்சம் அளித்து வாங்கியது.

ஜெனரல் டயர் பயன்படுத்திய தோட்டா அளவு 303. மனிதர்களின் உடல்களைத் துளைத்துக்கொண்டு பாய்ந்த அத்தோட்டாக்கள் சுவர்களில் ஏற்படுத்திய வடுக்கள் 100 ஆண்டு களுக்குப் பிறகு இன்றைக்குப் பார்த் தாலும் தெரியுமாறு உள்ளன.

ஜாலியன் வாலாபாக் படு கொலையை பிரிட்டிஷ் மகாராணி இரண்டாம் எலிசபெத், துயரச் சம்பவமாகக் கூறினார். 2013 பிப்ரவரி மாதம் இந்தியாவிற்கு வருகை தந்த பிரிட்டிஷ் பிரதமர் டேவிட் கேமரூன், 'பிரிட்டிஷ் வரலாற்றில் இது ஒரு அவமானகரமான பக்கம்' என்றும் இதை எப்போதும் நினைவில் வைத் திருக்க வேண்டும் என்றும் குறிப் பிட்டார்.

ஆனாலும், அப்படுகொலைக்காகப் பிரிட்டிஷ் அரசு மன்னிப்புக் கேட்கத் தயாராக இல்லை. 90 ஆண்டுகளுக்கு முன்பு நடந்த இந்தச் சம்பவத்திற்கு மன்னிப்புக் கேட்பதோ, அல்லது நஷ்ட ஈடு தருவதோ எந்த வகையிலும் சம் பந்தப்பட்டவர்களைச் சென்று சேராது என்று கூறினார்.

இதற்குப் பதிலளித்த சில விமர்சகர் கள், 1972–இல் வட அயர்லாந்து தேசத்தில் 13 எதிர்ப்பாளர்களை பிரிட் டிஷ் ராணுவம் சுட்டுக்கொன்றது. அந்தப் படுகொலைக்கு மட்டும் எப்படி பிரிட்டிஷ் அரசு மன்னிப்புக் கேட்டது? என்றார்கள்.

தற்போதுள்ள பிரிட்டிஷ் பிரதமர் தெரசா மே இதை ஒரு அவமானகர

மான சம்பவம் எனக் குறிப்பிட்டிருக் கிறாரே தவிர, இந்த நூற்றாண்டு தினத் தில் பிரிட்டிஷ் அரசு மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறது என்று சொல்லத் தயாராக இல்லை.

பிரிட்டிஷ் அரசு இதுபோன்ற படு கொலைகளைச் செய்துதான் பல நாடு களைத் தன் ஆட்சியின்கீழ்க் கொண்டு வந்தது. அதனால்தான் இங்கிலாந்து 'சூரிய அஸ்தமனம் இல்லாத நாடு' என்று பேசப்பட்டது.

இரண்டாவது உலக மகா யுத்தத்தில் ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் ஆகிய அச்சு நாடுகள் மூன்றும் முசோலினி, ஹிட்லர், டோஜோ ஆகிய மூவரின் திறமையால் ஐரோப்பாவை ஜெயித் திருப்பார்களானால், இங்கிலாந்து, பிரான்ஸ், போலந்து, டச்சு முதலிய நாடுகளின் ஆட்சிகள் இருந்த இடம் தெரியாமல் அழிந்து போயிருக்கும்.

அச்சம்பவம் நிகழாமல் போனதால், யுத்தம் தொடுத்த ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான்தான் தோற்றன. வரலாற்றை இவ்வாறு பின்னோக்கிப் பார்க்கும் போது, ஜாலியன் வாலாபாக் படுகொலையைப் போன்ற இன்னொரு சம்பவம் உலகத்தில் வேறு எந்த நாட் டிலும் நிகழவில்லை.

100 ஆண்டுகளைக் கடந்துள்ள இப்படுகொலை இந்திய மக்களின் தேச பக்தியைத் தூண்டிவிடும் சம்பவமாகப் பேசப்படுகிறது. ஜாலியன் வாலாபாக் நமது சுற்றுலாப்பயணக் கல்வியில் இடம்பெற வேண்டும். பத்தாவது படிக் கின்ற மாணவன் இந்தியாவின் எந்த மாநிலத்தில் படித்தாலும், ஒரு முறை ஜாலியன் வாலாபாக்கிற்குச் சென்று துப்பாக்கிக் குண்டுகள் பாய்ந்துள்ள அச்சுவர்களையும், அந்த மரணக் கிணற்றையும் பார்க்க வேண்டும்.

அதுமட்டுமல்ல, குஜராத்திலுள்ள காந்திஜியின் சபர்மதி, வார்தா ஆசிரமங்களுக்குச் சென்று அங்கு வாழ்ந்த மகாத்மா காந்தியின் எளிய வாழ்க்கையை அனுபவித்துத் திரும்ப வேண்டும்.

தேசபக்தி என்பது நமது நற்குண மாக இருக்க வேண்டும். வெறும் ராணு வத்தால் மட்டும் ஒரு தேசத்தைப் பாது காப்பது சரியான நடவடிக்கை அல்ல. ராணுவமே அழிந்தாலும்கூட அந்த தேசத்தின் பிரஜைகள் அந்நிய ஆட்சிக்கு அடங்கி நடக்கக்கூடியவர்கள் அல்ல. அதை எதிர்த்து ராணுவத்தை விடவும் அவர்கள் போராடி ஜெயிப் பார்கள் என்பதாக நமது தேசபக்தி ஜொலிக்க வேண்டும்.

தினசரி தேசபக்தியோடு நாம் வாழ் வோமானால், நிச்சயமாக ஒரு குடிமகன் இன்னொரு குடிமகனை ஏமாற்ற மாட்டான், தீமை செய்ய மாட்டான், திருட மாட்டான், பொய் சொல்ல மாட்டான். இந்த உன்னதங்களைத் தரக் கூடிய தாய் வயிறு தேசபக்தி ஒன்றுதான்.

ஒவ்வொரு மாநிலத்திலும் தேச பக்தியை வெளிப்படுத்திய சம்பவங்கள் பல நிகழ்ந்துள்ளன. உதாரணம், கோவை மாவட்டத்தில் பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்து சிங்காநல்லூர் ரயில் கவிழ்ப்பு நடந்தது. அந்த ரயில் அருவங்காட்டிலிருந்து ஆயுதத் தளவாடங்களை ஏற்றிக் கொண்டு வந்த சரக்கு ரயில். அது கவிழ்க்கப்பட்ட சம்ப வத்தைப் படித்தாலே தேசபக்தி பீரிட்டு எழும்.

அதேபோல, சூலூர் ராணுவ விமான தளத்தை தேசபக்தர்கள் தீ வைத்துக் கொளுத்தினார்கள். அதற்காக அவர்கள் தீட்டிய ரகசியத் திட்டம் ஒரு நாவலைவிட சுவாரஸ்யமானது.

இதுபோல, எல்லாப் பகுதிகளிலும் தேசபக்தியை எடுத்துக் காட்டும் சம்ப வங்கள் எத்தனையோ நிகழ்ந்துள்ளன. அவற்றை நினைவு கூராமல் போவது வரலாற்றுத் துரோகமாகும்.

ஜாலியன் வாலாபாக் படுகொலை யின் நூற்றாண்டு தினத்தில் இவற்றை யெல்லாம் நினைவு கூர்வோமானால், இந்தியா அணு ஆயுதமில்லாமலேயே கூட வல்லரசாக விளங்க முடியும்.

**– ந.நி.**

ஆன்மிகம்

மு. சண்முகம்



மூலவர் லட்சுமி நாராயணர்

# திருவலம் – கெம்பராஜபுரம் அருள்மிகு லட்சுமி நாராயணர்

தென்னாட்டில் ஏழாம் நூற்றாண்டிற்குப் பின்னரான காலத்தில் பௌத்த, சமண சமயங்களின் வளர்ச்சி குன்றியபோது சைவ, வைணவ நெறிகள் தழைத்தோங்கின. நாயன்மார்களும், ஆழ்வார்களும் தங்களது பண் சுமந்த பாடல்களாலும் பாசுரங்களாலும் இறையருளை வியந்து பாடி மக்கள் மனதில் ஆன்மிக உணர்வு மேலோங்கச் செய்ததனை வரலாறுகள் உரைக்கின்றன.

சங்க காலத்திலிருந்தே வைணவ சமயத்தின் வழிபடு கடவுளாகிய திருமாலை முல்லைநிலத் தெய்வமாகக் கண்டனர் தமிழ் மக்கள். பின்னர் கண்ணனாக, இராமனாக, நரசிம்மனாக தசாவதாரங்களில் கண்டு மகிழ்ந்தவர்கள் "ஓம் நமோ நாராயணா" என்னும் நாமத்தால் நாளும் நம்பித் தொழுது 'அவ'னது நல்லருளைப் பெற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

'நாடறிந்த கள்வன் நாராயணன் ஆவன்' என்ற பழமொழிக்கேற்ப வேத நாராயணன், அனந்த நாராயணன், சூரிய நாராயணன், சங்கர நாராயணன், லட்சுமி நாராயணன் என்று அந்த நாராயணனுக்குப் பல்வேறு நாமங்கள். வேத முதல்வனாகிய 'அவன்' நூற்றெட்டு வைணவ திவ்ய தேசங்களிலும் – இருந்தும் – கிடந்தும் – நின்றும் – காட்சி தந்து நம்பி வரும் அடியார்களுக்கு நல்லருளை வாரி வழங்கிக் கொண்டிருக்கின்றான்.

108 திவ்ய தேசங்களிலும் அற்புத வடிவங்களில் காட்சியளிக்கின்ற திருமால் ஆழ்வாராதிகளால் மங்களாசாசனம் செய்யப்பட்டவர். இந்தத் திவ்ய தேசங்கள் 108 என்பது ஒரு காலகட்டத்தோடு நின்றுவிட்ட கணிப்பு. அதற்குப் பின்னர் எழுப்பப்பட்ட கோயில்களிலும் நாள்தோறும் பூசை புனஸ்காரங்களும் திருவிழாக்களும் வெகு விமரிசையாக நடந்து கொண்டுதான் இருக்கின்றன. இருப்பினும் அவை திவ்ய தேசங்கள் பட்டியலில் சேர்க்கப்படவில்லை.

அவ்வாறு எழுந்த கோயில்களில் திருவலம் சார்ந்த கெம்பராஜபுரம்

அருள்மிகு லட்சுமிநாராயணர் திருக் கோயிலும் ஒன்று. இது வேலூர் மாவட்டம் – காட்பாடி வட்டத்தில் திருவல்லம் என்னும் பாடல்பெற்ற தலத்தின் அருகில் அமைந்துள்ளது.

10–ஆம் நூற்றாண்டில் வாண மரபினருக்குரிய தலைநகரமாக, வலிமை வாய்ந்த ஒரு கோட்டை நகர மாக விளங்கிய வரலாற்றுப் பெருமை மிக்கது; இன்று திருவலம் என்று அழைக்கப்படும் வல்லம் என்னும் இவ்வூர். பண்டைக் காலத்தில் இதற்கு வல்லாளம் என்ற பெயர் உண்டு.

சென்னை – சித்தூர் நெடுஞ் சாலையில் சென்னையிலிருந்து 122–வது கிலோ மீட்டரில் உள்ள இவ்வூரின் தெற்குப் புறமாகச் செல் லும் சாலையில் குறுக்கிடும் இருப்புப் பாதையைக் கடந்து சென்றதும் சுமார் 1 1/2 கிலோ மீட்டர் தூரத்தில் கெம்ப ராஜபுரம் என்னும் ஊர் வரும். அங்கு சாலையின் மேற்புறத்தில் தெரிவது தான் அருள்மிகு லட்சுமிநாராயணர் திருக்கோயில்.


பெரிய திருவடி (கருடாழ்வார்)


சிறிய திருவடி (ஆஞ்சநேயர்)

கெம்பராஜபுரம் என்னும் இவ்வூரின் பெயர்க் காரணம் பற்றி ஆராய்கின்றபோது, இப்பகுதியை கங்கராஜமல்லன் என்ற ஓர் அரசன் ஆண்டதாக ஒரு வரலாறு கிடைக் கிறது. அவ்வரசன் பெயராலேயே இவ்வூர் முதலில் கங்கராஜபுரம் என்று அழைக்கப்பட்டு, பின்னர் கெம்பராஜ புரம் என்று மருவியிருக்கலாமோ என்று தோன்றுகிறது. இராம காவியத்தைப் படைத்த கவிச்சக்கர வர்த்தி கம்பர் இவ்வூருக்கு வந்து சென்றதனால் இதற்குக் கம்பராஜபுரம் என்னும் பெயர் ஏற்பட்டுப் பின்னர் கெம்பராஜபுரம் என மாறிற்று என்று கூறுவோரும் உண்டு.

இத்திருக்கோயில் கிழக்கு நோக்கிய வாயிலைக் கொண்டது. முகப்பில் பெரிதாகக் கோபுரம் ஒன்றும் இல்லை. அதனைக் கட்டுவதற்கான திருப்பணிகள் தற்போது நடை பெற்றுக் கொண்டிருக்கின்றன. கொடிக்கம்பம் செய்து வைக்கப்பட்டு நிறுத்துவதற்குத் தயார் நிலையில் உள்ளது.

1860–ஆம் ஆண்டு மொகலாய அரசர் ஒருவரின் உருவம் பொறிக்கப் பட்ட காலணா நாணயம் கண் டெடுக்கப்பட்டுத் தற்போது மூலவர் இருக்கும் பீடத்திற்குக் கீழ் பூமியில் வைக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. எனவே, இக்கோயில் அண்மைக் காலத்தில் உருவானதுதான் என்று தெரிகிறது.

இது 1999–ஆம் ஆண்டில் புனருத் தாரணம் செய்யப்பட்டு 2004–இல் மகா சம்ப்ரோக்ஷணம் நடந்தேறி யுள்ளது. சுமார் ஒரு ஏக்கர் நிலப் பரப்பில் அமைந்துள்ள இத்திருக் கோயிலின் வாயிலில் பெரிய திருவடி (கருடாழ்வார்)யும் சிறிய திருவடி (ஆஞ்சநேயர்)யும் இருபுறங்களிலும் கூப்பிய கரங்களுடன் சிலையுருவில் காட்சி தருகின்றனர்.



லட்சுமி நாராயணர் கோவில் முகப்பில் விநாயகர்

முகப்பு மண்டபத்தினை யடுத்துக் கருவறைக்குள் நுழைகின்ற போது, வாயிலின் இருபுறமும் காணப்படுகின்ற ஜெயன், விஜயன் ஆகிய துவார பாலகர்களின் உருவ அமைப்பு காண் போரை ஈர்க்கும். கருவறையினுள்ளே இடப்பாகத்தில் லட்சுமி தேவியை அமர்த்திய திருக்கோலத்தில் அருள்மிகு லட்சுமி நாராயணர் வீற்றிருந்து அருள்பாலிக்கிறார்.

அருள்மிகு லட்சுமி சமேத நாராயணரைத் தரிசித்துவிட்ட நிறைவுடன் கருவறையை விட்டு வெளியே வரும் போது எதிரே கூப்பிய கையினராய் நிற்கும் கருடாழ்வார் தரிசனம் கிடைக்கிறது. தொடர்ந்து திருக்கோயில் வளாகத்தில் வலம் வருகையில் அங்கு நடைபெறும் கோயில் திருப்பணிகள் மலைக்கச் செய்யும். அரிய பெரிய திருப்பணிதான்!

இத்திருக்கோயிலில் அர்ச்சகராகத் தொண்டாற்றும் திரு. கோவிந்த பட்டாச்சாரியார் அவர்கள் தமிழிலேயே அர்ச்சனை செய்வதும் நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தை ஓதி, கோயிலுக்கு வரும் பக்தர்களை அதில் திளைக்கச் செய்வதும், கோயில் திருப்பணிகளில் ஒருமித்த உணர்வுடன் இருந்து செயலாற்றுவதும் போற்றற்குரியன.

திருக்கோயில் வளாகத்தை விட்டு வெளியே வருகின்றபோது, முகப்பில் அரசமரம், வேப்பமரம், நாகமரம் ஆகிய மூன்றும் ஒருங்கே வளர்ந்து பின்னிப் பிணைந்து நிற்பதும், அவற்றினடியில் விநாயகர் வீற்றிருந்து அருளாட்சி புரிவதும், அருகில் நாக தேவதைகள் கல்லுருவில் அமர்ந்து காட்சித் தருவதும் இறைவழிபாட்டிற்கு வரும் அன்பர்கள் மனதைக் கவரக் கூடியன.



திருப்பணி
நடைபெற்று வ
கோயில் முகப்

'ஊர்கூடித் தேரிழுத்தல்' என்பது போல் ஸ்ரீமந் நாராயணனின் திருவருளுக்குப் பாத்திரமாகும் வகையில் தெய்வத் திருப்பணியில் ஈடுபட்டிருக்கும் இறையன்பர்களோடு ஆன்மிகப் பற்றுள்ள அன்பர்களும் இணைதல் – நாடு நலம் பெறவும் நல்லறம் சிறப்பதற்குமான அருஞ்செயலாக அமையும் என்பதில் ஐயமில்லை. ●

# ராக்ஃபெல்லருக்கு வழங்கிய அறிவுரை 5

அப்போது சுவாமி விவேகானந்தர், அமெரிக்காவில் சிகாகோ மாநகரத்தில் தங்கியிருந்தார். அங்கு அவரை ராக்ஃபெல்லர் என்பவர் சந்தித்தார்.

ராக்ஃபெல்லர், பிற்காலத்தில் உலகில் புகழ்பெற்ற பெரிய பணக்காரர்களில் ஒருவராக விளங்கினார். விவேகானந்தரைச் சந்தித்தபோது, ராக்ஃபெல்லர் அவ்வளவாகப் பிரபலம் ஆகவில்லை.

ராக்ஃபெல்லரின் நண்பர்கள் பலர், விவேகானந்தரைப் பற்றி அவ்வப்போது ராக்ஃபெல்லரிடம் கூறியிருந்தார்கள். எனவே விவேகானந்தரைப் பற்றி ராக்ஃபெல்லர் நிறையவே கேள்விப்பட்டிருந்தார். என்றாலும் ஏனோ அவர், விவேகானந்தரைச் சந்திப்பதற்குத் தயங்கினார்.


சுவாமி விவேகானந்தர்

விவேகானந்தர் அமெரிக்காவில் பல இடங்களுக்குச் சென்று, சொற்பொழிவுகள் செய்துகொண்டிருந்தார்.

அவர் ஒருமுறை ராக்ஃபெல்லரின் நண்பர் ஒருவர் வீட்டில் தங்கியிருந்தார். அப்போது ஒருநாள் திடீரென்று, 'விவேகானந்தரைச் சந்திக்க வேண்டும்!' என்ற தீவிர எண்ணம் ராக்ஃபெல்லருக்கு ஏற்பட்டது. அந்த வேகத்தில் அவர் விவேகானந்தர் தங்கியிருந்த வீட்டிற்குச் சென்றார்.

அங்கு அவருக்காக வீட்டின் கதவை வேலைக்காரன் திறந்தான். அந்த வேலைக்காரனைப் பிடித்துத் தள்ளி விட்டு, ராக்ஃபெல்லர் முன்அனுமதி கூடப் பெறாமல் விவேகானந்தர் இருந்த அறைக்குள் நுழைந்தார்.

விவேகானந்தர் அப்போது அமர்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தார்.

அவ்வளவு வேகமாக ராக்ஃபெல்லர் சென்றும் விவேகானந்தர் தன் முகத்தைத் தூக்கி, 'வந்தது யார்?' என்று பார்க்கவில்லை. இவ்விதம் சிறிது நேரம் கழிந்தது.

தலை கவிழ்ந்திருந்த நிலையில் விவேகானந்தர் – தலை நிமிர்ந்துகூடப் பார்க்காமல், திடீரென்று ராக்ஃபெல்லர் மட்டுமே அறிந்திருந்த அவருடைய கடந்த கால நிகழ்ச்சிகளைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார்.

இறுதியில் அவர், "உங்களிடம் இருக்கும் பணம் உண்மையில் உங்களுடையது இல்லை. உலகிற்கு நன்மை செய்வதற்காக இறைவன் உங்களிடம் அந்தப் பணத்தைக் கொடுத்து வைத்திருக்கிறார். அதனால் உலகிற்கு நன்மை செய்வதற்கு உரிய ஒரு வாய்ப்பை இறைவன் உங்களுக்குக் கொடுத்திருக்கிறார், அவ்வளவுதான்! எனவே நீங்கள் உங்களிடம் இருக்கும் பணத்தை உலக நன்மைக்காகச் செலவு செய்யுங்கள்" என்று கூறினார்.

இவ்விதம் விவேகானந்தர் கூறியது ராக்ஃபெல்லருக்குப் பிடிக்கவில்லை. 'நான் என்ன செய்ய வேண்டும் என்பதை இன்னொருவர் எனக்குச் சொல்வதா?' என்று அவருக்குத் தோன்றியது. எனவே அவர், "நன்றி, வணக்கம்,



சென்று வருகிறேன்” என்றுகூட எதுவும் சொல்லாமல், வேகமாக அந்த அறை யைவிட்டு வெளியேறினார்.

ஆனால் விவேகானந்தரின் ஆன்மிக சக்தி ராக்ஃபெல்லரிடமும் வேலை செய்தது.

ஒரு வாரம் கழிந்திருக்கும். ராக் ஃபெல்லர், ‘பொதுத்தொண்டு நிறு வனம் ஒன்றுக்குப் பெரிய ஒரு தொகையை நன்கொடை அளிக்க வேண்டும்’ என்று முடிவு செய்தார்.

எனவே அவர் அதற்கானத் திட்டங் களை விரிவாக ஒரு காகிதத்தில் எழுதி, அதை எடுத்துக்கொண்டு விவே கானந்தரைச் சந்திப்பதற்குச் சென்றார். முன்பு போலவே அதே வேகத்தில் அவர் மீண்டும் முன்அனுமதியின்றி, விவேகானந்தர் இருந்த அறைக்குள் நுழைந்தார்.



அன்றைய தினமும் விவேகானந்தர் ஏதோ படித்துக் கொண்டிருந்தார். ராக் ஃபெல்லர், தாம் கொண்டு சென்றிருந்த காகிதத்தை விவேகானந்தர் முன்பு வேக மாக வீசி, “இதோ, இதைப் படித்துப் பாருங்கள்! இப்போது உங்களுக்குத் திருப்திதானே! நீங்கள் இப்போது எனக்கு நன்றி சொல்ல வேண் டும்!” என்று கூறினார்.

விவேகானந் தர் அசையவும் இல்லை; ராக் ஃபெல்லரைத் தலைநிமிர்ந்து பார்க் கவும் இல்லை; அவர் அமைதியாக ராக்ஃபெல்லர் காகிதத்தில் எழுதியிருந்த அனைத்தையும் படித்தார். படித்து முடித்ததும் அவர், “நான் உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டியதில்லை. நீங்கள்தாம் எனக்கு நன்றி சொல்ல வேண்டும்” என்றார்.

அதுதான் ராக்ஃபெல்லர் தமது வாழ்க்கையில் அளித்த முதல் பெரிய நன்கொடை ஆகும்.

ராக்ஃபெல்லர் தன்னிடமிருந்த செல்வத்தை மக்களுக்குப் பயன்படும் வகையில், நல்ல விதத்தில் செலவு செய்வதற்கு விவேகானந்தர் வழிகாட்டி னார். எனவே அவர்தாம் விவேகானந் தருக்கு, “நன்றி” சொல்ல வேண்டிய நிலையில் இருந்தார்.

●

கட்டுரை

# இன்றைய தமிழில் எதிர்பாராத பிழைகள்

**நா**ம் மனதில் நினைப்பதைப் பிறர் சரியாகப் புரிந்து கொள்ளும் வகையில் கருத்தை வெளிப்படுத்துவதே மொழி எனப்படுகிறது. சொல்வதில் தவறு இருந்தால், கேட்பவன் அதை முழுமை யாகப் புரிந்துகொள்ள முடியாது.

எந்தத் தொழில் செய்பவனுக்கும் அவன் ஆளும் கருவி செப்பமாக இருக்க வேண்டும். ஆளும் கருவி பழுது பட்டிருந்தால், செய்யும் வேலையும் சரியாக இருக்காது.

சீனத்து அறிஞர் கன்பூசியசைப் பார்க்கச் சென்ற இளைஞன் ஒருவன், "ஐயா, தாங்கள் சீன நாட்டின் அரச னாக அமர்த்தப்பட்டால், முதன் முத லில் எந்தச் சீர்திருத்தத்தைச் செய்வீர் கள்" என்று கேட்டான். "நான் முதலில் சீன மொழியைச் செப்பம் செய்வேன்" என்று கன்பூசியசு கூறினார். ஏன் என்று கேட்டபோது, "சொல்வது சீராக இருந் தால்தான், செய்வது சீராக இருக்கும்" என்று கன்பூசியசு விளக்கம் சொன்னார்.

நாம் தமிழைப் பேசினாலும், எழுதி னாலும் கொச்சைத் தமிழைக் கூடப் பொறுத்துக் கொள்ளலாம். ஆனால் மரபு மீறிய தவறுகளைப் பொறுத்துக் கொள்ள முடியாது. பேச்சில் தவறு செய்யாதவர்களும் எழுதும்போது தவறு செய்கிறார்கள்.

பெங்களூரு, மைசூரு என்று எழுது வது கன்னட மொழியின் இயல்பு. அது தமிழுக்குப் பொருந்தாது. பெங்களூருவில் விலையேற்றம், மைசூருவில் பெருமழை என்றெல்லாம் எழுதக் கூடாது. நாட்டுப்புறத் தமிழர்கூட பெங்களூரில், மைசூரில் என்றுதான் பேசுகிறார்கள். அதுதான் தமிழ் மரபு.

பேரா. இரா. மதிவாணன்

எழுதும்போது தமிழில் எதிர்பா ராது நேர்ந்துவிட்ட 'பெங்களூருவில், மைசூருவில்' என்னும் பிழைகள் 'பெங் களூரில் மைசூரில்' என்றே திருத்தப்பட வேண்டும். 'சொந்த ஊரில் திருவிழா' என்பதை 'சொந்த ஊருவில் திருவிழா' என்று யாரும் எழுதமாட்டார்கள், பேச வும் மாட்டார்கள்.

'பொருள்கள்' என்பதை 'பொருட் கள்' என்று எழுதக் கூடாது. 'நாள்கள்' என்பதை 'நாட்கள்' என்று எழுதக் கூடாது. பொருட்கள் என்று எழுதி னால், பொருளிலிருந்து எடுக்கப்பட்ட கள் என்று பொருள்பட்டு விடும். கள் என்பதைப் பன்மை ஈறாகச் சேர்க்கும் போது வல்லெழுத்து இடையில் சேர்ப் பது கூடாது.

பலரும் 'வாழ்த்துக்கள், எழுத்துக் கள்' என்று எழுதுகின்றனர். 'வாழ்த்து கள், எழுத்துகள்' என இடையில் 'க்' மெய்யெழுத்து இல்லாமல்தான் எழுத வேண்டும். 'தென்னைகள் தென்னைக் கள்' என்னும் சொற்களைப் பாருங்கள். இடையில் 'க்' சேர்வது இரண்டு சொற் களுக்கு நடுவில்தான். தென்னையும் குடிக்கும் கள்ளும் வெவ்வேறு சொற் கள். தென்னைகள் என்பது ஒரே சொல். கள் என்பது பன்மை குறித்த ஈறு. எனவே வாழ்த்துகள், எழுத்துகள் என்பனவற்றில் 'க்' மிகுவதில்லை.

மகன்கள், மகள்கள் என்று எழுது வது சரியாகாது. ஆடுகள், மாடுகள் என் பனவற்றில் 'கள்' பன்மை ஈறு சேர்க் கிறோம். எனவே மைந்தர், மகளிர் என்று எழுதுவதே நல்லது. தாய்மார் என்று எழுதுகிறோம். தாய்கள் என்று எழுது வதில்லை.


கன்ஃபூசியஸ்

பள்ளிகளும் கல்லூரிகளும் திறக்கும் போது மாணவர் சேர்க்கை நடைபெறுகிறது என்று எழுதுகிறார்கள். 'சேர்க்கை' என்பது இருபொருள்படக் கூடிய சொல். அதைத் தவிர்த்து, மாணவர் 'சேர்ப்பு' நடைபெறுகிறது என்றுதான் எழுதவேண்டும். 'சேர்க்கைப் பதிவேடு' என்பதை 'சேர்ப்புப் பதிவேடு' என்றுதான் குறிக்க வேண்டும். தொடக்கப்பள்ளி முதலே ஏற்படும் இத்தகைய பிழைகளைத் தொடக்கத்திலேயே நீக்க வேண்டும்.


தேவநேயப் பாவாணர்

புதிதாக நகைக்கடை தொடங்குபவர் 'தி சென்னை கோல்டு' என்று பெயரிடுவது தவறு. ஆங்கிலத்தில் தி போட்டு The Chennai Gold என எழுதும் மரபைத் தமிழில் புகுத்தக் கூடாது. 'தி சிலப்பதிகாரம்', 'தி மணிமேகலை' என யாரும் எழுத மாட்டார்கள். இத்தகைய எதிர்பாராத பிழைகள் தாய்மொழியின் தனித் தன்மையைக் கெடுத்துவிடும்.


டாக்டர் மு.வ.

ஆதலால் தாய்மொழிக்கு நாம் நன்மை செய்ய மறந்தாலும் தீமை செய்யாமல் இருக்கலாம் என்பதே தமிழுள்ளங்களின் கருத்து வெளிப்பாடாக உள்ளது.

'மரபுநிலை திரியின் பிறிது பிறிதாகும்' என்று தொல்காப்பியர் இட்ட கட்டளையை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

பேராசிரியர் மு.வ. அவர்கள் 'கள்' பெற்ற பெருவாழ்வு என்னும் கட்டுரையில், 'கள்' ஈறு தமிழ் வினைமுற்றுகளில் தேவையில்லாமல் சேர்ந்ததால், 'வந்தார்கள் – வந்தாங்க; 'சொன்னார்கள் – சொன்னாங்க' எனும் புதிய தமிழ் நரை உருவாகிவிட்டது. இது 'மாடுங்க' இது 'செருப்புங்க' எனத் தேவையில்லாமல் மதிப்புச் சொல் சேர்க்கப்பட்டது. எனவே, 'வருகிறார்கள்' என்பதை 'வருகின்றனர்' என்றும், 'வந்தார்கள்' என்பதை 'வந்தனர்' என்றும் 'வருவார்கள்' என்பதை 'வருவர்' என்றும் துணிந்து மாற்ற வேண்டும். நாம் பேசும் மொழியிலும் கள் ஒழிப்புப் போராட்டம் தேவைப்படுகிறது.

இங்கிலாந்தில் நல்ல ஆங்கிலம் பேசும் பகுதிக்கு நான்கு பக்க எல்லை வகுத்திருந்தார்கள் என்று சொல்கின்றனர். பழங்கன்னடம் பேசிய மக்கள் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு அதனைத் திருந்திய கன்னடம் என்ற பொருளில் 'திருள் கன்னடம்' என்று பெயரிட்டு, அது பேசப்பட்ட பகுதிக்கு நான்கு பக்க எல்லைகளும் வகுத்திருந்தனர்.

நல்லதமிழ் தென்பாண்டி நாட்டில்தான் பேசப்பட்டது. அதனால் ஔவையார் "பாண்டிய நின் நாடுடைத்து நல்ல தமிழ்" என்று பாடினார்.

மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் தென்பாண்டித் தமிழைக் குறித்து ஒரு பொன்மொழியை மேற்கோள் காட்டிப் பேசுவார்.

கல்லாத மக்களுள் யாரேனும் தமிழைத் தவறாகப் பேசினால் திருத்துவார்கள். தவறாகப் பேசியவர் 'நீ என்ன திருத்தக் கல்லுக்குத் தெற்கிட்டுப் பிறந்தவனா?' என்று கேட்பானாம். இதிலிருந்து தமிழை மிகத் திருத்தமாகப் பேசும் பகுதி தென்பாண்டி நாட்டில் இருந்தது எனவும் அதற்கு நான்கு புறமும் திருத்தக்கல் நட்டிருந்தார்கள் எனவும் அறிய முடிகிறது என்றார் பாவாணர்.

நாமும் தமிழைத் திருத்தமாக எழுதவும் பேசவும் முயல்வது முன்னேற்றத்தின் அடையாளமாகத் திகழும். ●

# ஏஆர்சி ரிட்ரெடிங் கம்பெனி (பி) லிமிடெட்

மதிப்பிற்குரிய வாடிக்கையாளர்களின் தொடர்ந்த நல் ஆதரவினால்
பொன்விழா ஆண்டை கடந்து சேவை செய்வதில்
பெருமிதமும் மகிழ்ச்சியும் கொள்கிறோம்

மேலும் தங்களது தொடர்ந்த ஆதரவினை எப்பொழுதும் போல் கொடுத்து
ஆதரிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

உழைப்பு! தரம்! சிக்கனம்! இவற்றின் சின்னம்




டிரக்குகள், இலகுரக வாகனங்கள் மற்றும் கார் ஆகியவற்றின் டயர்களை
MRF ப்ரீக்யூர்ட் முறையில் ரிட்ரெடிங் செய்வதில் நாங்கள் வெற்றிநடை
போட்டு முன்னணியில் திகழ்கின்றோம்.

மேலும் கன்வென்சனல் முறையில் டிரேக்டர் உட்பட எல்ல வகையான டயர்களையும்
ரிட்ரெடிங் செய்வதற்கும், ரேடியல் டயர்களை ரிட்ரெடிங் செய்வதற்கும் தேவையான
அனைத்துச் சிறப்பு திறனையும் எங்களது நிறுவனங்கள் பெற்றுள்ளன.

பதிவு அலுவலகம் :

**ஏஆர்சி ரிட்ரெடிங் கம்பெனி (பி) லிமிடெட்**

(ஏபிடி – சக்தி குரூப்)
64, டாக்டர் நஞ்சப்பா சாலை, கோயமுத்தூர் – 18
தொலைபேசி : 0422-2234500, 2234600

கிளை அலுவலகம் :
10-ஏ/1, திருவனந்தபுரம் ஹைரோடு, திருநெல்வேலி – 627 002
போன் : 2502403



ஐ. கிருத்திகா

சிறுகதை

# மதம் துறந்த மனம்

**சா**ரு வந்து அந்த விஷயத்தைச் சொன்னதிலிருந்து ராஜிக்கு இருப்புக் கொள்ளவில்லை. மனம் அதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்க, ஈடுபாடின்றிச் சமைத்து வைத்தாள்.

"சாம்பார்ல உப்பு தூக்கலா இருக்கு. பொரியல்ல காய் வேகவேயில்ல. இன்னிக்கு என்னாச்சு ஒனக்கு...?"

மதியம் சாப்பிட வந்த கேசவன் கேட்டான். அவன் வேலை பார்க்கும் வங்கி, வீட்டுக்கு வெகு அருகாமையிலிருந்ததில் மதிய உணவுக்கு வீட்டுக்கு வரமுடிந்தது. ராஜி எப்போதும் ருசியாகச் சமைப்பவள்தான். இன்று அந்த எண்ணம் மனத்தை அலைக்கழித்ததில் சமையலில் கவனம் விட்டுப்போயிருந்தது.

"என்னாச்சு ராஜி... எதையோ யோசிச்சிக்கிட்டிருக்கே...?"

கேசவன் மறுபடியும் கேட்க, "ஒ... ஒண்ணுமில்லீங்க. நீங்க சாப்பிடுங்க..." என்று சமாளித்துவிட்டவளுக்கு விஷயத்தை அவனிடம் சொல்லிவிட ஆசைதான். ஆனால் அவ்வளவு சிறிய இடைவெளியில் அதைச் சொல்லி அவனிடமிருந்து எந்தப் பதிலையும் எதிர்பார்க்க முடியாது. ஒன்று உம் கொட்டுவான் அல்லது இதில் சொல்வதற்கு என்ன இருக்கிறது என்பதுபோல் இருந்துவிடுவான்.

"அவனவனுக்கு ஆயிரத்தெட்டுப் பிரச்சனை. வீட்டுக்குள்ள உட்கார்ந்திருக்க ஒனக்கு இது பெரிய பிரச்சனையா தெரியுது" என்று கூடச் சொல்லலாம். அதனால் ராஜி பேசாமல் சாப்பிட்டாள்.



**"இது என்னங்க அநியாயம். நாம சைவக்காரங்கன்னு பாத்திமாவுக்கு நல்லாத் தெரியும். அப்படியிருந்தும் அந்த எண்ணம் அவளுக்கு எப்படி வந்துச்சு?"**

சாரு பள்ளிவிட்டு வந்ததுமே கேட்டாள்.

"நீ என்னம்மா செய்யப்போற...?"

பத்தாவது படிக்கும் பெண். ஓரளவு பக்குவப்பட்டவள். அம்மாவின் மனது புரிந்து கேட்டாள்.

"தெரியலைடி. என்ன சொல்லிச் சமாளிக்கிறதுன்னு ஒன்னும் புரியல. சரி, நீ போயி கை கால் அலம்பிட்டு வா. நான் சாப்பாடு எடுத்து வைக்கிறேன்."

ராஜி அகல, சாரு கொல்லைக்கு வந்தாள். காம்பவுண்ட் சுவரின்மேல் காக்கைக்காக வைக்கப்பட்டிருந்த

சாதத்தின் மிச்ச பருக்கைகள் வெயிலில் காய்ந்து நொறுங்கிவிடும் நிலையிலிருந்தது. தினமும் குக்கர் திறந்ததும் பிடி அன்னம் சிறிது எள் தூவி, துளி நெய் விட்டுக் கொண்டுவந்து சுவரில் வைத்து கா....கா... என்று அழைத்துக் காத்திருப்பது ராஜியின் வழக்கம்.

"காக்கைகள் நம்மளோட மூதாதையர்கள். அவங்களோட பசியாத்தறது இந்துசமய தர்மம்" என்பாள் ராஜி.

சாரு சாப்பிட்டு முடித்துக் கை கழுவியபோது வெளியே பாத்திமாவின் குரல் கேட்டது.

"ராஜிக்கா..."

ராஜி திடுமென அதிர்ந்தாள். அவள் வந்து கேட்கும்பட்சத்தில் என்ன பதில் சொல்வதென்று புரியவில்லை. பாத்திமா பக்கத்துவீட்டுக்குக் குடிவந்து பத்து மாதங்களாகிறது. அவளுடைய கணவர் காய்கறிச் சந்தையில் வேலை பார்க்கிறார். சொற்ப சம்பளம்தான். அவருடைய வருவாயில் செலவுகளை நேராக்க முடியாமல் வீட்டிலிருந்தபடியே தையல் தைத்துக் கொடுத்து பாத்திமா குடும்ப வண்டியை ஓட்டினாள். ஒரே மகன் அப்சல், ஐந்தாவது படிக்கிறான். எப்போதாவது பாடத்தில் சந்தேகம் கேட்டு வருவான்.

"இந்தக் கணக்கு எனக்கு வெளங்கவேயில்லக்கா. நீங்க சொல்லித் தாரீங்களா...?" என்று தயக்கத்தோடு சாருவிடம் கேட்பான். சாரு பொறுமையாகச் சொல்லித் தருவாள். பாத்திமாவும் அவ்வப்போது வருவாள்.

"பச்சரிசி சாப்புட்டா வாயுத் தொந்தரவு வருமாக்கா...?" என்றோ, "வயிறு உப்புசமா இருக்குக்கா. ஏதாவது கைவைத்தியம் தெரிஞ்சா சொல்லுங்களேன்" என்றோ கேட்பாள்.

ராஜியும் தனக்குத் தெரிந்ததைச் சொல்லுவாள். அதற்குமேல் பழக்கம் வைத்துக் கொண்டதில்லை. ஏதோ ஒன்று ராஜியின் மனத்தில் ஒட்டிக் கொண்டு சற்று தள்ளியே இருக்க வைத்திருந்தது.

'இன்னிக்குப் பணியாரம் சுட்டேன். ரொம்ப நல்லா இருந்துச்சுக்கா..." என்று பாத்திமா சொல்லும்போது, எங்கே கொண்டுவந்து தந்துவிடுவாளோ என்று ராஜிக்குப் பயமாக இருக்கும். அதுகூடக் காரணமாயிருக்கலாம். ராஜி சுத்த சைவம். அமாவாசை, கார்த்திகை என்றால் பூண்டு, வெங்காயம் சேர்த்துச் சமைக்கமாட்டாள். கேசவன் கிண்டலடிப்பான்.

"வெங்காயம், பூண்டெல்லாம் அசைவத்துல அடக்கமா... நான் கேள்விப்பட்டதேயில்ல."

"எல்லாம் ஒங்கம்மாவும், எங்கம்மாவும் சொல்லிக் கொடுத்ததுதான். தவிரவும் நாம சைவம் சாப்பிடறவங்க. நமக்குன்னு சில பழக்கவழக்கங்கள் இருக்கு. அதைக் கடைசிவரைக்கும் கைவிடக் கூடாது" என்று ராஜி அவன் வாயை அடைத்துவிடுவாள்.

பாத்திமா வாசற்படியில் அமர்ந்தாள்.

"இன்னிக்குத் தைக்கிறதுக்குத் துணி எதுவுமில்லையா...? ஆசுவாசமா வந்து உட்கார்ந்திருக்கே..." ராஜி கேட்க, அவள் தலையாட்டினாள்.

"ஒரு கட்டைப்பை நெறைய துணி இருக்குக்கா. காலையிலேருந்து தைச்சு, தைச்சு இடுப்பு நோவு கண்டுடுச்சு. அதான் சித்த இளைப்பாறிக்கலாம்னு வந்தேன்."

அவள் அடுத்து என்ன சொல்லப் போகிறாள் என்று ராஜி உன்னிப்பாகக் கவனித்தாள்.

"விடிஞ்சா ரம்ஜான். அப்சலுக்கு இன்னும் புதுத்துணி எடுக்கல. சாயந்தரம் கடைத்தெருவுக்குப் போகலாம்னு எங்க வூட்டுக்காரரு சொல்லியிருக்காரு" என்றவள்,

"நான் எப்பவும் இருக்குற புதுசுல ஒன்ன உடுத்திக்குவேன். அவருக்கும் பெரிசா ஆசை கெடையாது. ஆசை இருந்தாலும் அத நெறைவேத்திக்க சக்தி இருக்கணுமில்ல. ஆசை இருக்கு தாசில் பண்ண, அதிர்ஷ்டமிருக்கு கழுதை மேய்க்கன்னு எங்கம்மா அடிக்கடி சொல்லும். அந்தக் கதைதான்"

பாத்திமா சொல்லிவிட்டு இடுப்பைப் பிடித்தபடி மெல்ல எழுந்தாள். "போறேன்க்கா. வூட்டுல போட்டது, போட்டபடி கெடக்கு."

சொல்லியபடியே போனாள்.



அவள் அதைப் பற்றிக் கேட்கவே யில்லையே என்றிருந்தது ராஜிக்கு.

ராஜி மாலை சுவாமி விளக்கேற்றி உலர்திராட்சை வைத்து நைவேத்தியம் செய்தாள்.

"ஓம் ஸ்ரீயோகீச்வர யாக்ஞவல்க்ய குருவே நம:" மூன்றுமுறை சொன்னாள்.

அனுமனுக்குப் பிடித்த மந்திரம் அது. அதைத் தினமும் ஒருமுறை சொன்னால் நினைத்த காரியம் நிறைவேறும் என்று அனுமன் இந்திரனிடம் சொல்லியிருக்கிறார். சாருவுக்கும் அந்த மந்திரம் தெரியும். பள்ளிக்குப் போகும் முன் சொல்லிவிட்டுத்தான் போவாள். ராஜியின் பயிற்சி அது.

"நாளைக்கு ரம்ஜான். பாத்திமா வீட்டுல அசைவ பிரியாணி செய்யப் போறாங்க. அதுல பாதிய கொண்டு வந்து நம்ம வீட்டு பிரிட்ஜில வச்சிருந்து நாளன்னிக்கு வாங்கிக்கலாம்ங்கற எண்ணம் அவங்களுக்கு இருக்கு. பாத்திமாவும் அவ வீட்டுக்காரரும் பேசிக்கிட்டிருந்ததை கொடியில காய்ஞ்ச துணியை எடுக்கப்போன சாரு கேட்டுட்டு வந்து சொன்னா..."

"ஓஹோ... புரிஞ்சு போச்சு" என்ற கேசவன், "நீ என்ன செய்யப்போற...?" என்றான் சட்டென.

"இது என்னங்க அநியாயம். நாம சைவக்காரங்கன்னு பாத்திமாவுக்கு நல்லாத் தெரியும். அப்படியிருந்தும் அந்த எண்ணம் அவளுக்கு எப்படி வந்துச்சு?" என்ற ராஜியின் குரலில் கோபம் கொப்பளித்தது.

"உனக்குப் பிடிக்கலேன்னா வச்சிக்க முடியாதுன்னு சொல்லிடு."

"அப்படி பட்டுன்னு பேசிப் பழக்கமில்லையே. அதனாலதான் காலையிலேருந்து தவிச்சிகிட்டிருக்கேன்."

படித்துக் கொண்டிருந்த சாரு சட்டெனப் பிரகாசமானாள்.

"நாளைக்கு சனிக்கிழமை. எனக்கு ஸ்கூல் லீவுதான். பேசாம நாம கௌம்பி அத்தை வீட்டுக்குப் போயிட்டு நாளன்னிக்கு வருவோம். பிரச்சனை சால்வாயிடும்."

"அட, இதப்பார்றா.... இப்படியொரு யோசனை யாருக்காவது தோணுமா..."

கேசவன் சொல்லிவிட்டு அலைபேசி ஒலிக்க எழுந்து போனான்.

ராஜிக்கும் அது நல்ல யோசனையாகத்தான் பட்டது.

"நல்ல ஐடியா கொடுத்தேடி. ராமாயணம் முடிஞ்சதும் துணி எடுத்து வச்சிடறேன்."

ராஜி குதூகலத்துடன் வந்து தொலைக்காட்சியை உயிர்ப்பித்தாள்.

அன்று இராமனும், குகனும் சந்திக்கும் காட்சி. இராமன் வந்திருக்கும் செய்தியறிந்து அவருக்குக் கொடுக்க தேனும், மீனும் எடுத்துச் செல்கிறான் வேட்டுவ குலத் தலைவன் குகன். 'அன்பின் முதிர்வினால் நீ கொண்டு வந்திருக்கும் இப்பொருள்கள் அமுதத் தைவிடச் சிறந்தது, நாங்கள் விரும்பி உண்டதற்குச் சமமானது' என்கிறான் இராமன். ராஜிக்கு சுருக்கென்றிருந்தது. அன்றொருநாள் உடம்பு முடியாமல் படுத்துக் கிடந்தபோது பாத்திமா தானாகவே வந்து வாசல் தெளித்து, கோலமிட்டது ஞாபகத்துக்கு வந்தது.

"கோலம் போட்டுப் பழக்கமில்ல. அதனால தெரிஞ்சத ரெண்டு இழை இழுத்துவிட்டிருக்கேன். நாளைக்கும் நானே வந்து வாசல் தெளிக்கிறேன்க்கா..." என்று கூறிவிட்டுப் போனாள்.

ராஜி மெல்ல எழுந்து தொலைக்காட்சியை நிறுத்திவிட்டு வந்து படுத்துக் கொண்டாள்.

**ம**றுநாள் காலை...

"ஊருக்குப் போறோமா, இல்லையாம்மா...?"

சாரு சந்தேகமாகக் கேட்க, ராஜி இல்லையெனத் தலையசைத்தாள்.

"முடிவை மாத்திகிட்டாச்சா...?" கேசவன் எதிரே வந்து கேட்டான்.

"ஆமா, மாத்திகிட்டேன்" என்றவள் இயல்பாக வேலை பார்க்க ஆரம்பித்தாள். அப்சல் ஓடிவந்து புது டிரஸ்ஸைக் காண்பித்தான். "பெரிம்மா, புது டிரஸ் நல்லாயிருக்கா...?"

"ஜோரா இருக்குடா... எங்க வாங்கினீங்க...?"

அவன் கடைப் பெயரைச் சொல்லிவிட்டு, "எழுநூறு ரூபா பெரிம்மா..." என்றான் கண்களையும், கைகளையும் விரித்து.

"இந்த டிரஸ்ல நீ சூப்பரா இருக்கடா..." என்று சாரு அவன் தோள் தட்டிக் கூற, அவனுக்கு ஏக பெருமிதம்.

சரியாக இரண்டு மணிக்குச் சாப்பாடு முடிந்து சற்று கண்ணசைந்த வேளையில் பாத்திமா கூப்பிட்டாள். கையில் ஒரு சம்படம் இருந்தது.

"தூங்கிட்டிருந்தீங்களாக்கா...?" மெதுவாய், தயங்கியபடியே கேட்டாள்.

"அதனாலென்ன, பரவாயில்ல. ரம்ஜான் நல்லபடியா போச்சா...?"

"போச்சுக்கா. மசூதிக்குப் போயி தொழுதுட்டு வந்துட்டோம். அப்சல் அப்பாவும் கௌம்பி கடைக்குப் போயிட்டாரு."

"இன்னிக்குக் கடை உண்டா...?"

"உண்டுக்கா. கடை மொதலாளி இந்துதான... அவரு பெரியமனசு பண்ணி அரை நாளு லீவு குடுத்தாரு. சரியா ஒரு மணிக்குச் சாப்பிட்டு முடிச்சுக் கழுவுன கை காயறதுக்குள்ள மனுசன் பறந்துட்டாரு..." என்றவள்,

"ஒங்ககிட்ட ஒரு உதவிக்கா..." என்றாள் மெல்ல.

"இந்தப் பிரியாணி டப்பாவ பிரிட்ஜில வச்சிக்கணுமா....?" ராஜி பட்டென்று கேட்க, பாத்திமா மலைத்துப் போனாள்.

"கொடு வச்சிக்கிறேன்."

ராஜி வாங்கிவந்து பிரிட்ஜில் வைத்தாள். சாருவும், கேசவனும் ஆச்சர்யத்தோடு பார்த்தனர்.

ராஜி அவர்களிடம் சொன்னாள்.

"மதத்தைத் தாண்டி மனசை நேசிக்கக் கத்துக்கணும்னு முடிவு பண்ணிட்டேன்." ●

# ஓம் சக்தி

ஆருயிர்களுக்கு எல்லாம் – நான்
அன்புசெயல் வேண்டும்.
– வள்ளலார்

மலர் : 37 மே 2019 இதழ் : 4

நிறுவனர் : **நா. மகாலிங்கம்**

ஆசிரியர் & வெளியிடுபவர் : **ம. மாணிக்கம்**

*Editor & Publisher* : **M. MANICKAM**

அச்சிடுபவர் : **து. ராஜ்குமார்**

*Printer* : **T. RAJKUMAR,**

**Rukmani Offset Press**

ருக்மணி ஆப்செட் பிரஸ்,
E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
கோவை – 641 021.

இணையாசிரியர் : **பெ. சிதம்பரநாதன்**



கதை, கவிதைகளில் வரும் பெயர்களும்,
சம்பவங்களும் கற்பனையே.

படைப்புகளைச் சுருக்கவோ, திருத்தி அமைக்கவோ
ஆசிரியருக்கு உரிமை உண்டு.

'ஓம் சக்தி'யில் பிரசுரமாகும் படைப்புகளின் கருத்துகள்
அவற்றின் எழுத்தாளர்களுக்கு உரியவையே தவிர,
பத்திரிகை அவற்றிற்குப் பொறுப்பேற்காது.



**தனிப் பிரதி ரூ.15/-**
**ஆண்டு சந்தா ரூ. 265/-**
**(தீபாவளி மலர் உட்பட)**
**ஆயுள் சந்தா ரூ. 2000/-**
(10 ஆண்டுகள்)

சந்தா தொகையை "SAKTHI SUGARS LTD. A/c OMSAKTHI" என்ற பெயரில் D.D.–யாகவோ அல்லது மணியார்டர் மூலமாகவோ அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், ஓம் சக்தி**
**69–ஏ, ஆரோக்கியசாமி சாலை (மேற்கு),**
**ஆர்.எஸ்.புரம், கோவை – 641 002**
**போன் : 0422–4322471, 0422–4322423**
வெளியிட்டோர் : **சக்தி சுகர்ஸ் லிமிடெட்.**

E-mail : omsakthieditorial@gmail.com




**சமையல்**

# முருங்கைக்கீரைக் கொழுக்கட்டை

**தேவையானப் பொருள்கள் :** வரகரிசி : 2 கப், ஆய்ந்த முருங்கைக்கீரை : 2 கப், பச்சை மிளகாய் : 2 கப், இஞ்சி : சிறு துண்டு, தேங்காய்த் துருவல் : 1 கப், உப்பு தேவைக்கேற்ப.

**தாளிக்க :** கடுகு : 1/4 டீஸ்பூன், உளுத்தம் பருப்பு : 1 டீஸ்பூன், காய்ந்த மிளகாய் : 1, பெருங்காயத் தூள் : 1/4 டீஸ்பூன், தேங்காய் எண்ணெய் : 1 டீஸ்பூன்.

**செய்முறை :**

1. வரகரிசியைச் சிறிய ரவையாக உடைத்துக் கொள்ளவும்.
2. பச்சை மிளகாய், இஞ்சி மற்றும் தேங்காய்த் துருவலை அரைத்துக் கொள்ளவும்.
3. வாணலியில் எண்ணெய் விட்டு கடுகு, உளுத்தம் பருப்பு, தாளித்து அதில் கிள்ளிய காய்ந்த மிளகாய், பெருங்காயத் தூளைச் சேர்க்கவும்.
4. பின் அரைத்து வைத்துள்ள விழுதைப் போட்டுக் கிளறி உப்பு, முருங்கைக் கீரையைச் சேர்க்கவும்.
5. அதன் பின்னர் வரகரிசி ரவை வேகுவதற்குத் தேவையானத் தண்ணீர் விட்டுக் கொதிக்க விடவும். ஒரு கொதி வந்ததும், வரகரிசி ரவையைச் சேர்த்து வேக விடவும்.
6. வேக வைத்த கலவை சிறிது ஆறியதும் அதனைக் கொழுக்கட்டைகளாகப் பிடித்து, ஆவியில் சிறிது நேரம் வேக வைத்து எடுக்கவும்.

சுவையான, சத்தான, ஆரோக்கியமான 'முருங்கைக்கீரைக் கொழுக்கட்டை' தயார்.

– **பி.கே. பிரேமிகா,** சென்னை.

கட்டுரை

# சித்ரா பௌர்ணமி



**சி**த்திரை மாதத்தில் வரும் பௌர்ணமி, "சித்ரா பௌர்ணமி' என்று அழைக்கப்படுகிறது. இந்த நாளில் வானம் தெளிவாகக் காணப்படும். இந்த நாளில் சந்திரன் முழு வலிமை பெற்றுத் தன் முழுக் கிரணத்தையும் பூமிக்கு அளிக்கிறான். இளவேனில் காலத்தில் கொண்டாடப்படும் விழா இது!

**சித்திர குப்தர் :** இந்த நாளைச் சித்திரகுப்தன் பிறந்த நாள் என்றும், திருமண நாள் என்றும் இரு விதமாகக் கூறுவது வழக்கம்.

மக்களின் பாவ புண்ணியங்களைக் கணக்கெடுத்து, எமதர்மனிடம் கொடுக்கும் பணியைச் செய்பவர் சித்திர குப்தன் என்றும், நமது பாவ புண்ணியங்களுக்கு ஏற்பப் பலன்களை எமதர்மன் வழங்குகிறார் என்றும் புராணங்கள் தெரிவிக்கின்றன.

நாம் செய்யும் குற்றங்களைச் சித்திரம் போல் ரகசியமாகத் தம் மனத்தில் நிறுத்திக் கொள்வதால், இவருக்குச் "சித்திர குப்தன்" என்ற பெயர் ஏற்பட்டது.

**சித்திர குப்தர் வழிபாட்டுமுறை :** சித்திர குப்தன் உருவத்தை மாவுக் கோலத்தில் வரைந்து, அவரது கையில் ஏடும், எழுத்தாணியும் அமைத்துப் பூஜை செய்வார்கள். உப்பு, பால், மோர் சேர்க்காமல் பகலில் மட்டும் உணவு உட்கொண்டு விரதம் இருப்பார்கள். சித்திர குப்தன் புராணத்தையும் படிப்பார்கள்.

**படையல் :** சர்க்கரைப் பொங்கல் அல்லது வெண்பொங்கல் செய்து படையல் இடுவார்கள். இவற்றுடன் காய்கறி, பருப்பு, தயிர்கடையும் மத்து ஆகியவற்றையும் வைப்பார்கள்.

**கல்வெட்டுச் செய்திகள் :** சித்ரா பௌர்ணமியன்று சித்திரகுப்தன் நினைவாகச் சோழர்கள் அன்னதானம் செய்வது வழக்கம். அவர்கள் சித்ரா பௌர்ணமி விழாவையும் சிறப்பாகக் கொண்டாடி வந்தார்கள். இந்தச் செய்திகளைத் திருச்சி மலைக்கோட்டையில் உள்ள கல்வெட்டுகள் மூலம் அறிகிறோம். இவ்விழாவைச் சிறப்பாகக் கொண்டாடிய செய்திகளைத் திருச்சி நெடுங்கலாதர் கோவில் கல்வெட்டு மூலம் அறியலாம்.

காஞ்சிபுரம் சித்திர குப்தன் ஆலயத்தில் உள்ள சித்திர குப்தன் சிலையில் ஒரு கையில் ஏடும், மற்றொரு கையில் எழுத்தாணியும் காணப்படுகிறது.

**திருவுறல் :** சித்ரா பௌர்ணமியன்று நீர்நிலைகளிலும், அதன் கரைகளிலும் மக்கள் கூடுவார்கள். ஆற்றங்கரையில்



“வுறல்” தோண்டி அதற்கு “திருவுறல்” என்று பெயர்சூட்டி, அங்கே இறைவனை வலம்வரச் செய்வார்கள். மா, பலா, வாழை முதலிய சித்திரை மாதத்தில் கிடைக்கும் பழங்களை, இறைவனுக்குப் படைத்து மகிழ்வார்கள். இவ்விழா அக்காலத்தில் கடற்கரையில் நடைபெற்று வந்தது என்ற செய்தியைச் சிலப்பதிகாரத்தின் மூலம் அறியலாம்.


சித்ரகுப்தன்

**தேவேந்திரன் செய்த தீர்த்த யாத்திரை :** தேவேந்திரன் தன்னுடைய குரு தன்னுடன் இல்லாத சமயத்தில் ஏதோ தவறு செய்துவிட்டான். அதற்குப் பிராயச்சித்தமாக அவன் தீர்த்த யாத்திரை மேற்கொண்டான். பல புண்ணியத் தலங்களைத் தரிசித்த அவன் ஒரு காட்டை அடைந்தான்.

அந்தக் காட்டை அடைந்தவுடன், தனது பாவச் சுமை நீங்கியதைக் கண்டான். அங்குள்ள குளக்கரையில் ஒரு சிவலிங்கம் இருப்பதைக் கண்டான். அதனால்தான் தனது பாவச் சுமை நீங்கியது எனக் கருதி, தேவ தச்சனான விஸ்வகர்மாவை அழைத்து ஒரு கோவிலைக் கட்டச் செய்தான். அதில் அம்பிகைக்கு ஒரு தனிச் சன்னதியும் அமைத்தான்.

பின்பு, குளத்தில் பொற்றாமரையை வரவழைத்து, சிவலிங்கத்தை வழிபட்டான். இந்த நிகழ்ச்சி ஒரு சித்ரா பௌர்ணமியன்று நடந்தது. தேவேந்திரன் வழிபட்ட அந்தக் காட்டுப் பகுதியே பின்னர் மதுரை மாநகரமாயிற்றாம். சித்ரா பௌர்ணமி அன்று இந்திரன் சிவலிங்கத்தை வழிபடும் பொருட்டு மதுரைக்கு வருவதாக ஐதீகம்.



**கள்ளழகர் எதிர் சேர்வை :** சக்தியே மீனாட்சியாய் அவதரித்தத் திருத்தலம் மதுரை. சித்திரை மாதம் மதுரையில் பத்து நாள்கள் சித்திரைத் திருவிழா நடைபெறும். மீனாட்சி – சுந்தரேசுவரர் திருக்கல்யாணத்தன்று, தங்கை மீனாட்சியின் கல்யாணத்திற்குச் சீர் கொண்டு வருவார் அழகர். அவர் வைகையாற்றில் தங்கக் குதிரை வாகனத்தில் இறங்குவார். ஆனால், அதற்குள் திருமணம் முடிந்துவிட்டது என்று கேள்விப்பட்டவுடன், வைகையாற்றிலிருந்து திரும்பி விடுவார்.

## எஸ். கோவிந்தராஜன்

கள்ளழகர் ஒவ்வோர் ஆண்டும் சித்ரா பௌர்ணமியன்று வைகை ஆற்றில் இறங்கும் நிகழ்ச்சி மதுரையில் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதைக் “கள்ளழகர்” எதிர்சேர்வை” என்பார்கள்.

***சித்திரா நதி* :** திருக்குற்றால மலையில் உற்பத்தி ஆகும் அருவிக்குச் ‘சித்திரா நதி’ என்று பெயர். சித்ரா பௌர்ணமியன்று இங்கு நீராடுவது புண்ணியச் செயலாகக் கருதப்படுகிறது.

சித்ரா பௌர்ணமியன்று சித்திரகுப்தனை வழிபடும் நோக்கம், நமது செயல்களைக் கண்காணிக்கும் ஒரு சக்தி இருக்கிறது என்பதை உணர்ந்து, நாம் நல்ல செயல்களில் ஈடுபட வேண்டும் என்பதை உணர்த்துவதற்குத்தான் விரதம் மற்றும் சடங்குகள் மூலம் தேவதைகளை மகிழ்விக்கிறோம். அவை நமக்கு நன்மை புரிகின்றன. ●



*With Best Compliments from*

# A B T LIMITED

**Divisions**

**ABT** PARCEL SERVICE | **ABT** MARUTI | **ABT** WIND ENERGY | **ABT** BUS SERVICE

**ABT** PUMP | **ABT** INFO.NET | **ABT** EXPPRESS

Corporate Office : 180,Race Course Road,Coimbatore - 641 018. Phone : 0422 - 4333666 Fax : 0422-4333100

Website: www.abtlimited.com E-mail : corporate@abtlimited.com

கட்டுரை

பெ.சு. மணி



# ம.பொ.சி.–யும் வள்ளலாரும்

"ம.பொ.சி.–யும் வள்ளலாரும்" எனும் தலைப்பு, ம.பொ.சி.–யின் பார்வையில் வள்ளலார் எனும் பொருளை மட்டும் விளக்குவதாகும்.

38 வயதில் எடுத்த எழுதுகோலை 89 வயது வரையிலும் பயன்படுத்திய ம.பொ.சி.–யின் படைப் பாற்றல் பிற தமிழக அரசியல் தலைவர்களிடையே காணப்படாததாகும். அரசியல், இலக்கியம், ஆன் மிகம் எனும் முப்பரிமாணங்களில் அவர் வழங்கிய நூல்களின் எண்ணிக்கை 140–க்கும் மேற்பட்டதாகும்.


ம.பொ.சி.

தமிழ் இலக்கியங்களை இந்திய தேசியத்திற்கும் தமிழ்த் தேசியத்திற்கும் பயன்படுத்து வதைத் தலையாய குறிக் கோளாகக் கொண்டவர் ம.பொ.சி. (1906–1995).


வள்ளலார்

பிரிவினைவாத, இனவாத, வகுப்பு வாதப் பிரச்சாரங்கள் தமிழ் இலக் கியத் தொல்மரபின் அசல் தன் மையை அழித்திடாமல் பாதுகாப்ப தையும் அவர் இலக்கியக் கொள்கை யாகக் கொண்டிருந்தார்.

அவருடைய ஆளுமையை உருவாக்கியவர்களுள் வள்ளலார், பாரதியார், காந்தியடிகள் ஆகியோர் முதல் வரிசையில் முதலிடம் பெற்ற வர்கள் என்பதை அவருடைய பேச்சும் எழுத்தும் ஐயமற நிறுவியுள்ளன.

ம.பொ.சி.–யின் தமிழக ஆன்மிக ஞானிகள் பற்றிய நூல்களில் தலைசிறந்த நூல் வள்ளலார் குறித்த நூலாகும். "வள்ளலார் கண்ட ஒருமைப் பாடு" எனும் அவருடைய நூல் 1963–இல் முதற் பதிப்பாக வெளிவந்தது. இந்நூல் தவிர ம.பொ.சி.–யின் வள்ள லார் பற்றிய பிற நூல் களின் எண்ணிக்கை ஏழாகும்.

"வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு" எந்தச் சூழலில் எவ்வாறு எழுதப்பட்டது என்பதை ம.பொ.சி. பின்வருமாறு விளக்கியுள்ளார்.

"தேச சுதந்திரத்திற்கு ஏற்பட்டுள்ள அபாயத்தை நினத்து நினைத்து வேதனை யடைந்தேன். அந்த வேத னைக்குப் பரிகாரம் தேட ஆன் மீகச் சிந்தனை தேவை என்ப தையும் உணர்ந்தேன். அதன் விளைவாக "வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு" என்னும் தலைப்பில் "செங்கோல்" வார இதழில் தொடர் கட்டுரை எழுதத் தொடங்கினேன்.

வாரந்தோறும் கட்டுரை எழுதும் நாளிலே சில மணி நேரம் மௌனத்தையும் வேறு சில விரதங்களையும் கடைப்பிடித்தேன். எனது இதயத்தையே வள்ளற் பெருமானின் கோயிலாக்கினேன். நானே வியப்படையும் வண்ணம் எனது சிந்தனை சிறகடித்துப் பறந்தது. ஆம், கட்டுரை எழுதும் நாள்களிலே.

அதற்கு முன்பே பல ஆண்டுகளாக வள்ள லாரின் கவிதைகளையும், கட்டுரைகளையும் படித்த போதெல்லாம் எனக்குத் தேவைப்படும் கவிதை வரிகளிலும், கட்டுரைகளின் பகுதி களிலும் அடிக்கோடிட்டு வைத்திருந்தேன்.

அவையனைத்தையும் பயன்படுத்தி 36 கட்டுரைகள் தொடர்ந்து எழுதினேன்." ("செங்கோல்" 29.05.1988).

1962 நவம்பர் 20–இல் 'மக்கள் சீனம்' எல்லைத் தகராறு எனும் பெயரில் ஆக்ரமிப்புப் படையெடுப்பை இந்தியாவின் மீது தொடங்கிய பொழுது, ம.பொ.சி. ஆன்மீக உணர்வுகொண்டு ஆறுதல் தேட எழுதத் தொடங்கினார். 23.12.1962–இல் 'செங்கோலில்' தொடங்கிய கட்டுரைத் தொடர் 01.09.1963–இல் முடிவுற்றது.

"அரசியல் துறையிலே ஏமாற்றங்களும் எதிர்ப்புகளும் ஏற்பட்ட போதெல்லாம் – துரோகங்களைச் சந்திக்க நேர்ந்த போதெல்லாம் என் மனம் ஆறுதலடையப் பயன்பட்டது; எனக்குள்ள ஆன்மீக உணர்வுதான்" என்று ம.பொ.சி. தமது "ஆன்மீகமும் அரசியலும்" எனும் நூலின் முன்னுரையில் (1980) குறிப்பிட்டுள்ளார்.

**நூல் எழுதியதற்கான நோக்கம் :** நூலின் முன்னுரையில் நூல் எழுதியதற்கான நோக்கத்தைப் பின்வருமாறு வெளியிட்டுள்ளார் ம.பொ.சி. :

"தெய்வப்பற்று – தேசப்பற்றுகளின் அடிப்படையில் வள்ளலாரின் சீர்திருத்தக் கருத்துக்கள் நாட்டில் பரப்பப்பட வேண்டுமென்று என் உள்ளம் கருதியது. சாதிவெறி – மதவெறிகளிலிருந்து மனித சமுதாயத்தை விடுவிப்பதற்காகச் சாதித் துவேஷம் – மதத் துவேஷம் – தெய்வத் துவேஷங்களுக்குப் புறம்பான ஒரு சீர்திருத்த இயக்கம் தோன்றுவதற்கான சூழ்நிலையை உருவாக்க வேண்டுமென்றும் எண்ணினேன். அதற்கான துவக்கப் பணியாக வள்ளலாரின் பாடல்களிலுள்ள சீர்திருத்தக் கருத்துக்களை அவருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளோடு ஒப்புநோக்கி ஆராய்ந்து ஒரு நூல் எழுத வேண்டுமென்றும் முடிவு செய்தேன்."

வள்ளலாரின் சமூகச் சீர்திருத்தக் கருத்துக்களோடு, அவருடைய சமயங்கடந்த சுத்த சமரச சன்மார்க்க ஆன்மீக நெறிக் கொள்கைளையும், மரணமில்லாப் பெருவாழ்வு, ஜீவகாருண்ய ஒழுக்கம், ஆன்மநேய ஒருமைப்பாடு, முதலான தத்துவ நுட்பங்களையும் ஆய்வு செய்துள்ளார், ம.பொ.சி.

ம.பொ.சி.–யின் இந்த நூலிற்கு முன்பு பத்து நூல்கள் வள்ளலார் பற்றி வெளிவந்துள்ளன. ஆனால், ம.பொ.சி.–யின் நூலில் வள்ளலார் வாழ்க்கை வரலாறும், அவருடைய அருளுரைகளும் விமர்சனக் கண்ணோட்டத்துடன் எழுதப்பட்டுள்ளன. வள்ளலாரை ஆன்மீக ஞானியாகவும், சமுதாய ஞானியாகவும் இணைத்து முதன் முதலில் முதன்மைப்படுத்தியவர் ம.பொ.சி.–யே ஆவார்.

**சமரச சுத்த சன்மார்க்கம் :** ம.பொ.சி. பார்வையில் வள்ளலாரின் சமரச சுத்த சன்மார்க்கம் பின்வருமாறு விளக்கப் பெற்றுள்ளது.

1) "சன்மார்க்கம் என்பது சமய உலகில் வழக்கிலிருக்கும் சொல்லாயினும், வள்ளலார் தந்துள்ள 'சமரச சுத்த' என்ற அடைமொழியோடும், அவர் தரும் விளக்கங்களோடும் அது முன் எப்போதும் வழங்கப்பட்டதில்லை. ஆம், சன்மார்க்கம் என்பதனை ஒரு மாபெரும் சீர்திருத்த இயக்கத்தின் மந்திரமொழியாகச் செய்தவர் நம் வள்ளலாரேயாவார்."

2) "வள்ளலார், சன்மார்க்கிகள் தொன்று தொட்டே தோன்றி வந்துள்ளனர் என்பதை ஏற்கிறார். ஏற்று சன்மார்க்கிகளை – சமய மத சன்மார்க்கிகள் என்றும் சமய பேதங்களை வெறுக்கும் சுத்த சன்மார்க்கிகள் என்றும் இரு வகையாகப் பிரிக்கின்றார். சமயமத சன்மார்க்கிகள் இறையருளில் இரண்டறக் கலத்தல் சாத்தியமில்லையென்றும், சமய பேதங் கடந்த சுத்த சன்மார்க்கிகட்கே அது சாத்தியமென்றும் கூறுகிறார்."

3) "மத வழிப்பட்ட சன்மார்க்கிகள் பிரம்மத்தினிடத்தில் இரண்டறக் கலக்க முடியாதென்பது அடிகள் கூறியிருப்பது ஆழ்ந்த மதப்பற்றுடையவர்களின் சிந்தனைக்குரியது."

4) "சமரச சுத்த சன்மார்க்கத்தில் ஆண் – பெண் என்ற பால்வேற்றுமை வழி ஏற்றத் தாழ்வோ, இழிவுச் சிறப்போ கருதச் சிறிதும் இடமில்லை. ஆண் – பெண் சமத்துவமே சுத்த சன்மார்க்கத்தின் குறிக்கோள்."

5) "உலகியல் வாழ்க்கையில் மட்டுமின்றி, ஞான மார்க்கத்தில் ஈடுபட்டு இறையருள் கலக்கவும் ஆண்களைப் போலவே பெண்களுக்கு உரிமை உண்டென்பதனைச் சமய சன்மார்க்

செங்கோல்

நிறுவனர்: டாக்டர் ம.பொ.சிவஞானம்

ராஜீவைக் கொன்றவன் என் தோழன்!

தமிழகப் பிரிவினையும் கோருவோம்!

துணிவிருந்தால் தொட்டுப்பார்
பர ம க தலைவரின்
தேசத் துரோகம்!

கம் அவ்வளவு தெளிவாக வலியுறுத்தவில்லை. ஆனால், அதனை மிகத் தெளிவாக வலியுறுத்துகின்றது; வள்ளலாரின் சுத்த சன்மார்க்கம்.''

6) ''சுத்த சன்மார்க்கம் காயத்தை அழியாத பொருளாகச் செய்ய முடியும் என்கிறது.''

7) ''சுத்த சன்மார்க்க நெறியானது – நாடு, இன, சாதி, சமய, மத வேற்றுமைகளை எல்லாம் கடந்து – ஏன்? அவற்றை அறவே மறந்து, உயிர்க்குல மனைத்தையும் ஒன்றுபடுத்தும் ஒருமைப்பாட்டு நெறியாக விளங்குகிறது.'' 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற திருமூலர் சொன்ன திருமந்திரமே வள்ளலார் போதித்த சமரச சுத்த சன்மார்க்க மகா மந்திரமாம். இதனை ''ஒத்தாரும், உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும் / ஒருமையுள் ஆகி உலகியல் நடத்தல் வேண்டும்'' என்ற வள்ளலார் வாக்காலேயே அறியலாம்.''

8) ''சமரச சுத்த சன்மார்க்க நெறி, பேதங்களற்ற அபேத வாதமெனினும் அழிக்க வேண்டாத – இயற்கை வழித்தோன்றிய மொழி பேதத்தை மட்டும் ஏற்கின்றது. தாம் காண விரும்பிய சுத்த சன்மார்க்க சமுதாயத்தில் தாய்மொழிப் பற்றுக்கு இடமுண்டு என்பதைச் சொல்லாமல் சொல்லிப் போனார்.''

சாகித்திய அகாதெமி பரிசு பெற்ற நூல்

வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு

ம.பொ. சிவஞானம்

வள்ளலார் 'சுத்த' எனும் இதற்குமுன் ஆன்மீக வரலாற்றில் காணப்படாத புரட்சிகர புது அடைமொழியாக்கி அதற்கு பின்வருமாறு வரைவிலக்கணம் கூறியுள்ளார்.

''சுத்த சன்மார்க்கமாவது குண நிர்க்குணமாகிய லட்சியார்த்தமாகிய சமய மதங்களினது அனுபவமன்று. சுத்தமென்பது ஒன்றுமில்லாதது. ஆதலால், சுத்தமென்பது சன்மார்க்கம் என்னும் சொல்லுக்கு முன்வந்தமையால், முன்சொன்ன சமய மதங்களைத் தாண்டினது. அதன் அனுபவங்களையும் கடந்தது.''

**சித்தர் மரபும் வள்ளலாரும் :** வள்ளலார், சித்தர் மரபிலும் புதிய திருப்பங் கண்டார். குறிப்பாக பசி, வறுமை ஒழிப்பிற்கு முக்கியத்துவம் தரும் ஜீவ காருண்ய ஒழுக்கத்திற்கு முன்னுரிமையையும், ஆன்மீக அடித்தளத்தையும் வலியுறுத்தினார் வள்ளலார். சித்தர் மரபில் பெண் சமத்துவம் பேசப்படவில்லை. பெரும்பாலும் பெண் வெறுப்புப் பிரச்சாரமும் இருந்தது. வள்ளலார் பெண்ணுரிமைக்கு ஊக்கமளித்துள்ளதை ம.பொ.சி. எடுத்துக் காட்டியுள்ளார். ''ஆண்கள் ஞான மார்க்கத்தில் தடையின்றி முன்னேற வேண்டுமானால், பெண்களும் அத்துறையில் ஞானம் பெற்றிருக்க வேண்டியது அவசியமாகின்றது என்னும் உண்மையை அடிகள் புலப்படுத்துகின்றார்.''

சாத்திரங்கள், சடங்குகள், வர்ணாச்சரம், சாதி அமைப்புகள் முதலானவற்றைச் சாடிச் சாய்ப்பதில் சித்தர் மரபு வெளிப்படுத்திய கண்டனங்கள் வள்ளலாரிடம் சுத்த சன்மார்க்க அடிப்படையில் வெளியிட்டதையும் ம.பொ.சி. ஆய்வு செய்துள்ளார். தேகதத்துவம் – உடலைப் போற்றுவது – சித்தர் மரபில் தனித்துவமாகப் போற்றப்படுகின்றது. இதையும் ம.பொ.சி., வள்ளலார் வாக்குகளை வைத்து விளக்கியுள்ளார்.

''பசி – வறுமை ஒழிப்பில்

வள்ளலாருக்கு முன் சித்தர் மரபு கவனம் செலுத்த வில்லை.'' வள்ளலாரின் பட்டினிப் பாடல்கள், தமிழ் இலக்கியத்திற்குப் புதிய வருவாய் எனலாம்'' என்று ம.பொ.சி. சுட்டிக்காட்டியுள்ளார்.'' (ப.3 வள்ளலார் வளர்த்த தமிழ்).

**"ஜீவ காருண்யத்தின் முக்கிய லக்ஷியமாவ தெதுவெனில் :** எந்த வகையாலும் ஆதாரமில்லாத ஏழைகளுக்குண்டாகின்ற பசியென்கிற பெரிய ஆபத்தை நிவர்த்தி செய்கின்றதே முக்கிய லக்ஷியமென்றறிய வேண்டும்'' எனும் வள்ளலார் அருளுரையை ம.பொ.சி. எடுத்துக் காட்டியுள்ளார்.

''கடவுள் விளக்கமும், ஆன்மீக விளக்கமும் பசிக் கொடுமையால் மறைபடுகின்றன'' என்பது வள்ளலார் தெரிவித்த கருத்து என்றும் ம.பொ.சி. குறிப்பிட்டுள்ளார்.''

வறுமை ஒழிப்புப் பிரசாரத்தில் மட்டுமில்லா மல் வறுமை ஒழியத் திட்டமிட்டுப் பணிபுரிந்தவர் வள்ளலார் என்று ம.பொ.சி. சுட்டிக்காட்டியுள்ளார்.

''வடலூரில் அவர் தொடங்கிய தருமசாலை, பட்டினி ஒழிப்புப் போரின் பாசறையாகும். வறு மைக்கு எதிராகப் போர் தொடுத்த முதல் துறவி வள்ளலாரேயாவார்'' என்று முழங்கினார், ம.பொ.சி.

**இனம் – மதம் இரண்டிற்கும் இடையே உள்ள ஒட்டுறவைக் குறித்த ம.பொ.சி.–யின் கருத்து வருமாறு :**

''மதம் பிரிக்கின்ற இடத்திலே இனம் பிணைக்கிறது. இனம் பிரிக்கின்ற இடத்திலே மதம் பிணைக்கிறது. இந்த உண்மையை உணர்ந்துதான் பிற மதங்களைச் சார்ந்த வர்களோடு உறவுகொண்டு வாழத் தமிழன் என்னும் இன உணர்வை நான் பெற்றிருக்கிறேன். பிற இனங்களோடு உறவு கொண்டு வாழ இந்து என்ற மத உணர்வையும் பெற வேண்டிய வனாகின்றேன். உண்மைத் தமி ழன் மத உணர்வுக்கு எதிராக இருக்கத் தேவையில்லை. அப்படியே தன் மதத்தில் உண் மையான பற்றுடையவன் தமிழ னாக இருக்க மறுக்க மாட்டான். இனத்திற்கும் மதத்திற்குமி டையே முரண்பாடு இருப்பதாக நான் நினைக்கவில்லை'' (ஆன்மீகமும் அரசியலும் முதற் பதிப்பு, 1980 – ப.129–130).




19.12.1976–இல் ஈரோட்டில் நடைபெற்ற சர்வ மத மாநாட்டில் உரையாற்றிய பொழுதும் ''எம் மதமும் சம்மதம்'' என்ற கோட்பாட்டிற்கு ம.பொ.சி. மேலும் பின்வருமாறு விளக்கமளித்துள்ளார் :

''வள்ளலார் கூட மதங்களற்ற மனித சமு தாயத்தையே குறிக்கோளாகக் கொண்டிருந்தார். ஆனால் அது எளிதில் சாத்தியமாகக் கூடிய தில்லை என்பது அவருக்கே தெரிந்திருந்தது. அத னால்தான் ''மதங்களெல்லாம் பொய் பொய்யே'' என்று கூறிய அவரும் சற்று இறங்கி வந்து ''எம் மதம் சம்மதம்'' என்று வள்ளலார் கோஷித்தார்.

சாதி – வர்ணாச்ரம எதிர்ப்பில் வள்ளலார் : ''சமுதாய சீர்திருத்தத்தினை, துவேஷம், வெறி, ஏச்சு, எதிர்ப்பு என்றும் துன்மார்க்க வழிகளில் லாமல் சுத்த சன்மார்க்க முறையாலேயே சாதிக்க வள்ளலார் விழைந்தார்'' என்று ம.பொ.சி. கூறியுள்ளார்.

சுத்த சன்மார்க்க நெறி ஒன்றே மண்டிப் படரும் சாதி நோய்க்கு நல்ல மருந்து என்னும் கருத்தையும் ம.பொ.சி. பின்வருமாறு எடுத்துரைத்துள்ளார்.

''சாதியாசாரம் என்னும் விஷந்தடவிய வாளால் பாரத சமுதாயம் பல கூறாக வெட்டப் பட்டுவிட்டது. அந்த விஷத்தை முறிக்க சமய சன்மார்க்கத்திற்கு வேறான சுத்த சன்மார்க்கம் என்னும் தெய்வ மருந்தைத் தந்து ''இது நல்ல மருந்து'' என்று கீர்த்தனை பாடினார் வள்ளலார். சாதிகள் ஒழிய வேண்டுமானால் முதலில் சாதி வழிச் சடங்குகள் ஒழிந்தாக வேண்டும்.''

**சுயமரியாதைச் சங்கம் :** வள்ளலா ரின் சாதி ஒழிப்புக் கருத்துக்களைப் பெரியாரின் சுயமரியாதை இயக்கம் பயன்படுத்திக் கொண்டது. ஆனால், இதில் ''வள்ளலார் வழி''யைப் பற்றியும் புரிந்து கொள்ள ம.பொ.சி. பின்வரு மாறு கூறியுள்ளார்.

''வள்ளலாரின் சமய – சமூகச் சீர்திருத்தக் கருத்துக் களுக்கு ஓரளவு சுயமரியாதைச்



மகாத்மா காந்தி



பாரதியார்

சங்கத்தைச் சார்ந்தவர்கள் விளம்பரம் தேடினர்.’’ ஆனால் வள்ளலாரின் தெய்வ நம்பிக்கைக்கோ, ஜீவ காருண்ய ஒழுக்கத்திற்கோ, தத்துவ ஞானத்திற்கோ அன்னார் பிரதிநிதி களாக இல்லை. இருக்கவும் அவர்கள் விரும்பவில்லை. சுருங்கச் சொன் னால், மக்களிடையே வகுப்புவாத, நாத்திக உணர்வுகளை வளர்க்க அவர்கள் வள்ளலாரின் சீர்திருத்தப் பாடல்களைக் கருவிகளாகப் பயன்படுத்தினர்.’’

**அருட்பா – மருட்பாப் போராட்டம் :** வள்ளலார் வாழ்க்கை வரலாற்று நூலில் ம.பொ.சி.–க்கு முன்பு ‘‘அருட்பா – மருட்பாப் போராட்டம்’’ ஒதுக்கப்பட் டுள்ளது. ஒதுக்கப்பட்டற்குக் காரணம், ‘‘விரும்பத் தகாத, தமிழினத்துக்குப் பெருமை தராத அந்த நிகழ்ச்சியை வரலாற்றிலிருந்தே ஒதுக்கிவிடுவது நல்லதென்று சங்கத்தினர் கருதினர் போலும்’’ என்று ம.பொ.சி. குறிப்பிட்டுள்ளார்.

## அக்னி நட்சத்திரம்

**கிருத்திகா நட்சத்திரம் அக்னி தைவதம் :** பரணி நட்சத்திரம் நாலாம் பாதமும், கிருத்திகை நான்கு பாதங் களும் ரோகிணியின் முதல் பாதமும் ஆக ஆறு பாதங்களிலும் சூரியன் சஞ்சரிக்கும் காலம் “அக்னி நட்சத் திரம்” எனப்படும்.

– ம.செ. மயில், திருநெல்வேலி

ஒதுக்கப்பட்டதைத் தாம் எடுத்துக் கொண்ட தற்கான காரணத்தைப் பற்றி பின்வருமாறு கூறி யுள்ளார், ம.பொ.சி.

‘‘ஆராய்ச்சி ரீதியில் வள்ளலாரைப் பற்றி விமர்சிக்க விரும்பிய எனக்கு அது தேவைப்படு கிறது.’’ அந்தப் போராட்டம் வள்ளலாருக்கும் பெருமை தரும் ஒரு நிகழ்ச்சியாகவே எனக்குப் படுகின்றது. இராமலிங்கருடைய புரட்சிகரமான சீர்திருத்தக் கருத்துக்களை அறவே மறைத்துவிட நான் விரும்பினாலொழிய, அருட்பா – மருட்பாப் போராட்ட நிகழ்ச்சியை மறைப்பது சாத்திய மில்லை. மற்றும் மருட்பா கட்சி மறைந்தே போய் விட்டது. அந்தக் கட்சியை நடத்திய வட்டாரத்தின் வாரிசுகள் எல்லாம் இன்று அருட்பா பக்தர் களாகிவிட்டனர். எனவே, அந்தப் போராட்டம் ஒரு வரலாற்று நிகழ்ச்சியாக மட்டுமே நமக்குப் பயன்படுகிறது. அப்படித் தான் நானும் பயன்படுத்தியிருக் கிறேன். இந்நூலில் தேவைக்கு அதிகமாக ஒரு வரியைக் கூட அதற்கு நான் தந்துவிடவில்லை.’’ இந்த ஆய் வின் இறுதியில் அருட்பா கட்சி வென்றது என்று சாற்றியுள்ளார் ம.பொ.சி.

‘‘மடாதிபதிகளும், பண்டிதர்களும் தம்மிடம் நடந்துகொண்ட முறை கண்டு வள்ளலார் வருந்தி, வருந்திப் பாடிய பாடல்களைப் படிக்கப் படிக்க, நம் கண்ணில் நீரும் நெஞ்சில் ரத்தமும் கசிகின்றன’’ என்று உளம் நொந்து நெகிழ்ந்து கூறியுள்ளார் ம.பொ.சி.

வள்ளலாரின் வரலாற்றைப் படித்து, அவரது தொண்டினை மதிப்பிட முற்படும் பொழுது பின் வரும் கருத்தை நினைவில் கொள்ள ம.பொ.சி. குறிப்பிட்டுள்ளார்.

‘‘இராம்மோகனர் – தயானந்தர் – இராம கிருஷ்ணர்’’ ஆகிய மூவருக்கும் அவர்கள் விரும் பாத நிலையிலும் சுயசாதி, சுயஇனச் சக்திகள் கை கொடுத்தன. இராமலிங்கருக்கோ, சுயசாதி சக்தியற்றது. சுய இனமோ உணர்ச்சியற்றது.’’

எதிர்வினை

# பாலியல் வன்முறை குறித்த பதிவுகள்

# திருக்குறளில் இல்லை

'ஓம் சக்தி' ஏப்ரல் 2019 இதழில் **முனைவர் கு. மோகனராசு** அவர்களின் "இன்றைய வாழ்வில் பாலியல் சிக்கல்களும் திருவள்ளுவர் தரும் தீர்வுகளும்" என்ற கட்டுரையைப் படித்து அதிர்ச்சி அடைந்தேன். திருவள்ளுவர் காலச் சமுதாயத்தில் பாலியல் சிக்கல்கள், வன்முறைகள் இருந்திருக்கலாம். ஆனால், அவை பற்றிய பதிவுகள் திருக்குறளில் இடம்பெறவில்லை. திருவள்ளுவர் இவற்றையெல்லாம் பதிவு செய்திருப்பதாகக் கட்டுரையாளர் எழுதியிருப்பது விந்தையாக உள்ளது.



காமத்துப் பாலின் முதல் ஏழு அதிகாரங்கள் களவியல் பகுதியாகும். ஓர் ஆடவனும் பெண்ணும் தற்செயலாக நேருக்கு நேர் சந்தித்துக் கொள்கிறார்கள். ஒருவரையொருவர் விரும்பிக் காதலிக்கிறார்கள். திருமணத்திற்குப் பின்னர் பெற வேண்டிய உடலுறவையும் பெற்றுக் கொள்கிறார்கள். அதனால்தான் இந்தப் பகுதி களவியல் என்று குறிப்பிடப்படுகிறது.

இப்பகுதியின் மூன்றாம் அதிகாரம் 'புணர்ச்சி மகிழ்தல்' என்ற தலைப்பில் உள்ளது. ஆனால் கட்டுரையாளரோ, இந்தப் பகுதியில் எங்குமே காதலர்கள் உடல் உறவு கொண்டார்கள் என்ற குறிப்பே இல்லை என்கிறார். புணர்ச்சி மகிழ்தல் என்பதற்கு இவர் என்ன பொருள் கொள்கிறார்?

அடுத்து, "காதல் மணத்தை – கலப்பு மணத்தை வரவேற்கும் திருவள்ளுவர், களவுக்கால வாழ்க்கையில் உடல் உறவு எனப் புதிய அகப்பொருள் நெறி வகுப்பதை உய்த்துணர முடிகின்றது என்கிறார். முன்னுக்குப் பின் ஏன் இந்த முரண்பாடு? கலப்பு மணம் பற்றியெல்லாம் திருவள்ளுவர் எங்கும் குறிப்பிடவில்லையே? குறிப்பிட வேண்டிய தேவை எழவில்லை. சாதி சமயங்கள் குறிப்பிடப்பட்டிருந்தால் தானே கலப்பு மணம் குறித்த தேவை எழும்?

அடுத்து, ஆண் – பெண் பாலியல் உறவு என்பது இருவரிடத்தும் காம உணர்வு சமஅளவில் இருக்கும்போது தான் சீர்மை பெறும். அப்படி இல்லையென்றால் கணவனாயினும் மனைவியே யானாலும் அந்த உறவில் சில சமயம் மணமுறிவு ஏற்பட்டுவிடும் என்று குறிப்பிடும் கட்டுரையாளர், இதற்குச் சான்றுகளாகப் 'பிறன்இல் விழையாமை' (பிறன் மனைவியை விரும்பாமை) என்ற அதிகாரத்தின் குறள்களைச் சுட்டிக் காண்பிக்கிறார்.

'இச்செயல் எளியது என எண்




ணிப் பிறன் ஒருவனது மனைவியிடம் நெறிதவறிச் செல்கிறவன் எப்போதும் நிலைத்திருக்கும் பழியை அடைவான்' என்ற பொருளுடைய குறளையும் (145), 'பகை, பாவம், அச்சம், பழி என்னும் நான்கு குற்றங்களும் பிறன் மனைவியிடத்து நெறிதவறி நடப்பவனிடமிருந்து நீங்காவாம்' என்ற பொருளுடைய குறளையும் (146) சுட்டிக் காண்பிக்கிறார். ஒரு கணவன் தன் மனைவியிடம் வரம்பு கடந்து நடந்து கொள்வதற்கும் இவ்விரு குறள்களுக்கும் என்ன சம்பந்தம்? ஏன் இவ்வாறு இரண்டையும் இணைத்துப் பார்க்கிறார்?

'பிறன்இல் விழைதல்' என்பது மனித சமூகத்தில் நிலவுகின்ற ஓர் ஒழுக்கக்கேடு. இந்தப் பிறனில் விழைபவனை அந்தப் பிறனது இல்லாள் இரகசியமாக ஏற்றுக் கொண்டாலும் அவன் பேதை என்றும் (141), அறிவிலி என்றும் (142), செத்தவனாகவே அவன் கருதப்படுவான் என்றும் (143), இவ்வாறெல்லாம் வள்ளுவர் பிறன்இல் விழைபவனைக் கடுமையாகச் சாடுகிறார்.

ஆனால், கட்டுரையாளர் குறிப்பிடுவது போல் பிறன்மனை விழைதலைப் பாலியல் வன்கொடுமை என்று வள்ளுவர் சொல்லவில்லை; ஒழுக்கக்கேடு என்றுதான் அழுத்தமாகச் சொல்கிறார்.

கட்டுரையாளர் குறிப்பிடும் பாலியல் வன்கொடுமை நிகழாதிருக்கத் திருவள்ளுவர் தரும் தீர்ப்பு என்று திருக்குறள் காமத்துப் பாலிலிருந்து,

> "ஒருதலையான் இன்னாது காமம்காப் போல
> இருதலை யானும் இனிது" (1196)
>
> "மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
> செவ்வி தலைப்படு வார்" (1289)

ஆகிய இரண்டு குறள்களைச் சுட்டுகின்றார். பாலியல் வன்கொடுமை என்று வள்ளுவரால் சொல்லப் படாத ஒன்றுக்கு வள்ளுவத்திலேயே தீர்வைத் தேடும் கட்டுரையாளரின் இந்த முயற்சி, இல்லாத ஊருக்குப் பாதை காண்பிக்கும் வீண் செயலாக அல்லவா தோன்றுகிறது?

அடுத்து, திருக்குறளில் உள்ள 'வரைவில் மகளிர்' என்ற அதிகாரத்தை எடுத்துக் கொள்கிறார் கட்டுரையாளர். "வரைவில் மகளிர் என்றால் பரத்தையர்கள் மட்டுமல்லர்; பணத்திற்காக – பதவிக்காக – மிகு காம உணர்வைத் தீர்த்துக் கொள்வதற்காக, நெறி பிறழ்ந்து பிற ஆடவர்களோடு தொடர்பு கொள்ளும் குடும்பப் பெண்கள் உள்ளிட்ட எல்லா வகையான பெண்களும் 'வரைவில் மகளிர்' என்பதற்குள் அடங்குவர்' என்று கட்டுரையாளர் தரும் விளக்கம் வள்ளுவத்துக்குப் புறம்பானது.

## க.சி. அகமுடை நம்பி

வள்ளுவர் காண்பிக்கும் 'வரைவில் மகளிர்' பரத்தையர் மட்டுமேயாம். கட்டுரையாளர் தம்முடைய தனிப்பட்ட கருத்துகளை வள்ளுவத்துள் திணிப்பது வரம்பு மீறிய செயலாகும்.

சென்னைப் பல்கலைக் கழகத் திருக்குறள் ஆய்வு மையத்தில் 36 ஆண்டுகள் பணியாற்றியவர், உலகத் திருக்குறள் மையத்தின் நிறுவனர் என்றெல்லாம் அறியப்படுகின்ற பேராசிரியர் முனைவர் கு. மோகனராசு அவர்கள் திருக்குறளை இவ்வாறெல்லாம் திரிவுபடுத்தி எழுதியிருப்பது விந்தையாக மட்டுமல்ல, வேதனையாகவும் உள்ளது.

●

விவாதம்

# நியாயமான தேர்தலை நடத்த...



தலைமை தேர்தல் ஆணையர் சுனில் அரோரா

கருத்துச் சுதந்திரத்தை அடிப்படை உரிமையாக நமது அரசியல் சாசனம் கொண்டாடுகிறது. அதன்படி 2293 அரசியல் கட்சிகள் நமது நாட்டில் செயல்படுகின்றன. மத்தியிலும், மாநிலங்களிலும் மக்கள் ஆட்சியை அமைக்க, தேர்தல் முறையைக் கடைப்பிடிக்கிறோம். 5 ஆண்டுகளுக்கு ஒரு முறை தேர்தல் நடத்த வேண்டுமென்ற சட்ட விதியை நமது அரசியல் சட்டம் வகுத்துள்ளது.

கட்சிகளின் சார்பிலோ, சுயேச்சைகளாகவோ வாக்காளர்கள் தங்கள் பிரதிநிதிகளைப் பெரும்பான்மை வாக்குகளால் தேர்ந்தெடுக்கிறார்கள். கட்சிகளின் வேட்பாளர்களாகத் தேர்தல் களத்தில் போட்டி போடுகின்றனர். அரசியல் கட்சிகள் ஒவ்வொன்றும் தாங்கள் ஆட்சிக்கு வந்தால் மக்களுக்குச் செய்யப்போகும் நலத்திட்டங்களைப் பற்றி அறிக்கையாக வெளியிட்டு ஆதரவு திரட்டுகின்றன.

அமெரிக்க அதிபர் ஆப்ரகாம் லிங்கன் “மக்களால், மக்களுக்கான மக்கள் அரசு (Government of the people, for the people, by the people) என்று கூறிய கருத்து ஜனநாயகத்துக்கான சரியான விளக்கமாகப் போற்றப்படுகிறது.

நமது அரசியல் சாசனத்தை வடிவமைத்த மேதைகளுக்குக் கற்பனையில்கூடத் தோன்றாத ஒரு கருத்து, நமது ஜனநாயகத்தைச் சமீப காலமாக ஆட்டிப் படைக்கிறது.

அரசியல் கட்சிகள் தனித்தனியாகப் போட்டியிட்டு எம்.பி. மற்றும் எம்.எல்.ஏ.–க்களைப் பெரும்பான்மை வாக்காளர்கள் தேர்ந்தெடுக்க வேண்டும். தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் பிரதிநிதிகள்தான் மத்தியில் பிரதமரையும், மாநிலங்களில் முதல்வரையும் தேர்ந்தெடுப்பார்கள்.

பெரும்பான்மை (Majority) என்பது தனித்த ஓர் அரசியல் கட்சிக்குக் கிடைப்பது சாத்தியமில்லை என்று இப்போது ஆகிவிட்டது. அதனால், ஒத்த மனப்பான்மையுடைய கட்சிகள் ஓர் அணியாக இணைந்து இப்பெரும்பான்மையை உருவாக்குவது அரசியல் சட்டத்தில் இல்லை என்றாலும், இதனை அரசியல் சட்டம் தடுக்கவில்லை.

அதனால், மத்தியிலோ, மாநிலங்களிலோ அமைக்கப்படும் ஆட்சிகள், கூட்டணிக் கட்சிகளின் ஆட்சியாகவே அமையத் தொடங்கி

விட்டன. முன்புபோலத் தனி ஒரு கட்சியின் ஆட்சிக்கான சந்தர்ப்பம் இனி இல்லை என ஆகிவிட்டது.

பல சிறிய கட்சிகள், மாநிலக் கட்சிகள், மறைமுக சாதிக்கட்சிகள், மதக் கட்சிகள் ஒரு பெரிய அரசியல் கட்சியோடு கூட்டணி அமைத்துத் தேர்தலில் போட்டி போடுகிற நிலைமையே இப்போது நீடித்து வருகிறது. செக்யூலர் எனக் கூறிக்கொள்ளும் மதச்சார்பற்ற கட்சிகள், மதத்தை மலினப்படுத்தாத கட்சிகள், இடதுசாரிக் கட்சிகள் கூட்டணிகளை அமைத்தே தேர்தலில் ஈடுபடுகின்றன.

ஆட்சி அமைப்பதற்குரிய அறுதிப் பெரும்பான்மை என்பது மத்தியில் 272 எம்.பி.க்களின் ஆதரவாகும். மொத்தமுள்ள 543 எம்.பி.–க்களில் சரிபாதியான இந்த எண்ணிக்கை “மேஜிக்” எண் என வருணிக்கப்படுகிறது.

இப்பெரும்பான்மையைப் பெறுகிற கூட்டணியே ஆளும் கூட்டணிக் கட்சியாகிறது. கூட்டணிக் கட்சிகளின் பங்களிப்பில் உருவாகும் பெரும்பான்மையே இனிச் சாத்தியம். தனிக் கட்சியின் பெரும்பான்மைக்குச் சாத்தியக்கூறே இனி இல்லை. இதன்மூலம் பெரும்பான்மைக்கான முந்தைய அர்த்தம் வெளியேற்றப்பட்டு, புதிய அர்த்தம் புகுத்தப்பட்டுள்ளது. இப்படிப்பட்ட பங்களிப்புப் பெரும்பான்மையால் கூட்டணிக் கட்சிகளுக்குக் கிடைக்கும் பலன், அக்கட்சிகளுக்குத் தரப்படுகிற அமைச்சர் பதவிகளாகும்.

இவ்வாறுதான், அறுதிப் பெரும்பான்மை என்கிற ஆட்சித்தகுதி, கூட்டணியால் பெறப்படுகிறது. அதில் உள்ள அனுகூலத்தைப் போலவே, ஆபத்தும் அதில் உள்ளதைப் பார்க்க வேண்டும்.

கூட்டணி அமைத்துள்ள கட்சிகள் சுயநலத்துக்காகக் கூட்டணியை விட்டு விலகுமானால், அறுதிப் பெரும்பான்மை என்பது நிலைகுலைந்து ஆட்சியே கவிழ்ந்துவிடும்.


ராகுல் காந்தி

அறுதிப் பெரும்பான்மையைத் தக்க வைத்துக் கொள்ள ஆளும் கூட்டணிக் கட்சி மிக்க கவனத்தோடு இருக்க வேண்டியதாகி விடுகிறது. அசம்பாவிதம் ஏற்பட்டால் நிலையான ஆட்சி என்பதே கேள்விக்குரியதாகிவிடலாம்.

கூட்டணிக் கட்சிகளின் ஒத்துழைப்பை ஆளும் கூட்டணிக் கட்சியின் தலைமை தொடர்ந்து பராமரித்து வரவேண்டியதாக உள்ளது.

ஆளும் கூட்டணி ஆட்சியில் உள்ள சகோதரக் கட்சிகள் கடனாகக் கொடுத்த பலத்தால் தான், மத்திய ஆட்சி நடக்கிறது. ஐந்தாண்டுக் கால ஆயுட்காலத்தையும் நிறைவு செய்கிறது. இந்த ஐந்தாண்டுக் காலத்திற்குள் நாட்டில் நடக்கும் நிலவரங்களால் எதிர்க்கட்சிகள் ஆட்சியைக் கைப்பற்ற வேண்டுமென்று திட்டமிடுகின்றன. தங்களின் சுய பலத்தால் அக்கட்சிகளால் மத்திய ஆட்சியைக் கைப்பற்ற முடியாது. அதனால் எதிர்க்கட்சிகளும் கூட்டணி அமைக்கின்றன.

இவ்வாறு குறைந்த பலம் உள்ள 20 எதிர்க் கட்சிகள் ஒன்று சேர்ந்து மத்தியில் கூட்டணி ஆட்சி அமைக்கத் திட்டமிடுகின்றன. அக்கூட்டணிதான் வெற்றிக் கூட்டணி என்றும் நாடு முழுவதும் அவை பிரச்சாரமும் செய்கின்றன.

ஆட்சி செய்து கொண்டிருக்கிற மத்திய கூட்டணி ஆட்சி, தனது ஆட்சியைத் தக்க வைத்துக் கொள்வதற்கு, மக்கள் நலத் திட்டங்களை அறிவிக்கின்றது. போட்டிக் கூட்டணியான எதிர்க்கட்சியும் இதேபோல திட்டங்களை அறிவிக்கின்றது. பாரதிய ஜனதா கட்சி தங்கள் ஆட்சி தொடர்ந்தால், சிறு – குறு விவசாயிகளுக்கு மானியமாக ரூபாய் 6 ஆயிரம் அவர்களுடைய வங்கிக் கணக்கில் மூன்று தவணைகளில் வரவு வைக்கப்படும் என்கிறது.

எதிர்க்கட்சியான கூட்டணிக் கட்சிகளுக்குத் தலைமை தாங்குகிற காங்கிரஸ் கட்சியோ விவசாயிகளுக்கு மட்டுமல்ல, வறுமைக்கோட்டிற்குக் கீழே உள்ள ஐந்து கோடி எல்லா மக்களுக்கும் மாதம் ரூபாய் 6 ஆயிரம் வீதம் 12 மாதங்களுக்கு ரூ. 72 ஆயிரம் அவர்களுடைய வங்கிக் கணக்கில் வரவு வைக்கப்படும் என்று அறிவிக்கிறது.

50 தொகுதிகளுக்குக் கூட போட்டி போட முடியாத மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, தாங்கள் ஆட்சி அமைத்தால், தொழிற் சங்கத்தில் பதிவுபெற்ற தொழி லாளர்களுக்கு மாதம் ரூ. 18 ஆயிரம் மானியம் என அறிவிக்கிறது.



பிரதமர் நரேந்திர மோடி

ஆக்கப்பூர்வமான திட்டங்களைப் போட்டி போட்டுக் கொண்டு அறிவித்து மக்களைக் கவர்வது என்பது ஆரோக்கிய மான நடைமுறைதான். ஆனாலும் அரசியல் கட்சிகளின் தலைவர்களோ மலிவானப் பேச்சுக்களின் மூலமாக வெறுப்பு அரசியலை வளர்த்து, மக்கள் மத்தியில் தங்கள் பலத்தைப் படாடோமாகக் காட்டுகிறார்கள்.

இவ்வகையான வெறுப்புப் பேச்சுக்களைச் சகித்துக்கொள்ள முடியாத பாதிக்கப்பட்ட அரசியல் கட்சி, நீதிமன்றத்தில் வழக்குத் தாக்கல் செய்கிறது. இத்தேர்தலில் அப்படித் தாக்கல் செய்யப்பட்ட ஒரு வழக்கில், நீதிமன்றம் அளித்தத் தீர்ப்பு விசித்திரமானது. எதிர்க்கட்சித் தலைவர் முதலமைச்சரைக் கடுமையாக விமர்சனம் செய் கிறார். அதனால் எதிர்க்கட்சித் தலைவருடைய விமர்சனப் பேச்சுக்குத் தடைவிதிக்க வேண்டு மென்று ஆளும்கட்சிக் கூட்டணிக்காரர் வழக்குத் தொடுக்கிறார்.

இவ்வழக்குக்கு நீதியரசர் தந்த தீர்ப்பு என்ன வென்றால், ஆளும்கட்சியிலும் எதிர்க்கட்சியிலும் ஒருவரை ஒருவர் தரம்தாழ்ந்துத் தாக்கிப் பேசிக் கொள்வதால், நீதிமன்றம் ஒரு தரப்பை மட்டும் தடைசெய்ய முடியாது என்று கூறி, வழக்கைத் தள்ளுபடி செய்துவிட்டது. அப்படியானால், இரு தரப்பாருமே தாங்களாகவே சமரசமாகிவிட வேண்டுமே தவிர, சட்டத்தின் மூலம் ஒரு தரப் பிற்கு வாய்ப்பூட்டுப் போட நீதிமன்றத்தை உப யோகிக்கக் கூடாது என்பதுதான்.

தேர்தல் அறிவிக்கப்பட்டுவிட்டால், தேர்தல் ஆணையத்தின் விதிகள் அமலுக்கு வந்துவிடு கின்றன. ஆளும்கட்சியின் கூட்டணி ஆட்சி பற்றி முக்கியமான நான்கு குற்றச்சாட்டுகள் வைக்கப் படுகின்றன. முதலாவதாக, ஆளும்கட்சியின் கூட்டணி ஆட்சி எதிர்க்கட்சிகளில் தங்களுக்குப் பிடிக்காதவர்களை ஒழித்துக்கட்ட **வருமான வரித் துறையை** ஏவிவிடுகிறது.

இரண்டாவதாக, அவர்களின் வீடுகளில் திடீர் சோதனைகள் செய்து, அவர்களுடைய சொத்துகள் பற்றிய ஆவணங்களைக் கைப் பற்றவும், பதுக்கி வைக்கப்பட்டுள்ள ஊழல் பணத்தைக் கையகப்படுத்தவும் **அமலாக்கத் துறையை** ஆளும் கூட்டணிக் கட்சி தமது ஆட்சியை உபயோகப்படுத்துகிறது.

இந்த இரண்டையும்விட, வலுவான எதிர்க் கட்சி வேட்பாளர்களைத் தேர்தலில் தோற்கடிப் பதற்கு முன்பே, வருமானத் துறை, அமலாக்கத் துறையின் அறிக்கைகளைச் சாதகமாகப் பெற்று, அந்தத் தொகுதிகளில் தேர்தலையே ரத்து செய்ய ஆளும் கூட்டணிக் கட்சி **தேர்தல் ஆணையத்தைப்** பயன்படுத்துகிறது.

இதனோடு இன்னொரு அம்சமும் இடம் பெறத்தக்கதாக உள்ளது. ஆளும்கட்சியின் கூட்டணி ஆட்சி, தன் வசமுள்ள காவல்துறையை எதிர்க்கட்சிகளுக்கு எதிராக ஏவிவிட்டு, அடக்கு முறையை உபயோகிக்கிறது. இந்த நான்கு குற்றச் சாட்டுகளும் பரிசீலிக்கப்படுவதற்கான குற்றச் சாட்டுகள்தான்.

இவ்வாறு, வருமான வரித் துறை, அமலாக்கத் துறை, தேர்தல் ஆணையம், காவல் துறை ஆகிய இந்த நான்கு ஆயுதங்களும் எதிர்க் கட்சிகள் மீது ஏவி விடப்படுகின்றன என்பவை எதிர்க்கட்சிகள் வைக்கும் குற்றச்சாட்டுகளாகும்.

வழக்குகள் தாக்கல் செய்யப்படுமானால் நீதிமன்றம் தீர்ப்பளிப்பதற்குக் காலதாமதமாகலாம். அதற்குள் தேர்தலே நடந்து முடிந்துவிடும். இப்படிப் பட்ட இக்கட்டான சூழ்நிலையில் ஜனநாயகத்தின் ஆன்மாவாக உள்ள சட்டமன்ற, நாடாளுமன்றத் தேர்தல்களை நியாயமாகவும், சுதந்திரமாகவும் எப்படி நடத்துவது?

அதனால், நீதிமன்றமே கையறு நிலையில் தான் நிற்க வேண்டியுள்ளது. தார்மீகமாகத்தான் நீதியரசர்கள் பேச வேண்டியுள்ளது. ஏறக்குறைய உபதேசங்களாகத்தான் அவர்கள் உத்தரவிட வேண்டியுள்ளது. வாக்காளர்கள் எந்தவித அச்சமும் இல்லாமல், சுயமாகச் சிந்தனை செய்து தங்களுக்கு விருப்பப்பட்ட ஒருவரை பிரதிநிதி யாகத் தேர்ந்தெடுக்க தேர்தல் ஆணையம் என்ன செய்ய வேண்டும்?

இதுவரை அப்படிப்பட்ட ஒன்றை நாம் பரிசீலிக்கவும் இல்லை. பரீட்சை செய்தும் பார்க்க வில்லை. அது என்ன?

தேர்தல் ஆணையம் என்பது மத்திய அரசு உருவாக்கியது அல்ல. நீதிமன்றம், சட்டமன்றம், அரசின் அதிகார அலுவலகம் ஆகிய மூன்றையும் அரசியல் சாசனம்தான் உருவாக்கியுள்ளது. 1990–இல் திரு. டி.என். சேஷன், ஐ.ஏ.எஸ்., அவர்கள் பதவியேற்கும்வரை இந்த மூன்றுக்கும் சமமாக உள்ள தேர்தல் ஆணையத்தையும் நமது அரசியல் சாசனம்தான் உருவாக்கியுள்ளது என்பது பலருக்கும் தெரியவில்லை.

இவ்வாறு, அரசியல் சாசனத்தால் உரு வாக்கப்பட்டுள்ள தேர்தல் ஆணையம், அதற்குரிய சகல அதிகாரங்களையும் அதனை உருவாக்கிய அரசியல் சாசனத்தில் இருந்துதான் பெறுகிறது. அப்படியென்றால் இந்தியாவில் சுதந்திரமான, நியாயமானதாகத்தான் தேர்தல்கள் நடத்தப்பட வேண்டும். அரசியல் கட்சிகள் பலாத்காரமாக வாக்குச்சாவடிகளைக் கைப்பற்றுதல், வாக்கு களை விலைக்கு வாங்க பணம் விநியோகம் செய்தல், வேட்பாளர்களைக் கடத்திக் கொண்டு போதல் போன்ற காரணங்களால் சுதந்திரமான, நியாயமானத் தேர்தலை தேர்தல் கமிஷன் உத்தரவாதப்படுத்த முடியவில்லை.

மத்திய அரசுதான் இந்தத் தேர்தலை நடத்துவதாக நாம் நினைக்கிறோம். அரசியல் சாசனப்படி தேர்தல் ஆணையம்தான் நடத்துகிறது. இதை நடத்துவதற்குத் தேவையான இராணுவம், காவல்துறை, அரசு அலுவலர் நியமனம் ஆகிய அனைத்தையும் தேர்தல் ஆணையம் தமக்கான உரிமையின் மூலமாகவே பெறுகிறது.

மத்திய, மாநில அரசுகள் தேர்தல் ஆணையத் திற்கு இவற்றைச் சலுகைகளாகத் தரவில்லை. தேர்தல் தேதி அறிவிக்கப்பட்டவுடன், தேசத்தின் மாநில – மாவட்டங்களின் அனைத்து அதிகாரங் களையும் தேர்தல் ஆணையம் கையகப்படுத்து கிறது. அதனால்தான் காவல்துறை டி.ஜி.பி.க்கு தேர்தல் ஆணையம் மாறுதல் உத்தரவு தருகிறது. கலெக்டருக்கு மாறுதல் உத்தரவு தருகிறது. தேர்தல் ஆணையத்தின் உத்தரவுக்குப் பணிந்து அரசு அலுவலர்கள் வேலை செய்ய வேண்டும்.

**இவ்வாறு, வானளாவிய அதிகாரங்களைக் கொண்ட இத்தேர்தல் ஆணையம், இன்னொன் றையும் கோரிப் பெறலாம். மத்திய ஆட்சி, மாநில ஆட்சிகள் ஆகிய அனைத்தையும் ராஜினாமா செய்யவைத்து, எதிர்க்கட்சிகளைப் போலவே ஆளும் கூட்டணிக் கட்சிகளும் சமமாகத் தேர்தலில் கலந்து கொள்ளுமாறு செய்யலாம்.**

**அதற்குரிய சட்டத்தை நாடாளுமன்றத்தில் நிறைவேற்றுமாறு ஆணையமே கோரிக்கை வைக்கலாம். இந்த நடவடிக்கை எடுக்கப்படு மானால், எதிர்க்கட்சிகள் இதை வரவேற்கும். ஆளும் கூட்டணிக் கட்சிகள்தான் இதை எதிர்க் கும். மக்கள் கவனத்திற்கு இதனைக் கொண்டு போனால், இதனைப் பற்றிய விவாதம் நடக்கும். அதன் முடிவு ஆணையத்திற்கே ஆதரவாக இருக்கும்.**

**தேர்தல் நடக்கும் ஒரு மாதக் காலத்திற்கு மத்தியிலும் மாநிலங்களிலும் ஆட்சிகள் இல்லாத நிலைமையைத் தேர்தல் ஆணையம் உருவாக் கலாம்.**

**பின்னர் தேர்தலை நடத்தி, பெரும்பான் மையைப் பெற்ற கூட்டணிக் கட்சியிடம் மத்திய ஆட்சியை ஒப்படைக்கலாம்.**

தேர்தல் ஆணையத்திற்கு இத்தகைய புது அதிகாரம் ஆயுதமாகக் கிடைக்குமானால், வரு மானவரித் துறையையோ, அமலாக்கத் துறையையோ, காவல்துறையையோ ஆளும் கூட்டணி ஆட்சி ஏவிவிடுகின்றது என்ற எதிர்க் கட்சிகளின் குற்றச்சாட்டை முற்றாக மறுக்க முடியும்.

மத்தியிலும், மாநிலங்களிலும் ஆட்சியில்லாத நிலையை உருவாக்கினால்தான் தேர்தல் ஆணை யம் நியாயமான தேர்தலை நடத்த முடியும் என்பது குறித்து வாசகர்களாகிய நீங்கள் என்ன எண்ணு கிறீர்களோ, அதை எழுதுங்கள் மே 12–க்குள்.

**– பி.சி.**

# மனைவி!



கவிஞர் வெற்றியூர் சுப.திருஞானம்

மனை விளங்க வந்தவள்தான்
மனைவி ஆனவள்
மன வலிவால் குடும்பம் என்னும்
நாட்டை ஆள்பவள்!
காலையிலே எழுந்திடுவாள்
முதன் முதலாக
கடமைகளை முடித்திடுவாள்
வெகுவிரை வாக!

தாய்மை என்னும் பொலிவினிலே
உயர்ந்து நிற்பவள்
தன்னை ஈந்து பிறரைக் காக்கும்
வாழை போன்றவள்!
அன்பு என்னும் சக்கரத்தைச்
சுழற்று கின்றவள்
ஆசைகளை நெஞ்சில் வைத்துப்
பூட்டு கின்றவள்!

தன் கணவர் தனது மக்கள்
நலமுடன் வாழ
சங்கடங்கள் எதுவரினும்
தாங்கிக் கொள்பவள்!
தாய் இடத்தை நிரப்பவந்த
தாரமானவள்!
தன் குடும்பம் தழைத்திட ஆ
தாரமானவள்!

ஒருயிராய்க் குடும்பத்திலே
ஒன்றி வாழ்பவள்!
சீர்பெருகச் சிக்கனமாய்ச்
செலவு செய்பவள்!

மனைவி இல்லா வீட்டில் என்றும்
மங்கலமில்லை!
வளம் பெருக்கும் திருமகளும்
தங்குவதில்லை!

# பழந்தமிழர் போற்றிய

# சமயம்

எழுபது ஆண்டுகட்கு முன்னர் தமிழ் இலக்கிய வரலாற்றினைப் பாடமாகப் படித்தபோது தமிழர்கள் பழம் பெருமை வாய்ந்தவர்கள் என்பதை நினைத்து மகிழ்ந்தேன்.

பின்னர் 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்ற தொல்காப்பிய நூற்பாவைப் படித்த பின், சொற்களின் பொருளைப் பற்றி ஆழமாகச் சிந்திக்கத் தொடங்கினேன். அச்சொற்கள் தமிழரின் பழமையையும், சமயக் கருத்துக்களையும் தருவனவாகத் தோன்றின.

அப்பொழுதே ஒரு சிறு குறு நூலாக இவற்றை எழுத எண்ணினேன். ஆனால், அது இப்பொழுதுதான் பல்லாண்டுகளுக்குப் பின்னர் நிறைவுற்றது.

பல்வேறு கடவுள்களை வணங்கி மகிழ்ந்த தமிழ் மக்களின் சிந்தனை உயர, உயரப் பல மெய்ப்பொருள் உணர்வுகள் அவர்தம் உளத்தே ஒளி விடுவது இயல்பாயிற்று.

எனவேதான் எல்லாவற்றிற்கும் மேலான ஒன்றைக் குறிப்பிட வந்தவர்கள் அது இனிமையே வடிவானது என்பதனால் தெய்வம் எனவும், எல்லாவிடத்தும் நிறைந்து இருப்பதால் இறைவன் எனவும், எல்லாவற்றையும் இயக்குவதால் இயவுள் என்றும் அழைத்தனர். தொல்காப்பியர் அப்பேராற்றலைக் கொடிநிலை, கந்தழி, வள்ளி என்றார்.



> "கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற
> வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
> கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே."
>
> (தொல் – 27).

குற்றம் தீர்ந்த சிறப்பினை உடைய கொடிநிலை முதலாகச் சொல்லப் பட்ட மூன்றும் கடவுள் வாழ்த்தொடு பொருந்தி உரைக்கப்படும் என்பதுவே இதன் பொருள்.

இந்நூற்பாவுக்கு நச்சினார்க்கினியர், இளம்பூரணர் முதலிய உரையாசிரியர்களும், புறப்பொருள் வெண்பாமாலை ஐயனாரிதனார், வீரசோழிய உரையாசிரியர் மு. இராகவையங்கார், பேராசிரியர் முனைவர் மொ.அ. துரை அரங்கனார் முதலிய பேரறிஞர்கள் வெவ்வேறு விதமாகப் பொருள் காண்கின்றனர்.

என்னளவில் இம்மூன்றும் இறை இயல்பைச் சுட்டி வருவன. எனவே, கடவுளைப் புகழ்ந்து பாடுங்கால் இவற்றைப் பாடுபொருளாகக் கொண்டனர் எனக் கொண்டு, **கொடிநிலை** என்பது அவனே எல்லாவற்றிற்கும் மூலம் என்பதையும், **கந்தழி** என்பது

அருள்நிதி இராம. இருசுப்பிள்ளை

எல்லாமாக அவன் இருந்தாலும் எந்த ஒன்றோடும் கட்டுப்பட்டு நிற்கவில்லை என்பதையும், **வள்ளி** என்பது அவன் அருளே உருவானவன் என்பதனையும் குறிப்பிடுவதாகக் கருதுகின்றேன்.




கொடிநிலை என்பது கொடியின் தன்மை என்று பொருள்படும். கொடியானது அடித் தண்டிலே இருந்து தோன்றிப் பரவுவது. நல்ல செழுமை மிக்க நிலமாயின் கொடி தெரியும். அதன் வேர்த்தண்டினைக் காண வேண்டுமானால், கொடியின் நுனியில் இருந்து தொடர்ந்து சென்றுகொண்டே இருப்பின் கடைசியில் அதன் வேர் தெரியும்.

அது போன்று இந்த உலகம் பரந்து விரிந்து கிடப்பினும் அது கொடி போன்றது. இறைநிலையே அதன் மூலமாகும் என்ற உண்மை என்பது மெய்ப்பொருள் உணர்த்தும் உண்மை.

கோவை வேளாண் கல்லூரியில் ஒரு சென்ட் அளவிற்குப் படர்ந்து விரிந்த திராட்சைக் கொடியொன்று அன்றைய பழத்தோட்டத்தில் இருந்தது. அதன் அடி ஒன்றே. அதனிலிருந்து கிளைத்துப் படர்ந்ததுவே ஒரு சென்ட் பரப்பில் பரந்து விரிந்துள்ள கொடி. எனவே, உலகம் பலவாயினும் அவற்றின் ஆதி ஒன்றே என்ற உண்மையை உணர்த்துவது கொடி நிலை.

கந்து என்றால் கட்டு என்று பொருள். கந்தழி எனின் கட்டற்றது, பற்றற்றது என்று பொருள். இறை நிலை என்பது பற்றற்றது என்பது. கந்தழி என்பதற்குத் தொல்காப்பியம் புறத்திணை இயலில் நச்சினார்க்கினியர் கீழ்க்காணும் பாடலை மேற்கோளாகக் காட்டி உள்ளார். அது எம் கருத்துக்கு வலுவூட்டுவதாய் உள்ளது.

“சார்பினால் தோன்றாது தான்
அருவாய் எப்பொருட்கும்
சார்பு என நின்று எஞ்ஞான்றும்
இன்பம் தகைத்தரோ
வாய்மொழியால், மெய்யால்
, மனத்தால் அறிவுசிறந்த
தூய்மையதாய் மைதீர் சுடர்”

(தொல். புற. சூத். – 33).

இதனால் பற்றற்றது இறைநிலை என்பதனைச் சுட்டுவதே கந்தழி என்ற தொடர்.

வள்ளி என்பது வள்ளல் தன்மையைக் குறிப்பதோர் செயலாகும். ‘வள்ளல் தன்மை’ என்பது “வாட்டம் இல் அருளும் கோட்டம் இல் குணனும், அசையா நிலையும், நசையா மனமும், வெகுளாப் பண்பும் விடாப் பேரன்பும், செவ்வியல் மரீஇ எவ்வெவர் எவ்வகை வேட்டனர் அவ்வகை விருப்பொடு குறிப்பின் வரையாது ஈதல் வள்ளல் தன்மை” (அருட்பிரகாச வள்ளலார் – ஒழிவில் ஒடுக்கப் பாயிர விருத்தி) என்பது இறை நிலைக்கே முழுவதும் பொருந்தி வருவதாகும்.

இத்தன்மையை விளக்கிக் கடவுள் வாழ்த்தாகப் பாடுவது உண்டு. “வாடா வள்ளியின் வளம்பல தரும் நாடு” (பெரும்பாணர் – 370) என்பதனையும் காண்க. ●

## தங்கமோ தங்கம்

பச்சைத் தங்கம் எனப்படுவது மூங்கில். திரவத் தங்கம் எனப்படுவது பெட்ரோல். மூலிகைத் தங்கம் எனப்படுவது துளசி. வெள்ளைத் தங்கம் எனப்படுவது பருத்தி.

– பா.இசக்கிமுத்து, வெள்ளானைக்கோட்டை



## காந்தியடிகள் தமிழ்ப் பண்பாட்டு மையம்
## காந்தியடிகள் மெட்ரிக் மேனிலைப் பள்ளி

நடத்தும் மாபெரும் இலக்கியத் திருவிழா !

# ஐம்பெரும் காப்பிய விழா

# அழைப்பிதழ்

நாள் : 18.5.2019 சனி மாலை : 5.30 மணி 19.5.2019 ஞாயிறு காலை :10, மாலை : 5.30 மணி

இடம் : காந்தியடிகள் கல்வி நிறுவனம், பாரதி அரங்கம், இடையபாளையம், கோவை–25.

**கலந்து கொள்வோர் :**

நாவுக்கரசர் **சோ. சத்தியசீலன்** அவர்கள்

பேரறிஞர் **சொ.சொ.மீ. சுந்தரம்** அவர்கள்

கவிஞர் **சிற்பி பாலசுப்பிரமணியம்** அவர்கள்

புலவர் **ரெ. சண்முக வடிவேல்** அவர்கள்

முனைவர் **விஜயசுந்தரி** அவர்கள்

கவிஞர் **புவியரசு** அவர்கள்

கவிஞர் **பெ. சிதம்பரநாதன்** அவர்கள்

டாக்டர் **இரா. மாது** அவர்கள்

திரு. **ப. அன்பழகன்** அவர்கள்

இலக்கியத் தேன் பருக...!
அனைவரும் வருக வருக...!!

இவ்வண்ணம்
கே.ஏ. சுப்பிரமணியன் – ஆர்.சண்முகசுந்தரம்
தொலைபேசி : 0422–2400236 / 4980343



# அயோத்திக்கு சமரசத் தீர்வு வெற்றி பெறுமா?

## விவாதக் கடிதங்களில் சில... சில.. சில...

அயோத்திக்குச் சமரசத் தீர்வு வெற்றி பெறுமா எனும் கேள்விக்கு எனது ஒரே பதில் 'பெறாது' என்பது தான். இதற்கு முழுமுதல் காரணம், அரசியல்வாதிகளின் அத்துமீறலான நுழைவு என்பதாகும். மேலும் மேலும் பலப்பல ஆண்டுகள் தீர்வு காணப் படாமல் அதனைக் காரணமாக்கி பாரத மக்களை ஏமாற்றி அரசியல் நடத்தலாம். எனவே, தீர்வு இல்லை.

– **ப. மூர்த்தி,** பெங்களூரு.

அயோத்தியில் ராமர் கோயிலும் இருக்க வேண்டும், பாபர் மசூதியும் இருக்க வேண்டும். இடம் இல்லாத வர்க்கு விட்டுக் கொடுக்க வேண்டும். அதுதான் சமரசத்தின் தொடக்கம். உச்சநீதிமன்றமே சமரசத்துக்கு இசைந் தது பெரிய விஷயம். வாய்ப்பைப் பயன் படுத்தி இந்துக்களும், முஸ்லீம்களும் அயோத்தியில் இணைந்து வாழலாம்.

– **அ. சம்பத்,** திருவரங்கம்

எங்கள் ஊரில் இந்துக்களும், முஸ்லீம்களும் அண்ணன் தம்பி போல் பழகி வாழ்ந்து கொண்டிருக்கிறோம். பொங்கல் பண்டிகை, தீபாவளிக்கு நாம் செய்யும் பலகாரங்களை அவர்கள் அன் போடு பெற்றுக் கொள்கிறார்கள். அதே போல் முஸ்லீம்களின் பக்ரீத், ரம்சான் பண்டிகைகளில் அவர்கள் வீட்டி லிருந்து கஞ்சி, பிரியாணி வகைகளை இந்துக்கள் பெற்றுக் கொள்கிறார்கள். ஆகவே, இரு மதத்தாரும் சம்மதிக்கும் படி முடிவு ஏற்பட வேண்டும்.

– **தி.ஈ.தி. ஈசுவர் மூர்த்தி,**
ஸ்ரீவில்லிப்புத்தூர்.

அயோத்தி ராமர் கோவிலுக்குச் சம ரசத் தீர்வுக்கு வெற்றி வாய்ப்பு இல்லை. சரயு நதிக்கரையை ஒட்டி அயோத்தி நகரம் இருக்கிறது. தசரதன் என்ற அரசன் ஆண்டான் என்பதும், ராமர் அங்கு பிறந்தார் என்பதும் ஏற்றுக் கொள்ள முடியாது. சமரசம் வேண்டு மென்றால் 2.77 ஏக்கரில் சமமாக இரண்டு மத மக்களுக்கும் பிரித்துக் கொடுத்துச் சமாதானம் செய்வது நல் லது. விட்டுக் கொடுப்பவன் கெட்டுப் போவதில்லை. மதத்தின் மேலும், கட வுள் மேலும் நம்பிக்கை உள்ள இரு பிரி விலும் கண்டிப்பாக ஏற்றுத்தான் ஆக வேண்டும். இதுவே சமரசத்துக்கு வழி.

– **முசிபுசி முத்துக்குமார்,**
ஸ்ரீவில்லிப்புத்தூர்.

படிப்பது இராமாயணம், இடிப்பது பிள்ளையார் கோவிலா? என்பது மருவி, இடித்தது பாபர் மசூதி என்றானது. அது தவறானது. தவிர, துரதிருஷ்ட மானது. வழிபடு முறைகளில் குறைபாடு கள் இருப்பினும் இராமரும், பாபரும் வழிபட்டது ஈஸ்வரரை, அல்லாஹ் வையே. இத்தருணம் சர்ச்சைக்குரிய சிறு இடம் மூன்றாகப் பகிர்மானம் பெறுவது அறவே ஒதுக்கப்பட வேண் டும். மாறாக, எல்லாத் தரப்பு மக்கட்கும் அச்சிறு இடம் (2.77 ஏக்கர்) மற்றும் அது சார்புப் பகுதி, ஒற்றுமையின் சின்னமாகத் திகழ யாவரின் ஆதர வோடு, திருப்தியோடு அமைக்கப்பட் டால் (அமையப் பெற்றால்) நல் அமைதி நிலவும். அனைத்துத் தரப்பு மக்களும் தரிசனம் காண வழி பிறக்கும்.

– **எஸ்.ஜி. இசட்கான்,** திருப்பூர்.

இந்துக் கோவில் இருந்த இடத்தில் தளபதி மீர்சாகிப் பாபர் மசூதியைக் கட்டினான் என்பது உண்மையென்றால், அந்த இடம் ராமருடைய ஜென்ம பூமிதான் என்பதற்கு ஆதாரம் எதற்கு? இஸ்லாமியர் ஆட்சியில் ராமர் ஜென்ம பூமியின் ஆவணங்கள் அழிக்கப்பட்டிருக்கும் என்பதில் சந்தேகமே வேண்டாம். அயோத்தி, காசி, மதுரா ஆகிய மூன்று இடங்களிலும் உள்ள இஸ்லாமியரின் விருப்பத்தின்படி – அவர்களின் ஒப்புதலின்படி வேறு இடத்தில் அரசு செலவில் மசூதிகளை அமைத்துத் தந்து சமரசம் செய்ய வேண்டும்.

– **இரா. கல்யாணசுந்தரம்**, மதுரை.

இந்தியா பல மொழிகள் பேசும் மக்கள் வாழும் நாடு. மொழியால், இனத்தால், கலாச்சாரத்தால், மதத்தால் வேறுபட்டிருந்தாலும், உடன்பிறந்த சகோதரர்களைப் போன்று வாழ்ந்து வருகிறோம். ஒரு மதத்தினர் வழிபடும் முறையில் மற்றொருவர் தலையிடுவதில்லை. இந்துக்கள் புனிதத் தலமாகக் கருதப்படும் இடங்களை இஸ்லாமியர்களும், இஸ்லாமியர் புனிதமாகக் கருதும் இடங்களை இந்துக்களும் விட்டுக் கொடுத்துச் சமரசத் தீர்வு ஏற்படுமானால், மக்கள் மகிழ்ச்சி அடைவார்கள்.

– **ப. அடைக்கலம்**, ஸ்ரீவில்லிப்புத்தூர்.

'பரஸ்பரம் சண்டையிடப் போதிக்கும் மதம் மதமாகாது' என்று முறையே புத்தரும், இக்பாலும் போதித்த நன்மொழிகளைக் கவனத்தில் வைத்து, மத வெறியர்களை இனங்கண்டு விலக்கி, கௌரவம் பார்க்காமல் சமரசத் தீர்வு எட்டப்பட, இரு மதத்தினருமே இணக்கமுடன் செயல்பட்டு, அமைதியான சூழலை உருவாக்க வேண்டும் என்பதே எல்லோரது எதிர்பார்ப்பாகும்.

– **நவீன்குமார்**, நடுவிக்கோட்டை.

ஆட்சி அதிகாரம் கையில் இருக்கிறது என்று அன்று ஒரு முஸ்லீம் செய்த தவறான செயல், இன்று பல முஸ்லீம்களை வெகுவாகப் பாதிக்கிறது. நடுநிலையோடு செயல்பட வேண்டும். பல மொழிகள், பல மதங்கள், பல்வேறு தரப்பு மக்கள் வாழும் இப்புண்ணிய பூமியில் ஒரு சில நேரங்களில் இது போன்று நிகழ்வு நடைபெறாமல் இனி வரும் காலத்தில் பார்த்துக் கொள்ள வேண்டும். எல்லோருக்கும் அவரவர் மதம் பெரிதுதான்.

– **ர. பார்வதி ரங்கசாமி**,
கைக்கோளர்பாளையம்.

இந்தியாவில் இந்துக்கள் சிறுபான்மையினராகவும், இஸ்லாமியர்கள் பெரும்பான்மையினராகவும் இருப்பார்களேயானால், இப்போது இராமர் கோயில் கட்டச் சுமுகமான பேச்சு வார்த்தை நடத்திக்கொண்டு இருப்பார்களா? இந்து மக்கள் சுதந்திரமாக வாழ முடியுமா? இந்துக் கோயில்கள் இருக்குமா? வழிபட முடியுமா என்பதை மக்கள் யோசிக்க வேண்டும். இந்துக்களின் வாழ்வு கேள்விக்குரியதாகியிருக்கும்.

– **மு. கணபதி**, பெருந்துறை.

அயோத்திச் சிக்கலுக்குத் சமரசத் தீர்வு வேண்டும். இந்துக்கள் இந்தப் பாரம்பரிய மண்ணின் மைந்தர்கள். முஸ்லிம்கள் இந்தியாவுக்கு வருமுன்னரே ராமஜன்மபூமி இருந்தது. இஸ்லாம் ஆட்சியால் அது மாறுதல் அடைந்தது என்பது வரலாற்று உண்மையாதலால், பழைய மரபைப் பழையவர்கட்கு விட்டுக் கொடுப்பது தான் நலலது. அதனால், பக்கத்தில் மசூதி அமைத்து வழிபடுவதால் எந்தக் குறையும் நேராது. கேட்க எண்ணுவது சரியான எண்ணமும் ஆகாது. அந்த ஈரிடத்தின் வழிபாட்டில் சிக்கல் இல்லாதபோது, இந்துக்கள் கேட்கவோ, அதற்காக முஸ்லிம்கள் விட்டுக்கொடுக்கவோ வேண்டிய தேவைக்கு இடமே இல்லை.

– **தெ. முருகசாமி**, புதுச்சேரி.

பொதுவாக, இந்துக்கள் வன்முறையில் ஈடுபட விரும்பாதவர்கள். அறநெறிப்படி வாழ்பவர்கள் என்று

நிலவிவந்த அபிப்பிராயம் பாபர் மசூதியை இடித்ததன் மூலம் தகர்த்தெறியப்பட்டு வரலாற்றுப் பிழையாகி என்றும் நீங்காத வடுவாக அமைந்துவிட்டது. இந்துக்களும் மத நல்லிணக்கத்திற்கு அப்பாற்பட்டவர்கள்தான் என்பதையல்லவா இந்நிகழ்வு எடுத்துக் காட்டுகிறது. இனிமேலாவது இதற்கு ஒரு சமரசத் தீர்வு ஏற்பட்டு அமைதி நிலவட்டும்.

– **உ.மு.ந. ராசன் கலாமணி,** கோபிசெட்டிபாளையம்.

**அ**யோத்திக்குச் சமரசத் தீர்வு நிச்சயம் வெற்றி பெறும் என்ற நம்பிக்கை அனைவருக்கும் உண்டு. வழிபடும் தெய்வங்கள் உருவத்தில் வேறுபடலாம். வழிபடும் விதத்தில் வேறுபடலாம். ஆனால், வணங்கும் தெய்வங்கள் கொடுப்பது ஒரே பலனைத்தான். இந்த நம்பிக்கையோடு நாம் அயோத்தியின் சமரசத்தை எதிர்பார்த்தால், நிச்சயம் வெற்றி பெறும். இந்துவோ, இஸ்லாமியரோ, கிறித்தவரோ யாராக இருந்தாலும் முதலில் மனிதன். அதனால், இக்கருத்தை மனதில் நிலைநிறுத்தி உச்ச நீதிமன்றம் யோசித்தால், நிச்சயம் இந்தத் தீர்வு சமரசமாகவே முடியும். நம்பிக்கையோடு காத்திருப்போம்.

– **உஷா முத்துராமன்,** மதுரை.

**1852**–ஆம் ஆண்டிற்கு முன்பு அயோத்தியில் பாபர் மசூதி இல்லை. இசுலாமிய ஆட்சியின் கீழ் அந்தப்பகுதி இருந்தபோது, அரசின் அதிகாரத்தால் கட்டப்பட்டது. அரசினை எதிர்க்கத் துணிவின்றி அன்றைய மக்கள் இருந்ததனால் இது நடந்தேறியது. பல நூற்றாண்டுகள் இது கனன்று கொண்டே வந்துள்ளது. ஐந்நூறு ஆண்டுகளுக்குப் பின் அதுபற்றி எரிந்தது. இது வெறும் 2.77 ஏக்கர் நிலத்திற்காக ஏற்பட்ட நெருப்பன்று. உரிமைக்காக உருவான நெருப்பு.

மனங்களுக்கிடையே எரியும் நெருப்பை அன்பால் அணைக்க வேண்டும். இணக்கத்தால் அணைக்க வேண்டும். அயோத்தித் தீர்வுக்கும், மதுரா, காசிக்கும் தொடர்பு இல்லை என்று உறுதிப்படுத்த வேண்டும். மூவர் குழு முடிவினை அனைவரும் ஏற்று இந்தியர் எப்பொழுதும் வேற்றுமையில் ஒற்றுமையைக் காண்பவர் என்ற பண்பாட்டை நிலைநாட்ட வேண்டும். மதங்களுக்கு அப்பாற்பட்டது மனிதம் என்ற மனப் பக்குவத்தை நாம் அடைந்தால் பகை இல்லை. அமைதி நாடாக இந்தியா திகழும்.

– **புலவர் கருமலைத் தமிழாழன்,** ஒசூர்.

**ந**ம் பாரத நாட்டில் இஸ்லாமியர்களைச் சிறுபான்மையினர் என்று கூறுகிறோம். ஆனால், பெரும்பான்மையாக உள்ள இந்துக்களிடம் இல்லாத மதப் பற்றும், மொழிப்பற்றும் அவர்களிடம் அதிக அளவு உள்ளன. அவர்களிடம் சகிப்புத்தன்மை மிகவும் குறைவு. அயோத்தியில் உள்ள இராமர் கோயிலை மறுசீரமைக்க எதிர்ப்புத் தெரிவிப்பவர்கள், காசி, மதுராவிலுள்ள மசூதிக்கான இடங்களைத் தர முன்வர மாட்டார்கள். உச்சநீதிமன்றம் மேற்கொண்ட சமரசத்தீர்வை ஏதாவது ஒரு காரணம் காட்டி மறுப்பார்கள். இதற்கு அரசியல்வாதிகள் துணை நிற்பார்கள்.

– **என். ஆர். ஜெயசந்திரன்,** காவேரிப்பட்டணம்.

**இ**ந்தியாவில் எவ்வளவோ கோயில்கள் தீப ஆராதனையின்றி மூடிக் கிடக்கின்றன. இராமர் எமக்குக் கோயில் கட்டப்படவில்லையே என இந்துக்களைக் கேட்டுக் கொண்டாரா? இல்லவே இல்லை. அவ்வாறிருக்க, மத நல்லிணக்கத்தைக் காப்பாற்றுவதற்குப் பதிலாகப் புயலைக் கிளப்பி விட்டார்கள். வேதனைப்பட வேண்டிய விஷயம். உண்மையில், இந்துக்கள் அகிம்சா முறையில் அணுகியிருந்தால் வெற்றி பெற்றிருக்க முடியும். முற்றுப்புள்ளி வைத்துவிட்டார்கள். பாபர் மசூதிப் பிரச்சனைக்கான சமரச நிலை வெற்றி பெறுமா? என்பது இன்றைய காலகட்டத்தில் கேள்விக்குறியே!

– **லிங்கம் சின்னசாமி,** தாராபுரம்.

காவாய் கனகத்திரளே போற்றி ! கயிலை மலையானே போற்றி !! போற்றி !!





கிரி

இந்திய கலாச்சாரம் மற்றும் பாரம்பரியத்திற்கு

SHIVAM GROUP
HOLIDAY



திருக்கயிலாய யாத்திரையில்
14 வருட அனுபவமுள்ள நிறுவனம்

# திருக்கயிலாயம் மானஸரோவர்
# முக்திநாத் யாத்ரா 2019

**மார்ச் 31 முதல்**
**மதுரையில் சிவம் குரூப்**
**புதிய கிளை ஆரம்பம்**

ஔவையாரை விநாயகப் பெருமான் தனது துதிக்கையால் தூக்கி வைத்த இடம் கயிலை மலை. நால்வர்களுள் ஒருவரான அப்பர் உருண்டு, புரண்டு, ஊன்தேய, உடல்தேய பயணம் செய்த மலை கயிலை மலை. காரைக்கால் அம்மையார் தனது காலடி தரையில் படக்கூடாது என்று நினைத்து தலையால் நடந்த இடம் கயிலை மலை. எண்ணற்ற மகான்கள் அரூபமாகவும் சொரூபமாகவும் நித்தம் நித்தம் பயணம் செய்து கண்கொள்ளாக் காட்சியைக் கண்டு அந்த ஆனந்தத்தில் ஜோதியோடு ஜோதியாகும் புனித மலை. இத்தகைய உன்னதமான இத்திருக்கயிலாய மலையில் தினம் தினம் தேவ தேவர்கள் வலம் வந்துக் கொண்டிருக்கிறார்கள். சிவ கணங்கள் வாழ்ந்துக் கொண்டிருக்கிறார்கள். சப்த ரிஷிகள் தவம் செய்துக்கொண்டிருக்கிறார்கள். இப்புனித யாத்திரையை சிவம் யாத்ரா சார்பில் 3000 யாத்திரைகளை அழைத்துச்சென்று கிரிவலம் வந்து மற்றும் மானஸரோவரில் புனித நீராடி மகாதேவனின் அருளைப்பெற்றுள்ளோம். பௌர்ணமி அன்று மானஸரோவரில் நீராடவும் கயிலையை கிரிவலம் வரவும் சிறப்பாக ஏற்பாடு செய்துள்ளோம்.

| | | |
|---|---|---|
| சென்னையிலிருந்து காட்மாண்டு சென்று கெருன் வழியாக கயிலாயம் தரிசித்து வர 14 நாட்கள் | லக்னோ வழியாக விமானம் மற்றும் ஹெலிகாப்டர் மூலம் கயிலாயம் தரிசித்து வர 11 நாட்கள் | காட்மாண்டிலிருந்து ஹெலிகாப்டர் மூலம் கயிலாயம் தரிசித்து வர 12 நாட்கள் |
| மே 12, ஜூன் 11, ஜூலை 10, ஆக 9, செப் 7 | மே 14, ஜூன் 13, ஜூலை 12, ஆகஸ்ட் 11, செப்டம்பர் 9 | மே 13, ஜூன் 12, ஜூலை 11, ஆகஸ்ட் 10, செப்டம்பர் 8 |
| புத்த பூர்ணிமா சிறப்பு தரிசனம் | புத்த பூர்ணிமா சிறப்பு தரிசனம் | புத்த பூர்ணிமா சிறப்பு தரிசனம் |

**நாங்கள் குறிப்பிட்டுள்ள எங்களது கட்டணத்தில் எந்த மாற்றமும் இருக்காது. யாத்திரைக்கு புறப்படுவதற்கு முன் வேறு எந்த காரணத்திற்காகவும் கூடுதலாக பணம் வாங்க மாட்டோம். இதை மற்ற நிறுவனத்திடம் ஒப்பிட்டு உறுதிப்படுத்திக்கொள்ளவும்.**



எங்கள் நிறுவனத்துடன் திருக்கயிலாயம் யாத்திரையில் கலந்து கொண்டவர்களின் ஆலோசனை கேட்டு முன்பதிவு செய்யவும்
இந்தியாவிலேயே மிக உயர்தரமான சேவை வழங்கி நியாயமான கட்டணத்துடன் அழைத்து செல்லும் முதல் நிறுவனம்

முக்திநாத் யாத்ரா — சென்னையிலிருந்து இரயில் வழி 11 நாட்கள் விமானம் வழி 6 நாட்கள் **24,900/-** மட்டுமே
போக்ரா to ஜோம்ஜோம் விமான கட்டணம், உணவு, A/c ரூம், நேபாள் பர்மிட், பஸ் வசதி

**காசி, லும்பினி, போக்ரா, முக்திநாத், காட்மாண்டு இரயில் மூலம் 12 நாட்கள் ரூ. 13,900/-**

## ஸ்ரீலங்கா ராமாயணா யாத்ரா



சிறப்பு தரிசனம் : ராம நவமி, அனுமந் ஜெயந்தி, ராமாநுஜ ஜெயந்தி

**புறப்படும் நாள் :**
ஏப்ரல் 14, ஏப்ரல் 19, மே 9

முனீஸ்வரன் கோயில், மனவாரி கோயில், சீதா குகை, கண்டி கதிர்காமம் முருகன் கோயில், சீதா தேவி, முனீஸ்வரன் கோயில், திவுரும்பேலா கோயில், அசோகவனம், பஞ்சமுக ஆஞ்சநேயர் கோயில், கொழும்பு, நெகெம்போ, கண்டி, நுவராஎலியா, திருகோணேஸ்வரம்



மாதம் ஒரு குழு புறப்படும் நாள் :
ஏப் 25, மே 9, ஜூன் 13, ஜூலை 11, ஆக 22, செப் 19
சன் டி.வி. புகழ்
ஜீவநாடி ஜோதிடர் நல்லநேரம் திரு. நாகராஜன் அவர்கள் தலைமையில்
**7 நாட்கள் ரூ.44,900/-**

## காசி, புத்தகயா பிரயாக்ராஜ்

இரயில் மூலம் புறப்படும் நாள்
சிறப்பு தரிசனம்
**தை அமாவாசை பிப் 2,**
**மஹாசிவராத்ரி மார்ச் 1,**
**சித்ரா பௌர்ணமி ஏப் 16**
மே 1,31, ஜூலை 28, ஆக 27

விமானம் மூலம் புறப்படும் நாள்
ஏப் 17, மே 2, ஜூன் 1
ஜூலை 29, ஆக 28,
இரயில் மூலம் 9 நாட்கள்
விமானம் மூலம் 6 நாட்கள்
**ரூ.10,900/-**
இரயில் / விமானம் கட்டணம் தனி

## ஜார்தாம் யாத்ரா

கேதார்நாத், பத்ரிநாத், கங்கோத்ரி, யமுனோத்ரி

ஹரித்வார், மாயா என்னும் மோட்சபுரி, ரிஷிகேஷ், ராம்ஜூலா, லக்ஷ்மன் ஜூலா தொங்கு பாலங்கள், கேதார்நாத் ஜோதிர்லிங்கம், மந்தாகினி நதி, பத்ரிநாத் திவ்யதேசம், ஜோஷிமட், அலக்நந்தா நதி, தேவபிரயாகை, விஷ்ணு பிரயாகை திவ்யதேசம், கங்கோத்ரி, யமுனோத்ரி

| இரயில் மூலம் புறப்படும் நாள் | விமானம் மூலம் புறப்படும் நாள் |
|---|---|
| மே 8,22, ஜூன் 12, செப் 11, 25, அக் 2, | மே 10,24 ஜூன் 14, செப் 13, 27, அக் 4 |

இரயில் மூலம் 16 நாட்கள் - விமானம் மூலம் 12 நாட்கள்
**ரூ.27,900/-** சென்னை to டெல்லி போக வர விமான மற்றும் இரயில் கட்டணம் தனி

சிவம் குரூப் நேபால் தலைமையிடமாக கொண்டு செயல்படும் நிறுவனம், திபெத் நேபாள் அங்கீகாரம் பெற்ற நிறுவனம்

**NEPAL :** P.O.Box : 7628, Lazimpat, Kathmandu.
**CHENNAI** 79, TSV Koil Street, Mylapore, Chennai - 4.
**MADURAI** 20, Koodalagar Sannathi St, Perumal Koil Street Madurai-1

**9884111414**
**044-2462 9878**

yatra@giri.in | shivamyatra@gmail.com | www.shivamyatra.com | www.shivamholiday.com




# விருதுகளை அலங்கரிக்கும் 'புலிட்சர்'

வி. வெற்றிவேல்மணி

நாலந்தா பல்கலைக்கழகம் போன்ற மிகச் சிறந்த பல்கலைக் கழகங்களிலிருந்து அறிவுமிக்க நூல்களைப் படகில் ஏற்றிக் கொண்டு சீனாவை நோக்கித் தனது சீடர்களுடன் சீனப் பயணி 'யுவான் சுவாங்' பயணம் செய்து கொண்டிருந்த நேரமது.

எதிர்பாராத வகையில் அவர்கள் பயணித்த ஆற்றில் பெரும் காற்றுடன் கூடிய வெள்ளம். எடை காரணமாகப் புத்தகங்களுடன் கூடிய படகு கவிழ்ந்துவிடும் அபாயம். சற்றும் தாமதியாமல் படகிலிருந்து அந்தப் பெரு வெள்ளத்தில் குதித்துத் தம் உயிர் நீத்து, 'யுவான் சுவாங்'கை யும், அவர் கொண்டு வந்த நூல்களையும் காத் தனர் அவரது சீடர்கள்.

நூல்களே ஒரு நாட்டின் மேதைமைக்கு மிகச் சிறந்த காரணம் என்ற கொள்கையில் நம்பிக்கை கொண்டிருந்தனர் யுவான் சுவாங்கின் சீடர்கள்.

**"நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்**

**பண்புடை யாளர் தொடர்பு"** (783)

என நூல்களின் மேன்மையை தெய்வப்புலவர் திரு வள்ளுவரும், புத்தகங்களே எனது வாழ்வின் வழி காட்டிகள் என்று மகாத்மா காந்தி அடிகளும் புத் தகங்களின் மேன்மையைப் பறைசாற்றுகின்றனர்.

'என்னைத் தேடி வா... உலகம் உன்னைத் தேடி வரும்' என நம்மை வரவேற்கும் நல்ல நூல் கள் நிறைந்த ஒவ்வொரு நூலகமும் திறக்கப்படும் பொழுது, பல சிறைச்சாலைகள் மூடப்படுகின்றன என்கிறார் ஒரு மூதறிஞர்.

மனிதனை மிகச் சிறந்த மனிதனாகவும், அறி ஞனாகவும், ஆன்மிக ஞானியாகவும் வழிநடத்து வதில் நூல்களின் பங்கு தலையாயது என்றால், இன்று உலக அளவில் மிகச்சிறந்த நூல்களை அலங்கரிக்கும் விருதுதான் 'புலிட்சர்'.

விஞ்ஞானம், இலக்கியம், சமாதானம், பொரு ளாதாரம் இவற்றில் சிறப்பாகப் பங்கேற்ற மேதைகளை அலங்கரிக்கும் தலையாய விருது 'நோபல்.' மிகச்சிறந்த திரைப்பட இலக்கியங்களை அலங்கரிக்கும் விருது 'கோல்டன் குளோப்' (Golden Globe) மற்றும் 'ஆஸ்கார்' விருதுகள். இவைபோல், உலகின் மிகச்சிறந்த நூல்களுக்கு அதன் படைப்பாளிகளை கௌரவிக்கும் விருது தான் 'ஜோசப் புலிட்சர்' என்ற அமெரிக்கரின் 'புலிட்சர்' விருது.

தனது இளம் வயதிலேயே இராணுவத்தில் சேர முற்பட்டு, அதற்குத் தகுதி இல்லாததால் மிக மனமுடைந்து பத்திரிகையில் நிருபர் வேலைக்கு எளிய ஊதியத்தில் சேர்ந்தவர் இவர். படிப்படி யாகப் பத்திரிகை நுணுக்கங்களைக் கற்றுப் பல மொழிகளில் புலமை பெற்றார் புலிட்சர். படிப்படி யாக உயர்ந்து, அமெரிக்காவின் மிகச்சிறந்த பத்திரிகையான 'நியூயார்க் வேர்ல்டு' என்ற பத்திரிகையின் புகழ்பெற்ற இயக்குநர் ஆனார்.

ஒரு ஜனரஞ்சகப் பத்திரிகையில் ஒழுக்க மான முறையில் கதைகள், செய்திகள், கார்ட்டூன் கள், விளையாட்டுச் செய்திகள் என்ற வரை யறையை ஒரு முன்னோடியாகக் கலங்கரை விளக் கம் போல் கொண்டு வந்தவர் இந்தப் புத்தகங் களின் காதலர் ஜோசப் புலிட்சர்.

பத்திரிகைச் சுதந்திரத்தையும், பத்திரிகை எழுத்தாளர்களின் வரைமுறைகளையும் தனது 40 வயதிலேயே வரையறுத்த இந்த மேதையின் முடிவு தான், ஆண்டுதோறும் புத்தகங்களை அலங் கரிக்கும் அமெரிக்க விருதான 'புலிட்சர்.'

புத்தகங்களை வாசிப்பவர்களுக்கும், நேசிப் பவர்களுக்கும் ஒரு செய்தி! புத்தக இலக்கியங் களுக்கும், படைப்புகளுக்கும் இலக்கணங்களை வரையறுத்து உலகின் மிகப்பெரிய விருதினைப் புத்தகங்களுக்குக் கொடுத்த மதிப்பிற்குரிய ஜோசப் புலிட்சருக்கு, 40 வயதிலிருந்தே இரு கண்களும் தெரியாது என்ற செய்தி மிகப்பெரிய ஆச்சரியம்!

# புத்தக மதிப்பீடு

## பாரதியார் பதில்கள் நூறு

தொகுப்பாசிரியர் : ஔவை அருள், வெளியீடு : ஸ்ரீராம் பாரதி இலக்கியக் கழகம், 12/6, போயஸ் சாலை, தேனாம்பேட்டை, சென்னை – 18. போன் : 044 – 43418700. பக். : 148, விலை : இலவச வெளியீடு.

மகாகவி பாரதியாரின் 137–ஆம் பிறந்த நாள் நினைவாக ஸ்ரீராம் பாரதி கலை இலக்கியக் கழகத்தின் சார்பில் வெளியிடப்பட்டிருக்கும் நூல். 'பாரதியார் பதில்கள் நூறு' என்று புதிய வடிவத்தில் இதைத் தொகுத்தளித்திருப்பவர் தமிழறிஞர் ஔவை நடராசன் அவர்களின் திருமகனான ஔவை அருள். பாரதியின் படைப்புகளை நன்கு கற்று, அதில் ஆழ்ந்து தோய்ந்த நூலாசிரியர், பாரதியின் சிந்தனைக் கருத்துக்களிலிருந்து நன்கு தேர்ந்தவற்றை நூறு கேள்வி – பதில்களாகத் திரட்டித் தந்திருக்கிறார். இக்கேள்விகளுக்கான பதில்களில் பாரதியின் வாழ்வு, சமுதாயப் பார்வை, நாட்டுப்பற்று, தேசியத் தலைவர்களுடனான சந்திப்புகள் முதலானவற்றைத் தெளிவுறத் தெரிந்து கொள்ள முடிகிறது. எளிய, இனிய தமிழில் உள்ள இந்நூலைப் பள்ளி மாணவர்கள் படித்தால், பாரதியின் பன்முக ஆற்றல்களையும், பரந்துபட்ட சிந்தனையையும், ஆழ்ந்த கருத்துக்களையும் நன்கு அறிந்து கொள்ளவும், புரிந்து கொள்ளவும் முடியும்.










## வர்ணம், சாதி, தீண்டாமை இந்தியாவில் மட்டுமா?

ஆசிரியர் : ச. ஆரோக்கியசாமி, வெளியீடு : பாபா பதிப்பகம், 3473 – 1, தெற்கு 2–ஆம் வீதி, புதுக்கோட்டை – 622 001. போன் : 04322 – 222337. பக் : 124, விலை : ரூ. 140/–

இந்து மதத்தில் சாதிகள், முஸ்லிம் மதத்தில் சாதிகள், சாதியைக் கெட்டிப்படுத்திய அகமண முறை, உலகம் முழுவதுமுள்ள தீண்டாமை, இட ஒதுக்கீட்டு வரலாறு, பணி உயர்வில் இட ஒதுக்கீடு, சாதியும் இடஒதுக்கீடும், சாதிகள் உருவாக்கத்திற்கு மொழியின் பங்கு, இந்து மதம் உருவாக்கிய நான்கு வருணங்கள் இப்படி இன்னும் பல தலைப்புகளில் பதினைந்து கட்டுரைகள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. மேற்சொன்னவற்றில் உள்ள சமூக, பொருளாதார முரண்பாடுகள், ஏற்றத் தாழ்வுகள், சிக்கல்களுக்குப் பதில் சொல்லும் முகமாக நூலாசிரியர் எடுத்த முயற்சியே இந்நூல். அதாவது, அனைத்துச் சாதி மக்களிலுமுள்ள நலிந்தோர்கள் பயனடைய வேண்டும் என்பதே நோக்கம் என்ற கருத்திலமைந்த நூல்.

## அச்சுறுத்தும் எச்சரிக்கையும், அதற்கான தீர்வுகளும்

ஆசிரியர் : டாக்டர் ந. மணி, வெளியீடு : பிரியா – அபர்ணா பதிப்பகம், 2/ 64, வி.எஸ்.வி. கோயில் தெரு, மயிலாப்பூர், சென்னை – 4. பக் : 105, விலை ரூ. 50/–

இவ்வுலகில் மனிதர் உள்ளிட்ட அனைத்து உயிர்களும் நலமுடன் உயிர்வாழப் பெரிதும் உதவுபவை பஞ்சபூதங்கள். இவற்றிற்கு மாசு ஏற்படுத்தாதவாறு மனித வளர்ச்சி இருக்க வேண்டும். அதற்கு மிக முக்கியக் காரணமாக இருப்பது சுற்றுச்சூழல். சூழல் மாறுபட்டால் நம்மைச் சுற்றியுள்ள அனைத்திலும் மாசு ஏற்பட்டு மனித வாழ்வு வெகு சீக்கிரம் மங்கிவிடும். தற்காலத்தில் வளர்ச்சி என்ற நோக்கில் சூழல் சீர்கேடு அதிகரித்து வருகிறது. சுற்றுச் சூழலின் அவசியம் பற்றி விழிப்புணர்வு இல்லையென்றால், இயற்கையே நமக்கு எதிரியாகிவிடும் என்று கூறி, சூழல் சீர்கேட்டினைக் களைவதற்கான தீர்வுகளை நாற்பது கடிதங்களின் வாயிலாக அறிவுறுத்தியுள்ளார் நூலாசிரியர் டாக்டர் ந. மணி. குறிப்பாகச் சுற்றுச்சூழல் பாதுகாப்பில் இளைஞர்களின் பங்கு மிகவும் முக்கியம் என்று குறிப்பிடுகிறார். பள்ளிப் பாடத்திட்டத்தில் சேர்க்கப்பட வேண்டிய முக்கியமான நூல் இது.

– எம்.எஸ்.

*அட்டைப்பட விளக்கம்*

# கையில் ஒரு வீணை கண்முன் இன்னொரு வீணை...




மனோகரமான இரவு நேரம். நிலா முற்றம். அதில் நிறை கர்ப்பிணி ஒருத்தி நித்திரையில் ஆழ்ந்து கிடந்தாள். சரபப் பறவையொன்று அவளைத் தூக்கிக் கொண்டு சென்றது. ஒரு மலை முகட்டில் வைத்துவிட்டுப் போய்விட்டது. சூரியன் உதயமாகிக் கொண்டிருந்தான். உச்சிமலையில் அவளுக்குப் பிரசவம். உதிரத் தெப்பத்தில் ஒரு தங்கத்தோணி. உதயணன் இப்படித்தான் உருவானான்.

அனாதைகளாகிவிட்ட அந்தப் பசுவும், சிசுவும் அங்கிருந்த ஆசிரமம் ஒன்றில் அடைக்கலமாயினர். அந்தச் சின்னவன் வளர்ந்தான். கவுசாம்பி தேசம் அவனை மன்னவனாக்கி மகிழ்ந்தது. வாளும் வேலும் அவனுக்கு விளையாட்டுப் பொம்மைகள். யாழும் இசையும்தான் அவனுக்குப் பொழுது போக்கு. மத யானையைக்கூட மதுர வீணையால் அடக்கியவன்.

நிர்மலமான வானத்தில் நீந்திக் கொண்டிருந்த சூரியனை, திடீரென்று மேகங்கள் மறைத்தன. பூமி இருண்டது. கவுசாம்பி தேசத்தின் யுத்த மேகங்களால் உதயணன் அப்படித்தான் மறைந்தான். எதிரிகள் அவனை ஏமாற்றிக் கட்டித் தூக்கிக்கொண்டு உஜ்ஜைனி நகருக்குப் போய்விட்டனர். உதயணன் அங்கே ஒரு சிறைக் கைதியாய் வைக்கப்பட்டான்.

ஒரு நாள்...

உஜ்ஜைனி நகரத்தின் பட்டத்து யானைக்கு மதம் பிடித்துவிட்டது. ஊரையே அழிக்கத் தொடங்கி விட்டது. அடக்கத் தெரியாத அரசன் அஞ்சி நடுக்கமுற்றான். வேலெடுத்துச் சென்ற வீரர்களுக்கு அடங்காத யானை, உதயணன் யாழெடுத்து வந்தால் அடங்குமென்று சேதி தெரிவிக்கப்பட்டது. அரச விண்ணப்பத்திற்கு உதயணன் செவி சாய்த்தான். அந்தப் பருத்த உருவத்தின் பெருத்த வயிறை இசையினாலேயே நிரப்பினான். யானையின் பிடரியில் யாழோடு அமர்ந்து ராஜ வீதியில் ஊர்ந்து வந்தான். பயந்து போன ஜனங்கள் வியந்து போனார்கள்.

அரச மாளிகையை நோக்கி அந்த யானை வந்தபோது, வழியில் ஒரு கன்னிமாடத்தின் திறந்த ஜன்னலில், தீபச்சுடர் போல் ஒரு முகம். பறவை இரண்டு சிறகடிப்பது போல அவள் கண்கள் அப்படித் துடித்தன. ஏதோ ஒரு நீர்ச்சுழலில் மூழ்கித் திக்குமுக்காடிக் கொண்டிருந்தாள். அந்தக் கோல முகப்பரப்பில் முத்துமுத்தாய் வியர்வைப் புள்ளிகள்.

முன்னெச்சரிக்கையே இல்லாமல் மூண்டுவிடும் இந்த யுத்தத்தில் தோற்றவருக்குத்தானே வெற்றி! தோற்றுவிடத்தான் அவள் அப்படித் தவித்தாளோ! அந்த யானை வீரன் இல்லை இல்லை அந்த வீணை வீரன் அவளை அதற்கு அனுமதித்தால்தானே. அவன்தான் அவளுக்கும் முன்பாகத் தோற்றுப் போய்விட்டானே. அவள் யார்? அரசிளங்குமரி வாசவதத்தை.

மத்தகஜத்தை அடக்கிய அந்த மாவீரனைப் பாராட்டிய அரசன், வார்த்தைகளால் அவனை அபிஷேகித்தான். மகள் வாசவதத்தைக்கு யாழ் கற்றுக் கொடுக்க அரசன் வேண்ட, உதயணன் மறுக்கவா முடியும்?

இதனை ஓவியர் ஸ்யாம் காட்சிப்படுத்திய சித்திரத்தைப் பார்த்தால் பசிதீரும்.

– ந.நி.

# வாசகர் கடிதங்கள்

**2019** ஏப்ரல் 'ஓம் சக்தி' இதழின் முகப்பு அட்டையில் தீட்டியுள்ள மீனாட்சி சொக்கநாதர் ஓவியம், உயிரோவியமாகும். ஓவியருக்கு மனம் நிறைந்த பாராட்டுக்கள்.

– **தெ. முருகசாமி,** புதுச்சேரி.

**ஏ**ப்ரல் மாத 'ஓம் சக்தி' இதழின் அட்டைப்படமாக அமைந்த மீனாட்சி உடனுறை சொக்கநாதரின் அழகிய காட்சி, கண்ணையும் கருத்தையும் ஈர்த்ததுடன், உடல், மனத்திற்கு நிறைவைக் கொடுத்தது.

– **தமிழரசு வள்ளல்,** கழுமேட்டுப்பட்டி.

**ந**திநீர் இணைப்பை வலியுறுத்தி 'சுரங்கம்' பகுதியில் வெளியாகியிருந்த 'தேர்தல் அறிக்கையில் ஒரு திட்டம்' எனும் அருட்செல்வரின் கட்டுரை, அரசியல்வாதிகளை நிச்சயம் சிந்திக்க வைக்கும்.

– **ஏ. பாஸ்கர்,** சேலம்.

"**வ**டலூரில் வழிகாட்டும் ஒரு கல்வி நிறுவனம்" பற்றிய நேர்காணலில், அதன் செயலர் இரா. செல்வராஜ் அவர்கள் அளித்திருந்த செய்திகள், அக்கல்வி நிலையத்தை உயர்த்திப் பிடிப்பதாக அமைந்திருந்தன. அவரது பணிகளும் பாராட்டத்தக்கவை!"

– **லிங்கம் சின்னசாமி,** தாராபுரம்.

**இ**ன்று சமூகத்தில் இருக்கும் பிரச்சனைகளுக்கெல்லாம் தீர்வு சொல்வது போல அமைந்த "இன்றைய வாழ்வில் பாலியல் சிக்கல்களும், திருவள்ளுவர் தரும் தீர்வுகளும்" கட்டுரை அருமையோ அருமை!

– **உஷா முத்துராமன்,** திருநகர்.

**ம**றைந்தாலும்கூட மக்கள் மனங்களில் வாழ்ந்து வருபவர்கள் பலர். இவர்களில் ஒருவராக இருந்து வரும் எழுத்துலக மாமன்னர் ஜெயகாந்தன் தொடர்பான பிறந்தநாள் கட்டுரை சிறப்பாக இருந்தது.

– **ப. மூர்த்தி,** பெங்களூரு.

'**ஓ**ம் சக்தி' ஏப்ரல் 2019 இதழில் சுரபி விஜயா செல்வராஜ் அவர்களின் 'பாவச்சோறு' சிறுகதை மிக அருமை. கதையின் முடிவு நெஞ்சை வருடியது.

– **தி. குமாரராஜா,** உடுமலைப்பேட்டை

**ப**ழகிப்பார்த்ததில் இவர்கள் – வித்வான் ல. சண்முகசுந்தரம் பற்றி மரபின் மைந்தன் எழுதியிருந்த கட்டுரை அருமையாக இருந்தது. வித்வானின் தமிழ்ப் பற்றும், டி.கே.சி.யுடனான அவரது நினைவுகளும் இன்பத்தில் திளைக்க வைத்தன.

– **ஜெயா ராஜாமணி,** மதுரை.

**எ**ழுத்தாளர் ஜெய்சக்தியின் 'திருக்குறளும் தன்னம்பிக்கையும்' கட்டுரை நல்ல கட்டுரை. மாணவர்கள் அவசியம் படிக்க வேண்டியது.

–**தி.ஈ.தி. ஈசுவர்மூர்த்தி,** ஸ்ரீவில்லிப்புத்தூர்.

**ஏ**ப்ரல் மாத 'ஓம் சக்தி' இதழில் வெளியான 'பட்டுக்கோட்டையாரின் இசையமுதம்' அருமை. குறுகிய காலமே வாழ்ந்திருந்தாலும், தமிழ் நெஞ்சங்களில் தம் பாடல்களால் என்றென்றும் அழியாது வாழ்பவர்.

– **ப. அடைக்கலம்,** ஸ்ரீவில்லிப்புத்தூர்.

**சி**ந்து சமவெளி நாகரிகம், திராவிட நாகரிகம்தான் என்பதைத் தெளிவாக அறிந்திருந்தும், அதை வரலாற்று ஆய்வாளர் ரோமிலா தாப்பர் மறைக்க முயல்வது கண்டிக்கத்தக்கது.

– **இரா. கல்யாணசுந்தரம்,** மதுரை.

"**கொ**டிய வரலாறுகள் தொடர வேண்டா" எனும் கட்டுரை விழிப்புணர்வையும், வரலாற்று உணர்வையும் ஒருங்கே புகட்டிய கட்டுரை!

– **தஞ்சை கந்தமாறன்,** சென்னை.

**கோ**வை முருகானந்தம் பற்றிய ஆவணப் படத்திற்கு 'ஆஸ்கர்' பரிசு – கட்டுரை சூப்பர்!

– அ.முரளிதரன், மதுரை.

**எ**ழுத்தாளர் ஜெயகாந்தன் பற்றிப் பல குறிப்புகளை அவருடைய நேயர் பி.ச. குப்புசாமி சொல்லியிருந்த விதம் அருமையானது.

– **பி. கோவிந்தசாமி,** ஊத்தங்கரை.

கட்டுரை

# புத்தரும் தீண்டாமையும்

முருகு. இராசாங்கம்

ஐக்கிய நாடுகளில் 'புத்தம்' என்ற தலைப்பில் ஓர் உரையாடல் நடந்தது. அதில் மேலைநாடுகளின் கல்வியாளர்களும், ஆசிரியர்களும், மாணவர்களும் கலந்து கொண்டனர். அதற்குத் தலைப்புகூட "தீண்டப்படாதவரைத் தீண்டுங்கள்" என்பதுதான். அதாவது Touching untouchable castes.

மே மாதம் 10–ஆம் தேதி 2013 ஆண்டு. அதிலே ஒரு



திற்காகத்தான் அவர் காலில் விழுந்து வணங்க வேண்டியிருந்தது" எனக்கு வழிகாட்டியாக வந்தவர் சொன்னார்.

இன்னொரு இடத்தில் கூட ஒரு நான்கு மாதக் கர்ப்பிணியை அவளது கணவன் அடித்து உதைத்தான். ஏனென்றால், அவள் அவனது சாப்பாட்டுக்கும் போதை மருந்துக்கும் பிச்சை எடுத்து வந்து கொடுக்க வேண்டும் என்பது அவனிட்ட கட்டளை. அதை அவள் சரிவர நிறைவேற்றாவிட்டால் இப்படி அடி, உதை

முக்கோண வடிவத்தில் பிரித்துக் காட்டப்பட்டிருக்கிறது. மேலே உச்சியில் பார்ப்பனன். அதற்குக் கீழே இருப்பது சத்ரியன். அதற்குக் கீழே இருப்பது வைசியன். அதற்குக் கீழே இருப்பது சூத்திரன். அதற்குக் கீழே எதுவுமில்லை. கொஞ்சம் கீழே இடைவெளி விட்டு ஒரு கட்டம் இருக்கிறது. அந்தக் கட்டத்தில் தீண்டத்தகாதவர் என்றிருக்கிறது. இவர்கள் வெவ்வேறு சாதியில் இருந்தாலும் அதிலிருந்து நீக்கப்பட்டுத் தெருக் கூட்டுபவர்கள், கழிப்பிடம் சுத்தம் செய்பவர்கள் ஆகியோர் இந்தப் பட்டியலில் வருகிறார்கள்.



ஒருமுறை இந்தியாவிற்குச் சுற்றுப்பயணம் மேற்கொண்டபோது ஒருவன் மற்றவருடைய கால் செருப்பில் தலையை வைத்து வணங்கிக் கொண்டிருந்தான். "என்ன காரணமென்றால், எதிர்பாராத வகையில் இந்த உயர்சாதி மனிதனைத் தீண்டத்தகாதவன் தொட்டு விட்டான். இந்தக் குற்றத்

கிடைக்கும். கர்ப்பிணி என்றும் பாராமல், அவள் அடிக்கப்பட்டாள். அவள் ஒரு தீண்டத்தகாதப் பெண்.

புத்தர், சாதிய ஏற்றத் தாழ்வுகளால் இழைக்கப்படும் அநீதிகளை அங்கீகரிக்க மறுத்து விட்டார். கீழ்சாதி மக்களுடைய துன்பங்களை எடுத்துரைத்தது மட்டுமல்ல, தீண்டத்தகாதவர் என்று சொல்லப்பட்ட உபாலி என்கிற முடிவெட்டுபவனையும், சுனிதா என்கிற தெருக்கூட்டுபவனையும் புன்னா & புன்னிக்கா என்ற அடிமைப் பெண்களையும் மீட்டெடுக்குமாறு தனது தொண்டர்களுக்கு உத்தரவிட்டார்.

இந்த உயரிய நிலையை அடைவதற்கு முன்பு புத்தர் ஒரு சத்ரியராக இருந்தார். தன்னுடைய சங்கத்தில் இருக்கிற தொண்டர்கள் அனைவருக்கும் இந்தச் சங்கம் என்பது கடல் போன்றது. அதில் வந்து கலக்கும் ஆற்றுநீரை நீங்கள் இது எந்த ஆற்று நீர் என்று பிரித்துக் கண்டறிய



*மதுரை அரசு மருத்துவமனையில் திரு. கக்கனைச் சந்தித்து உடல்நலம் விசாரித்த எம்.ஜி.ஆர்.*

முடியாது. அப்படித்தான் நமது சங்கத்திலும் நாம் யாரையும் சாதி வேற்றுமை பார்க்கக் கூடாது என்று ஆணையிட்டிருந்தார்.

இந்தத் தீண்டாமையை ஒழிப்பதற்கு நீண்ட காலம் ஆகும் என்றாலும் அதற்கான ஆலோசனை களை நான் எதிர்பார்க்கிறேன்.

இந்தச் சாதிப் பிரிவினை அமைப்பைப் பற்றித் தெரிந்து கொள்ளாதவர்கள், இந்தியாவில் அது எப்படி வேலை செய்கிறது என்பதை அறிந்து கொள்வதற்கு சில அடிப்படையான அம்சங்களை நான் சொல்கிறேன். சில நூல்கள், யூடியூபில் சில அசையும் படங்கள் Face book-இல் தீண்டத் தகாதவனைத் தீண்டு என்ற பக்கத்தில் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். இதிலே சிலர் கீழ்க் காணுமாறு கேள்வி எழுப்பக் கூடும்.

பழங்காலத்தில் அசோகப் பேரரசர் மிகவும் சக்திவாய்ந்த அரசராக இருந்தார். ஆயினும் அவர் தனது ஆட்சிக் காலத்தில் சாதிப் பிரிவினையை ஒழிக்கவில்லை. ஏன் அதைச் செய்யவில்லை? அவர் தீண்டத்தகாதவர்களை எப்படி நடத்தினார்?

காந்தி தீண்டப்படாதவர்களைக் ''கடவுளின் குழந்தைகள்'' அதாவது ''ஹரிஜன்'' எனப் பெய ரிட்டு அழைத்தார். சாதியை ஒழிப்பதற்கு அவர் முயன்றதில்லை. போதுமான அளவு அதற்குப் பாடுபட்டாரா? சாதியை ஏற்றதற்கு அவர்மீது ஆதிக்கம் செலுத்தியவர்கள் யார் அல்லது எது?

தீண்டப்படாத மக்களுக்காக காந்தி பாடு பட்டதை யாருமே குறை சொல்ல முடியாது. தந்தை சொல்லை மகன் கேட்பதில்லை. மனைவி, கண வன் சொல்லையும் கேட்பதில்லை என்பதை நாம் வாழ்க்கையில் அன்றாடம் பார்க்கிறோம்.

ஆனால், இவ்வளவு பெரிய இந்திய நாட்டில் உள்ள பார்ப்பனர்களையும் மேல்சாதி மக்களையும் பார்த்து ''நாம் இதுவரை தீண்டாமையைக் கடைப் பிடித்ததற்காக, நீங்களே கோவில் வாசல்களைத் திறந்து தீண்டப்படாதவர் களின் கோயில் நுழைவை அனுமதியுங் கள்'' என்று வேண்டுகோள் விடுத்தார்.

அவருடைய சொல்லுக்குக் கட்டுப்பட்டுப் பார்ப்பனர்களும் மேல்சாதி மக்களும் தீண்டப் படாதவர்க்குக் கோயிலில் நுழைய அனுமதி அளித்தனர். மதுரை மீனாட்சியம்மன் கோவி லினுள் நுழைவதற்கு ஏற்பாடு செய்தவர் வைத்திய நாத அய்யர். எந்தக் கலவரமும் வந்து விடாமல் இருப்பதற்காக முத்துராமலிங்கத் தேவ ரின் உதவியோடு இதைச் செய்வித்தார் வைத்திய நாத அய்யர்.

இந்த வைத்தியநாத அய்யருடைய தொண்டர் களில் ஒருவர்தான் கக்கன். அவர் வைத்தியநாத அய்யரின் மகனாகத் தன்னைக் கருதி வாழ்ந் தவர். அய்யர் இறந்தபோது அவருடைய மகன் களைப் போலவே தானும் மொட்டை அடித்துக் கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டார். கக்கன் தீண்டப்படாதவர் என்பதால் பலரும் மறுத்துவிட்டனர்.

கக்கன், பிடிவாதமாக அழுது புரண்டுப் போராடி அனுமதி பெற்றுத் தன் தலைமுடியை மழித்துக் கொண்டார். அவர் 100 விழுக்காடு காந்தியவாதி. சொல்லும் செயலும் ஒன்றாக வாழ்ந்தவர்.

நீங்கள் நினைத்துப் பாருங்கள், ஒருவர் மதுரை மருத்துவமனையில் இடுப்பிலே ஒரு துண் டைக் கட்டிக் கொண்டு எல்லா நோயாளிகளைப் போலவே அவரும் ஒருவராகப் படுத்துக் கிடந்தார். அவர் ஒரு காலத்தில் தமிழகத்தின் காவல்துறை அமைச்சராகவும் இருந்தவர்.

எதிர்பாராமல் அப்போதைய முதலமைச்சர் எம்.ஜி. இராமச்சந்திரன் அந்த மருத்துவ மனைக் குச் சென்றபோது 'முன்னாள் அமைச்சர் கக்க னுக்கு, இங்கேதான் வைத்தியம் பார்க்கப்படு கிறது' என்று சொன்னவுடன், ஓடிப்போய் கக் கனைப் பார்த்து ''உங்களுக்கு என்ன உதவி வேண்டும்?'' என்று கேட்டாராம். ''எனக்கு ஓர் உதவியும் வேண்டாம். இங்கே நன்றாகத்தான் என்னைக் கவனிக்கிறார்கள்'' என்று கக்கன் கூறி விட்டாராம். கக்கனின் எளிமையையும் உயர்ந்த உள்ளத்தையும் எண்ணிப் பாருங்கள் – காந்தியாரை நவீன புத்தர் என்று சொல்லலாமா!

– **'தமிழர் எழுச்சி'**, மார்ச் 2019

# ரோமிலா தாப்பர் சிந்துவெளி நாகரிகம் ஆரிய நாகரிகம் என்று கூறினாரா?




**செ**ன்ற ஏப்ரல் 'ஓம் சக்தி' இதழில் வரலாற்றுப் பேரறிஞர் ரோமிலா தாப்பர் அவர்கள் "நம்மில் யார் ஆரியர்கள் - நமது பூர்வீகத்தைப் பற்றிய மறுசிந்தனை" (Which of us are Aryans: Rethinking the concept of our Origins) என்ற ஆங்கிலத் தொகுப்பு நூலுக்கு வழங்கிய ஒரு முன்னுரை, எங்கள் முதல் வாசிப்பில் புரிதலுக்குச் சற்றுச் சிரமமாக இருந்தது. ஆனாலும், முயற்சி செய்து அதனை மொழியாக்கம் செய்து சென்ற இதழில் வெளியிட்டோம்.

அந்த முன்னுரையைப் பற்றிய எங்கள் புரிதல் ரோமிலா தாப்பரின் கருத்துக்கு மாறானதாக உள்ளது என்று கல்வெட்டு ஆய்வாளர் முனைவர் ர. பூங்குன்றன் அவர்கள் ஒரு கட்டுரையை இந்த இதழில் எழுதியிருக்கிறார்.

அதேபோல, தமிழறிஞர் இரா. மதிவாணன் அவர்களும், ரோமிலா தாப்பர் திராவிட நாகரிகத்திற்காகக் குரல் கொடுப்பவர் என்று எங்களோடு தொலைபேசியில் தொடர்பு கொண்டபோது வலியுறுத்திக் கூறினார்.

இந்த இரு பெரும் அறிஞர்களும் குறிப்பிட்டுள்ளதைப் போல, ரோமிலா தாப்பர் நிச்சயமாகச் சிந்துவெளி நாகரிகம் திராவிட நாகரிகம்தான் என்பதைப் பல்லாண்டுகளாக வலியுறுத்தும் முன்னோடி ஆய்வாளர் என்பதே உண்மை. அம்முன்னுரையில் எளிதாக இதனைப் படித்துத் புரிந்து கொள்ளுமாறு அவரது கருத்துப் புலப்படவில்லை.

ரோமிலா தாப்பர் சுய வாழ்க்கையில் விளம்பரங்களுக்காக விருதுகளைத் தேடி அலைந்தவர் அல்லர். அதே போலப் பதவிகளைத் தேடிப் பயணப்பட்டவரும் அல்லர். ஆராய்ச்சிகளை ஆதாரங்களோடு திரட்டி அதன் மூலம் வந்தடைந்த முடிவுகளை எந்த விதத்திலும் சொந்தம் கொண்டாடாமல் "மெய்ப்பொருள்" கண்ட மேதை என்பதில் எந்த மாறுபட்ட கருத்தும் இல்லை.

ரோமிலா தாப்பர் டெல்லி ஜவஹர்லால் நேரு பல்கலைக்கழகத்தில் வரலாற்றுத் துறைப் பேராசிரியராக இருந்த காலத்தில் சுதந்திரமான சிந்தனைகளுக்கு அவர் ஆதரவு தந்து வந்தவர். அந்தவகையில், இந்தியா என்பதை 'ஹிந்து தேசமாக' அவர் கருதியதாகக் கொள்ள முடியாது. அதேபோல இந்தியாவை ஹிந்துத்துவாக் கோட்பாட்டின்படி மத நாடாக மாற்றும் முயற்சிகளை அவர் எதிர்த்தவர். அவருக்கு உடன்பாடானவை – அவரால் ஒத்துக் கொள்ளப்பட்டவை – மனிதன், அவனுடைய ஆரம்பகாலத் தோற்றம், அப்போது அவனால் உருவாக்கப்பட்ட நாகரிகம் என்பவைதான்.

இத்தொன்மையை – இந்த உண்மையை – கண்டறிவதையே அவர் தன் வாழ்நாள் லட்சியமாகக் கொண்டிருப்பவர். அத்தகைய ஓர் அறிஞரை நாம் தொடர்ந்து போற்றுவதும் பின்பற்றுவதும் அவருக்குப் பக்கபலமாக இருப்பதும், நியாயப்பூர்வமானது.

ஏனெனில், நமது இதிகாச காலத்திலேயே நம்மிடம் விமானம், ஏவுகணை, உறுப்பு மாற்று அறுவைச் சிகிச்சை என்ற இன்றைய நவீன சாதனங்கள் இருந்துள்ளதாகக்



*முனைவர்* ***ர. பூங்குன்றன்***

கூறப்படுகிற சூழலில், அதற்கு எதிர்ப்பும் வலுவாக உள்ளது.

திராவிட நாகரிகம் என்பதை இன்றைய தற்கால சுயநல அரசியல்வாதிகள் ஓர் இன அடையாளமாக்கி, அதனை இன்னோர் இனத்திற்கு எதிராகப் பயன்படுத்துகிற மலிவான அரசியலையும் பார்க்கிறோம்.

ரோமிலா தாப்பர் திராவிட நாகரிகம் என்று சொல்கிறபொழுது, அதனை மானுட வர்க்க வளர்ச்சியின் ஒரு மைல் கல்லாகவே கண்டார். அதுதான் ஓர் ஆய்வாளருக்குரிய கடமை.

அத்தகைய சிந்தனையாளர் ஒரு தொகுப்பு நூலுக்கு எழுதிய முன்னுரையில் அவர் வேத நாகரிகத்தைக் காட்டவும், கட்டமைக்கவும் முயற்சி செய்கிறாரோ என்ற ஒரு சந்தேகம் எங்களுக்கு ஏற்பட்டது ஒரு துரதிருஷ்டம்தான். இப்பின்புலத்தில் முனைவர் பூங்குன்றன் கட்டுரை வாசகர்களுக்குத் தெளிவை ஏற்படுத்தலாம் என நம்புகிறேன்.

– இ.ஆர்.

# முனைவர் பூங்குன்றன் கட்டுரை

அண்மையில் 'ஓம் சக்தி' (ஏப்ரல் 2019) இதழில் ரோமிலா தாப்பர் கட்டுரைகளை (The Hindu 27.11.2018, 11.2.2019) அடிப்படையாகக் கொண்டு சில தவறான கருத்துகள் கூறப்பெற்றுள்ளன என எழுதப்பெற்றதற்கு மறுப்புக் கட்டுரை.

"தாப்பர் ஆரம்ப காலம் முதல் இந்திய வரலாற்றை அறிவியல் பூர்வமாக எழுதி வருபவர். 'வரலாறும் வக்கிரங்களும்' என்ற நூலே அதற்குச் சிறந்த சான்று. அதன்பிறகு வெளியிட்ட ஆய்வுரைகளிலும், ஆய்வு நூல்களிலும் இந்த நிலையிலிருந்து மாறுபடவில்லை. இந்திய வரலாற்றாய்வில் ஆரிய – திராவிட நிலைப்பாடுகள் தொடர்ந்து நிலவுகின்றன. இந்த இரண்டு இனங்கள்தாம் இந்திய வரலாற்றையும், பண்பாட்டையும் உருவாக்கின என்கிற ஒரு பிம்பத்தை உருவாக்கி வைத்துள்ளனர்.

இவை இரண்டும் இல்லாத இனங்கள். கற்பனையாக உருவாக்கப் பெற்றவை. இன்னுமோர் இனம் இந்தியாவில் உள்ளது. அது முண்டா இனம். அந்த இனத்தைப் பற்றி அதிகம் பேசுவதில்லை.

கட்டுரை ஆசிரியர் ரோமிலா அவர்கள் சிந்துவெளி நாகரிகத்தைத் திராவிட நாகரிகம் என்று வலியுறுத்திக் கூறவில்லை என்று கட்டுரையாளர் குறைபட்டுக் கொள்கிறார்.

சிந்துவெளி நாகரிகத்தில் கிடைத்த குறியீடுகள் திருப்திகரமாக வாசிக்கப் பெறாத நிலையில், திராவிட நாகரிகம் என்று எப்படிக் கூற முடியும்?

ரோமிலா தாப்பர் அவர்கள் ஆரம்ப காலம் முதலே சிந்துவெளி நாகரிகம் ஆரியரல்லாதார் நாகரிகம் என்று கூறி வருகிறார். சமீப காலங்களில் சிந்துவெளி நாகரிகம் திராவிட நாகரிகம் – குறிப்பாகத் தமிழர் நாகரிகக் கூறுகளைப் பெற்றுள்ளது என்று கூறியுள்ளார்.

**ஐராவதம் மகாதேவன், ஆய்வாளர்கள் மதிவாணன், பக்தவத்சல பாரதி ஆகியோர் திராவிட நாகரிகம் என்று கூறுவதாலேயே சிந்துவெளி நாகரிகம் திராவிட நாகரிகம் என உறுதிப்படுத்தி விட முடியாது.** இது ஒரு கருதுகோளே. இந்தக் கருதுகோளை உறுதிப்படுத்த இன்னும் பல நிலைகளைக் கடக்க வேண்டியுள்ளது.

எலாமிய நாகரிகத்தில் பயன்பாட்டிலிருந்த எலாமிய மொழியில் தமிழ்ச் சொற்கள் கலந்திருப்பதைக் கண்டறிந்து, எலாமியம் என்பது திராவிட மூல மொழி என்ற நூலை வெளியிட் டுள்ளனர்.

சிந்து முத்திரைகளில் உள்ள உருவங்களைக் குலக் குறியியல் (Totemism) அடிப் படையில் ஆய்வு செய்தால், பல சமூக வரலாற்றுண்மைகள் வெளி வரும். எகிப்திய சித்திர எழுத்துக்களை இந்த






முறையைப் பின்பற்றிச் சில தெளிவான முடிவுகளைக் கண்டுள்ளனர். சிந்துவெளி உருவங்களில் மிருகம், மனித – மிருக இணைப்பு உருவம், சில பூக்கள் ஆகியவை வரையப்பெற்றுள்ளன. இன்னும் பல உருவங்கள் உள்ளன. இவற்றைக் குலக்குறியியல் அடிப்படையில் ஆய்வு செய்ய வேண்டும்.

சிந்துவெளிக் குறியீடுகளுடன் தமிழ் – பிராமி எழுத்துப் பொறித்த பானை, ஓடு ஆகியவை கிடைத்துள்ளன. இந்த இரண்டு சான்றுகளில் முத்திரையில் ‘கோவேத்’ என்று தமிழ் – பிராமி எழுத்துக்களில் பொறிக்கப்பெற்றுள்ளது. இந்த எழுத்துக்களுடன் சேர்ந்துள்ள சிந்துவெளிக் குறியீடுகளுக்குக் ‘கோவேத்’ என்ற ஒலியே தரப்படும். இந்த முத்திரை ஈழத்து யாழ்ப்பாணப் பகுதியில் கிடைத்தது. மற்றொன்று ‘கோன்’ என்று தமிழ் – பிராமி எழுத்தில் கோன் என்று எழுதப் பெற்றுள்ளது. கோன் என்ற சொல்லுடன் தோலாவீராவில் கிடைத்த சிந்துவெளிக் குறியீடும் உள்ளது. இந்தச் சிந்துவெளிக் குறியீடு கோன் என்ற சொல்லின் ஒலியைக் குறிக்கும்.

சிந்துவெளி நாகரிகம் பற்றி ரோமிலா தாப்பர் எழுதியுள்ள முன்னுரையில் தாப்பருடைய கருத்துக்கு மாறான சில செய்திகள் கூறப்பெற்றுள்ளன.

1. “ஐராவதம் மகாதேவன்தான் சிந்துவெளியில் கிடைத்த குறியீடுகளான ஆரம்பக் கால பிராமி எழுத்துக்களைத் தமிழ் லிபிக்கு மாற்றி, அவற்றை வாசித்துக் காட்டியவர்.”

   ரோமிலா அவர்கள் இந்தக் கருத்தை முன்வைக்கவில்லை. மகாதேவன் அவர்கள் பிராம்மியைத் தனியே வாசித்தார். தமிழின் தொன்மையை அதன்மூலம் வெளிப்படுத்தினார். சிந்துவெளி எழுத்துக்களை வாசிக்கத் தனியே முயற்சி எடுத்துக் கொண்டார். சிந்துவெளி எழுத்திலிருந்து பிராமி எழுத்து வந்ததாக மகாதேவன் கருதவும் இல்லை. அவர் அவ்வாறு கருதினார் என்று ரோமிலா தாப்பர் கூறவும் இல்லை.

2. “ஆரியர்கள் ஹரப்பா நகரின் மண்ணின் மக்கள். ஆனால் அவர்களின் வாழ்விடங்களை விட்டு வேறு இடங்களுக்கு அவர்கள் குடிபெயரவில்லை. ரிக் வேத ஆரியர்களை ஹரப்பா கலாச்சாரத்தின் கர்த்தாக்கள் என்று கூறலாம்.”

   ரோமிலா அவர்கள் கி.மு. 1700–இல் சிந்துவெளி அழிந்துவிட்டது என்றும், அதன் பின் கி.மு. 1500–இல்தான் ஆரியர்கள் இந்தியாவுக்குள் வருகின்றனர் என்றும் கூறுகின்றார். அப்படியாயின், ஆரியர்கள் சிந்துவெளி நாகரிகத்தார்கள் என்று எப்படிக் கூற முடியும்?

மேலும் சில செய்திகளை அவர் குறிப்பிட்டுள்ளார். ஒரு சிலர் ரிக் வேதம் கி.மு. 3000–இல் தோன்றியது என்றும், அதனால் சிந்துவெளி நாகரிகம் ரிக் வேதத்திற்குரியது என்றும் கருதுகிறார்கள். (இது ஆர்.எஸ்.எஸ். முதலான இந்துத்வா அமைப்புகளின் கருத்து).

இந்தக் கருத்தைப் பற்றித் தாப்பர் கூறும்போது, இந்தக் கருத்து பல கருத்து மாறுபாடுகளைக் கிளப்பியுள்ளது. மேலும் இந்தக் கருத்துக்கு உறுதியான சான்றுகள் எதையும் அவர்கள் தரும் நிலையில் இல்லை என்று ரோமிலா கூறுகிறார். மேலும் அவர் கூறுகிறார் : நகர நாகரிகமுடைய சிந்துவெளிப் பண்பாட்டிற்கும், புஞ்சை வேளாண்மைக் கால்நடை வளர்ப்புத் தொழில் செய்த ரிக்வேத காலப் பண்பாட்டிற்குமிடையில் நிறைய முரண்பாடுகள் உள்ளன என்பது தாப்பரின் கருத்து.

மேலும் ஓர் அமெரிக்க இதழுக்கு ரோமிலா எழுதிய ஆய்வுரையில் மெசபடோமியாவில் ஆய்பெழுத்துப் பொறிப்புகளில் பயின்று வரும் மகன், மெலுக்கா, தில்மண் ஆகிய பெயர்கள் தமிழ்ப் பெயர்களே என்று வாதிட்டுள்ளார். அவருடைய இரண்டு கட்டுரைகளை இங்குக் குறிப்பிட வேண்டும்.

1. A Possible Identification of Melukha, Dilmun and Makan (JESHO 1978 XXI)
2. Dravidian Hypothesis for the identification of Melukha, Dilmun and Makan (JESHU 1982 XXVI ii)

இந்தக் கட்டுரைகளை வாசித்தாலே சிந்துவெளி நாகரிகம் ஆரிய நாகரிகம் இல்லை என்று அவர் கருதுவது புலப்படும்.

●



# காசுகளை நீர்நிலைகளில் வீசுதல்

காசுகளை நதிகள், குளங்கள், கிணறுகள், கடல்கள் உள்ளிட்ட எல்லா நீர் நிலைகளிலும் எறிவதோ அல்லது வீசுவதோ மேலைநாடுகள் உள்ளிட்டு உலகமெங்கும் நடைபெறுகிறது.

இந்தியாவில் இது ஒரு வெறும் வழக்கம் மட்டுமல்ல; நம்பிக்கையுமாகும். நீர்நிலைகளை இறை அன்னையாகக் கருதுவர். நீர்நிலைகள் தமது வேண்டுதலை நிறைவேற்றும் என்ற நம்பிக்கையுடன் காசுகளை வீசுவர்.

ரயிலில் பிரயாணம் செய்பவர்கள் கோதாவரி, காவேரி முதலிய நதிகளில் வீசுவதற்கு நாணயங்களைத் தயாராக வைத்துக் கொள்வார்கள்.

தொன்மையான நூற்றுக்கணக்கான நாணயங்களை உபயோகமாக உருக்குவதைத் தவிர்ப்பார்கள். ஏனெனில், உருக்கி வரும் உலோகம் மிகக் குறைந்த விலைக்கே போகும். இந்த நாணயம் பித்தளையாக இருந்தாலும் அரிதானதாக, முக்கியமானதாக இருந்தால் மிக உயர்ந்த விலைக்கு விற்பனையாகும். இதற்கும் மேலாக இவை நமது கலாச்சாரத்தைக் குறிப்பனவாகும்.

உதாரணமாக, திப்பு சுல்தானின் தங்க நாணயம் ரூபாய் மூன்றாயிரம் விலை பெறும். நாணயங்களைச் சேகரிப்பவர்களிடம் இதன் மதிப்பு ஒரு இலட்சம் ரூபாயாகவே மதிப்புறும்.



ஒரு புகைப்படத்தில் தெலுங்கானா முதல்வர் திரு. சந்திரசேகர் ராவ் கோதாவரி நதியில் காசு வீசுவதைக் காட்டுகிறது. தனது மாகாணம் செல்வாக்கும் அபிவிருத்தியும் அடைவதற்காகவே இந்த நாணயம் எறிதல். வழக்கமாகப் பித்தளை நாணயமே எறிவதாக இருந்தாலும் செல்வந்தர்கள் வெள்ளி, தங்க நாணயங்களை வீசுவார்கள்.

ரயிலில் பிரயாணம் செய்யும்போது முதியவர்களோ, டிக்கெட் பரிசோதகரோ இதை நினைவுபடுத்துவார்கள். நாணயங்களை வீசுவதற்கு முன் நதி அன்னையிடம் தங்களது வேண்டுதலை நிறைவேற்றுமாறு கூறி வீசுவார்கள். பிறகு நாணயம் நதியில் சேர்ந்ததை அறிந்து மகிழ்வார்கள்.

இந்த நம்பிக்கையில் பலர் காசிக்குச் சென்று கங்கா நதியில் குளிப்பார்கள். அங்குச் சடங்குகளுக்கு உதவும் புரோகிதரால் ஒரு பிணத்தைப் பார்க்க நேர்ந்து – அப்பொழுது நாணயத்தை வீசினால் இறைவன் சிவன் மகிழ்வடைவார் என்பது ஐதீகம். இந்த நாணயங்களைச் சிறுவர்கள் உடனே நதியில் குதித்து எடுத்துக் கொள்வார்கள். இந்த வழக்கம் உலகின் பல பாகங்களிலும் நடைபெறுகிறது.

நதிகள் இறை அன்னை என்றே வழங்கப்படுகின்றன. உதாரணமாக கங்கா அன்னை, காவேரி அன்னை என்றே அழைப்பார்கள். வழக்கமாக தாய்மார்கள் குழந்தைகளின் விருப்பத்தை நிறைவேற்றுவார்கள். தாய்மார்கள் நிறைவேற்றும் விருப்பங்கள் நதி அன்னையின் கருணை என்று நம்புவார்கள். இதற்கு முன்னதாக நதியில் நாணயங்களை வீசுவார்கள். இது ஜெர்மனி, இங்கிலாந்து, இந்தியாவிலும் நடைபெறும் வழக்கம்.

**முனைவர் டாக்டர் ஜே.ஜி. சண்முகநாதன்**
**கங்கா மருத்துவமனை, கோவை**

ரோம் நகரில் அழகானதும் மகிழ்வூட்டுவது மான டெரிவி (Trevi Fountain) நீரூற்றில் மக்கள் கூட்டம் மிகுதியாக இருக்கும். இது கி.மு. 19–இல் ரோமன் மன்னர் ஆக்டேவியன் அகஸ்டஸ் (Otavian Augustas) மருமகன் மன்னர் மார்கஸ் அக்ரிபா (Marcus Agrippa) என்பவரால் நிறுவப் பட்டது. ரோமானியர்களில் பெரும்பாலானவர் கடல் வணிகர்கள். இவ்வணிகம், கடுமையாகக் கடல் அலைகளாலும் கடல் திருடர்களாலும் மிகுந்த ஆபத்தானதாக விளங்கியது.

பாத்திரங்களில் வைத்துப் பின் குடிக்க வேண்டும் என்று சொல்வார்கள்.

தண்ணீரைச் செம்புப் பாத்திரங்களில் சேமித்து வைத்துக் குடிக்கும்போது அதில் உள்ள செம்பு உடல் நலனுக்கு உகந்தது. அதனால்தான் மருத்துவமனைகளிலும் இல்லங்களிலும் குடிநீரைச் செம்புப் பாத்திரங்களில் சேமித்து வைக்கிறார்கள். அலுமினியம் அல்லது பிளாஸ் டிக் பாத்திரங்களில் குடிநீரை வைத்தால் கேடு விளையும்.



கடவுள் பக்தி நிறைந்த இவர்கள் பயணம் நல்லதாக அமைந்து, வியாபாரம் முடிந்து தங்கள் குடும்பத்தினரோடு சேர கடவுளை வேண்டி டெரிவி (Trevi) நீரூற்றில் காசுகளைப் போடுவார்கள். வெகு வருடங்களுக்கு முன்பு 'BBC செய்தி' மாதிரிக் கணிப்பில் ஒவ்வொரு இரவிலும் 3000 யூரோ நாணயங்கள் சேகரிக்கப் பட்டதாக அறிவித்தது. இந்தப் பணம் மக்களின் சேவைக்காகப் பயன்படுத்தப்பட்டது என்பது போற்றத் தகுந்த விஷயம்.

பெரும்பாலும் செம்புக் காசுகளே நதிகளில் குளங்களில் வீசப்படுகின்றன. அதன் காரணம், செம்பு காற்று ஈரப்பதம், கடல்நீர் இவற்றினால் அரிப்பு ஏற்படுவதில்லை என்பதே. அதனால்தான் ஆயுர்வேத மருத்துவர்கள் தண்ணீரைச் செம்புப்

கி.மு. 600–ஆம் ஆண்டிலேயே செம்புவை நாணயத்திற்குப் பயன்படுத்தினார்கள் என்று ஆய்வாளர்களும் தொல்பொருள் வல்லுநர்களும் குறிப்பிடுகிறார்கள். எனினும் கடல் வாணிகத்தில் ஈடுபட்ட ரோமானியர்கள் பெருமளவில் வெள்ளி, தங்க நாணயங்களை உபயோகப்படுத்தினர். அவர்கள் தென்னிந்தியாவில் வாணிகத்தில் ஈடுபட்டு ஏலக்காய், குறுமிளகு, வைர, தங்க நகை கள் வாங்குவதற்கு இந்த நாணயங்களை உப யோகப்படுத்தினர்.

இந்த வெள்ளி, தங்க நாணயங்கள் தென்னிந்தியாவிற்குப் பெருமளவில் போவதை அறிந்த ரோம் மேலவை இதைத் தடுக்க ஏற்பாடு கள் செய்தனர். ஆனால் அந்த ஏற்பாடுகள் எடுபட வில்லை. இந்தக் காலத்திலும் இந்த வாணிகம் தொடர்கிறது. ●

# சக்தி பைனான்ஸ்

நம்பிக்கையின் நிகரற்ற கட்டமைப்பு

H.O. : கோயமுத்தூர் - 641 018. போன் : 0422-2231471-4

## புதிய மற்றும் பழைய "வாகனங்களுக்கு கடனுதவி திட்டம்"





**உங்கள் வளர்ச்சியே எங்கள் மகிழ்ச்சி**





20* வருடங்கள் வரையிலான சிறிய மற்றும் கனரக லாரிகள் JCB, Excavator வாகனங்களுக்கும் கடனுதவி அளிக்கப்படும்.

**எங்கள் சேவைகளைப் பற்றி சில தகவல்கள்**

- ✓ புதிய மற்றும் பழைய வாகனங்களுக்கு கடனுதவி வழங்குதல்
- ✓ மிகப்பழைய மாடல் சரக்கு வாகனங்களுக்கு நிதியுதவி
- ✓ வாகன சீரமைப்பு Tyre, FC, உதிரி பாகங்கள் மற்றும் செலவினங்களுக்கும் கடன் உதவி
- ✓ தேர்டு பார்ட்டி செட்டில்மெண்ட் (Third Party Settlement)
- ✓ பழைய வாகனங்களுக்கும் இன்சூரன்ஸ் சேவையுடன் கூடிய நிதியுதவி
- ✓ வாடிக்கையாளர்களின் தேவைகளை அறிந்து 24 மணி நேர துரித சேவை
- ✓ துரித சேவைக்கு பிரதான இடங்களில் வாடிக்கையாளர் சேவை மையங்கள்
- ✓ எளிய விதிமுறைகள், நம்பிக்கை, நாணயம் மற்றும் கனிவான சேவை.

கட்டுரை

ஜெயா வெங்கட்ராமன்

# அரிஸோனாவில் ஒரு மஹாளய பக்ஷம்



நீத்தார் நினைவு நாளை மெக்ஸிகோ நாட்டில் வாழும் மக்கள் அவர்களின் பண்பாட்டுத் திருவிழாவாகக் கொண்டாடுகின்றனர். இந்த நாள் (அக்டோபர் 31 முதல் நவம்பர் 02) மெக்ஸிகோ முழுவதற்கும் அரசாங்க விடுமுறை நாளாக அறிவிக்கப்பட்டுள்ளது. குறிப்பாக மத்திய தென்பகுதி மக்களின் மிக முக்கியமான திருவிழாவாகக் கருதப் படுகிறது. ஸ்பானிஷ் மொழியில் இது Dia de los Muertos என்று அழைக்கப்படுகிறது.

மெக்ஸிகோ மக்கள் உலகின் எந்தப் பகுதியில் வாழ்ந்தாலும் இந்த நாளைக் கொண்டாடத் தவறுவதில்லை. அரிஸோனா மாநிலத்தில் உள்ள டுக்சான் (Tucson) என்கிற பகுதியில் இருந்தபோது நவம்பர் 2–ஆம் தேதியன்று இந்தக் கடைசிநாள் நிகழ்ச்சியைக் காணும் வாய்ப்புக் கிடைத்தது.

இந்த விழாவின் அடிப்படைக் கொள்கை என்னவென்றால், இறந்து போன பெற்றோர்கள், உறவினர்கள், சொந்த பந்தங்கள், நண்பர்கள் முதலியோரை நினைவுகூரும் நாள். அவர்களது ஆன்மீகப் பயணத்தை நினைவுகூர்ந்து அவர்களின் படங்களை வைத்து அவரவர்களுக்குப் பிடித்தமான உணவு வகைகள், பழங்கள், இனிப்பு வகைகளை அதற்கு முன் வைத்துப் படையலிடுகின்றனர். 2008–ஆம் ஆண்டு யுனெஸ்கோ இதை ஒரு பண்பாட்டுத் திருவிழாவாக அங்கீகரித்தது. மெக்ஸிகோ மக்கள் அதிகமாக வசிக்கும் இடங்களிலும், மெக்ஸிகோ நாட்டிலும் இது மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

இது கிறிஸ்தவர்களின் All Saints Day, ஆலோவீன் எனும் விவசாயிகளின் திருவிழாவுடன் தொடர்புடையது. ஸ்பானிஷ் காரர்களின் காலனி ஆதிக்கத்திற்கு முன்னர் (அதாவது 16–வது நூற்றண்டிற்குமுன்) கோடை காலத்தின் ஆரம்பத்தில் கொண்டாடப்பட்ட இந்த விழா, நாளடைவில் இது அக்டோபர் 31, நவம்பர் 1, 2 நாள்களில் என்று மாற்றம் அடைந்தது. இதையே மேற்கத்தியக் கிறிஸ்தவர்கள் All Saints Day Eve, All Saints Day, All Souls Day என்று கொண்டாடுகின்றனர். இந்த நாளன்று இறந்தவர்களின் கல்லறைக்குச் சென்று அவர்களின் நினைவாகப் படையலிடுவது அவர்களின் பாரம்பரியமான பழக்கம்.

கத்தோலிக்கச் சர்ச்சுகளில் ‘ஆல் செயிண்ட்ஸ் டே’ என்று சிறப்பாக உலகம் முழுவதும் கொண்டாடுகின்றனர். இது தமிழ்நாட்டில் ‘கல்லறைத் திருநாள்’ என்கிற பெயரில் கொண்டாடப்படுகிறது. ஆனால் இது ஒரு வித்தியாசமான நிகழ்வு.

இறந்து போனவர்களின் உடல் மண்ணுக்குள் புதைந்து போனாலும், அவர்களது ஆன்மா ஆவியுலகத்தில் சஞ்சரிப்பதாக நம்பப்படுகிறது. இந்தக் குறிப்பிட்ட தினத்தன்று இறந்தவர்களின், வாரிசுகள், உறவினர்கள், நண்பர்கள், இறந்து போனவர்களின் திருவுருவப் படத்தை வைத்து அலங்கரித்து மூன்றாவது நாளன்று மாலையில், இருளும் மாலையும் சந்திக்கும் நேரத்தில் வித விதமான, வித்தியாசமான ஆடைகள் அணிந்து பேய், பிசாசு, பூதங்கள் போலப் பயங்கரமாக ஒப்பனை

செய்துகொண்டு இறந்தவர்களின் உருவப் படம் தாங்கிய பதாகைகளைச் சுமந்து கொண்டு ஊர்வலமாக வருகின்றனர்.

கிட்டத்தட்ட, ஒருமணி நேரம் நடக்கும் இந்த ஊர்வலத்தில் சுமார் எத்தனை பேர் கலந்து கொள்வார்கள் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ள லாம். இது தவிர, இதைக் காணச் சாலை யின் இரு மருங்கிலும் ஏராளமான மக்கள் நின்று கொண்டிருந்தார்கள் என்பது தனிக் கணக்கு.

ஊர்வலம் வரும் குறிப்பிட்ட சாலை யில் போக்குவரத்து முழுமையாக நிறுத்தப்படுகிறது. கூட்டத்தை ஒழுங்கு படுத்த வேண்டிய அவசியமே இல்லை என்றாலும் போலீஸ்காரர்கள் மோட்டார் சைக்கிளில் வலம்வந்து கொண்டு மக்களை ஸ்பானிஷ் மொழியில் நகைச் சுவையுடன் தெம்பூட்டுகின்றனர்.

அருமையான, அமைதியான, கட்டுப் பாடான ஊர்வலம். பாண்டு வாத்தியங் கள், இசைக்கருவிகள் முழங்க, ஒளிவிளக்கு மாலைகளைக் கழுத்தில் அணிந்து கொண்டு சைக்கிள் ரிக்ஷாக்களிலும், நடந்து கொண்டும் ஊர்வலத்தில் கலந்து கொண்டு வண்ணமயமாகக் காட்சியளிக் கின்றனர். குழந்தைகள், செல்லப் பிராணி களையும் தள்ளுவண்டியில் வைத்துத் தள்ளிக் கொண்டு வருகின்றனர். நாய்கள் கூட ஊர்வலத்தில் கலந்து கொள்கின்றன.

இதில் ஒரு முக்கியமான நிகழ்வு என்னவென்றால், ஹரே ராமா, ஹரே கிருஷ்ணா இயக்கத்தினர்கூட 'ஹரே ராமா, ஹரே கிருஷ்ணா' என்று முழங்கிக் கொண்டு, பஜனை செய்துகொண்டு ஊர்வலத்தில் வந்தனர்.

இறந்துபோன வளர்ப்பு மிருகங்களின் படங்களுடன்கூடிய பதாகைகளைக் காணும்போது வியப்பாக இருந்ததுடன், நமது நாட்டில் மஹாளய பக்ஷத்தின் போது (புரட்டாசி 15 நாள்கள், பௌர்ணமி முதல் அமாவாசை வரை) நடத்தப்படும் சடங்குகள் நினைவுக்கு வருகின்றன. பிராமணர்கள் 15 நாள்களும், மற்றவர்கள் மஹாளய அமாவாசையன்று படையலிடுவதும் நினைவுக்கு வருகிறது. அந்த 15 நாள்களிலும், பிராமணர்கள் இறந்துபோன ஆவி வடிவில் இருக்கும் மூதாதையர்களுக்கு அந்தத் தினத்தன்று எள்ளும் தண்ணீரும் இறைத்து பித்ருக் கடன் தீர்ப்பார்கள். அந்த நாள்களில் மட்டுமல்ல, ஒவ்வொரு அமாவாசை, மாதப் பிறப்பு, கிரகண தினங்களின் போதும் செய்வது வழக்கம். அதில் ஒரு மந்திரம்...

"ஏ ஷாம் ந மாதா, ந பிதா, ந ப்ராதா

நச பாந்தவா, நான்ய கோத்ரேண :

தே ஸர்வே த்ருப்தி மாயந்து மய :

உத்ஸ்ருஷ்டை :

குசோதஹை : த்ருப்யத, த்ருப்யத த்ருப்யத:"

இதன் பொருள் என்னவென்றால், "எவர் எவருக்குத் தாயில்லையோ, தந்தை யில்லையோ, பங்காளிகள்இல்லையோ, நண்பர்கள் இல்லையோ இதுபோன்று யாருமே இல்லாத அனாதை என்று சொல்லப்படும் அனைவருக்கும் நான் அளிக்கும் இந்த எள்ளும் தண்ணியும் திருப்தியை, திருப்தியை திருப்ததிருப்தியை அளிக்கட்டும்" என்று ஜாதி, மத பேதம் இல்லாமல், உலகின் அனைத்து ஜீவராசி களும் நன்மை அடைய வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன் என்று இந்த மந்திரத் தைச் சொல்லும்போது கண்கள் நிறை கின்றன. எவ்வளவு உயர்வான தத்துவம்?

இதேபோல கயாவில் பிண்டப் பிர தானம் செய்யும்போது, 48 பிண்டங் களைச் சோற்று உருண்டைகள் அல்லது கோதுமை மாவு உருண்டைகளைத் தர்ப் பையின் மீது வைத்து எள்ளும், அரிசியும் கலந்த நன்னீரை மந்திரங்களைச் சொல்லி வார்த்து ச்ராத்தம் செய்யப்படும் வழக்கம் உள்ளது. அப்போது மனிதர்கள் மட்டுமல் லாது, வீட்டில் வளர்த்த செல்லப் பிராணி களின் பெயர்களையும்கூடச் சொல்லச் சொல்கின்றனர்.

அதேபோல இந்தத் திருவிழாவின் போது, நாய்கள், பூனைகள் முதலிய விலங்கினங்களின் புகைப்படங்களையும் தாங்கி வருவது கண்டு வியந்தேன். எந்த நாடாக இருந்தாலும், எந்த மொழியாக இருந்தாலும், எந்த மதமாக இருந்தாலும், இப்படி நன்றிக்கடன் செலுத்தும் பண் பாடு இன்றளவும் சாகாமல்

இருப்பதால்தான் மனிதகுலம் வளமோடு வாழ்கிறது. 'டுக்சான்' மெக்ஸிகோவின் எல்லையில் இருக்கிறது. எனவே அதன் தாக்கம் இங்கும் இருக்கிறது. இதைக் கண்டு நான் மெய்சிலிர்த்த அனுபவம் இது.

ஆவியுலகில் இருக்கும் முன்னோர்கள் இந்தத் தினத்தன்று தங்கள் உறவினர்களை, மனிதர்களைச் சந்திக்கப் பூமிக்கு வருகின்றனராம். அவர்களை வரவேற்று உபசரித்து மகிழ்வடையச் செய்ய பேய், பிசாசு, பூதம் முதலிய வேடமணிந்து வரவேற்கின்றனர். அதைக் கண்ட அவர்களும் மனம் உவந்து அவர்களை ஆசிர்வதித்து மீண்டும் மேல் உலகத்திற்கு (ஆவிகள் ராஜ்யத்திற்கு) செல்வதாக நம்புகின்றனர். அப்படிச் செய்யாவிட்டால், அவர்களின் ஆத்மா மனம் வருந்தி வருத்தத்துடன் திரும்பிச் செல்லுமாம்.

இந்த ஊர்வலத்தில் ஒரு பெரிய உண்டியல் ஏந்தி வருகின்றனர். அவர்களிடம் கடிதங்கள், பரிசுப் பொருள்களை மக்கள் அதில் இடுகின்றனர். அதன் மூலம் அவர்களுக்குக் கடிதம் எழுதுகின்றனர்.

ஊர்வலத்தின் இறுதியில், உண்டியலில் இருக்கும் அனைத்துப் பொருள்களையும் குவியலாகக் கொட்டிவைத்து அதற்குத் தீமூட்டி சாம்பலாகும் போது, அவை அவர்களைச் சென்றடைவதாக நம்புகின்றனர். இதை மூடநம்பிக்கை என்று சொல்ல முடியாது! பாராட்டத் தக்க நல்ல நம்பிக்கை என்றுதான் கொள்ள வேண்டும். இதில் என்னை மிகவும் மனம் நெகிழ வைத்த ஒரு சம்பவத்தைச் சொல்லியே ஆக வேண்டும்.

ஒரு வயது முதிர்ந்த மாது, அவள் கணவனுடன் ஒரு சக்கர நாற்காலியில் ஓர் எலும்புக்கூட்டை வைத்து அதற்கு மணப்பெண் போல அலங்கரித்திருந்தனர். கவுன் முதலிய அந்த வெள்ளை ஆடை எலும்புக்கூடாக இருந்த அந்தப் பெண்மணியின் திருமண ஆடையாம். அவர் அந்த வயது முதிர்ந்த மாதுவின் தாயாராம். அவரது திருமணத்தன்று அணிந்திருந்த ஆடையை இன்றுவரை பாதுக்காப்பாக வைத்திருந்து ஒவ்வொரு


இறந்த தாயாரின் அலங்கரிக்கப்பட்ட எலும்புக்கூட்டுடன் மகளும் அவரது கணவரும்

வருடமும் அணிவித்துச் சக்கர நாற்காலியில் வைத்து எடுத்து வருகின்றனராம். அவர் உயிரோடு இருந்தபோது இதே நாற்காலியில் அமர்ந்துதான் இந்த ஊர்வலத்தைப் பார்வையிடுவாராம்.

நான் என் மனைவி, மருமகன், மகளுடன் அவர்களைச் சந்தித்து, நான் இந்தியாவிலிருந்து வருகிறேன் என்று அறிமுகம் செய்துகொண்டபோது, அவர்கள் இந்தச் செய்தியை எனக்குத் தெரிவித்ததுடன் நிறைந்த கண்களுடன், "எனது அம்மா மிகவும் மகிழ்ச்சி அடைகிறார்கள். உங்களுக்கு எங்கள் நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்" என்று அவர்கள் சொன்னபோது, எனது கண்கள் கலங்கின.

ஒழுங்கான, கட்டுப்பாடான இந்த நன்றி தெரிவிக்கும் ஊர்வலத்தைப் பார்த்தபோது என் கண்கள் நிறைந்தன. எனது முன்னோர்களுக்கும் மானசீகமாக நன்றி தெரிவித்து, அவர்களை நினைவு கூர்ந்தேன். எந்த மொழியாக, எந்த நாடாக, எந்த மதமாக இருந்தால் என்ன? கடல்கடந்து என் மூதாதையர்களுக்கு நன்றி செலுத்தினேன் என்கிற மனநிறைவு எனக்கு ஏற்பட்டது. ●

கட்டுரை

# ஆட்சிக்கு வரத்துடிக்கும் கட்சிகளிடம் மக்கள் எதிர்பார்ப்பது?

தமிழகம் ஏழைகளுக்கானத் திட்டங்களை அறிவிப்பதில், செயல் படுத்துவதில் முன்னோடி மாநிலம். இதில் யாருக்கும் எந்தச் சந்தேகமும் இல்லை. ஆனால் இந்தத் திட்டங் களைப் பற்றி அரசியல் கட்சி களிடமும் அறிஞர்கள் மத்தியிலும் இரு வேறு பார்வைகள் உள்ளன.

ஒன்று, இந்தத் திட்டங்கள் அனைத்தும் மக்களைக் கவரும் கவர்ச்சித் திட்டங்கள். இந்தத் திட்டங் களால் ஏழைகள் முன்னேறப் போவதும் இல்லை, இந்த மாநிலமும் முன்னேறப்போவது கிடையாது. இது ஒரு பண விரயம். இப்படி வாதிப் போரின் விவாதங்கள் அர்த்தமற்றவை என்று முழுமையாக நாம் நிராகரிக்க முடியாது.

இதன் மறுபக்கமாக மற்றொரு மாற்றுக் கருத்தை ஒரு சிலர் முன்வைத்து வாதிடு கின்றனர். அதாவது இந்தத் திட்டங்கள் அனைத்தும் ஏழைகளுக்கான வளர்ச்சித் திட்டங்கள்.

இந்தத் திட்டங்கள்தான் ஏழைகளை ஏழ்மையிலிருந்து வெளியேற்றியுள்ளது, ஏழ்மையின் கோரப்பிடியிலிருந்து ஏழைகளைப் பாதுகாத்து வருகிறது என்று வாதிடு கின்றனர்.

இதற்கு அவர்கள் வைக்கின்ற ஒரு வாதம், தமிழகத்திலிருந்து வாழ்வா தாரத்தைத் தேடிப் பிற மாநிலங் களுக்குக் கூலிவேலை செய்யச் செல் வோர் யாரும் கிடையாது. பிற மாநிலங்களிலிருந்துதான் தமிழகத் திற்குக் கூலி வேலைக்கு ஏழைகள் வரு கின்றனர். எனவே தமிழகத்தில் வாழ் வாதாரம் பாதித்துப் புலம்பெயர்வு நடைபெறவில்லை என்று வாதிடு கின்றனர்.

இந்த வாதத்தினையும் நாம் புறந்தள்ள முடியாது. இந்த இரண்டு பார்வையிலும் ஓர் உண்மையும் இருக்கிறது. புனைவும் இருக் கிறது. உண்மையின் அடிப் படையில் இந்த இரண்டை யும் பிரித்துப் பார்த்து நாம் விவாதம் செய்வது கிடை யாது.

டாக்டர் க. பழனித்துரை

அனைத்துத் திட்டங்களை யும் மலிவான கவர்ச்சித் திட்டங் கள் என்று



வர்ணிப்பதும், அனைத்துத் திட்டங்களும் ஏழைகள் மேம்பாட்டுத் திட்டங்கள் என்று வர்ணிப்பதும் அரசியல் நிலைப்பாட்டைப் பொறுத்து அமைகின்றனவேயன்றி, உண்மையின் அடிப்படையில் அல்ல.

ஏழைகள் மேம்பாட்டுக்கானத் திட்டங்களை நடைமுறைப்படுத்த வேண்டிய கட்டாயம் ஓர் அரசாங்கத்திற்கு உள்ளது என்பதை யாரும் மறுக்க இயலாது. ஆனால், அந்த அரசாங்கம் நடைமுறைப்படுத்தும் திட்டங்களை அலசி, ஆராய்ந்து பார்த்து எந்தெந்தத் திட்டங்கள் ஏழைகளின் திறனையும் ஆற்றலையும் உயர்த்தித் தாங்களாகவே வருமானம் ஈட்டிச் சுயமரியாதையுடன் வறுமையிலிருந்து வெளியேற வாய்ப்பளிக்கின்றன என்பதை வைத்து நாம் முடிவுக்கு வந்துவிடலாம்.

மீன் பிடிக்கக் கற்றுக்கொடுக்கும் திட்டமா அல்லது மீன் கொடுக்கும் திட்டமா என்பதை வைத்துதான் திட்டங்கள் உபயோகமானதா அல்லது நிதி விரயத்திற்கான திட்டமா என்பதைப் பார்க்க முடியும். இன்று நம் தமிழகத்தின் இரண்டு வகையான திட்டங்களும் நடைமுறைப்படுத்தப்பட்டு வருகின்றன. இந்தத் திட்டங்கள் கூடிக்கொண்டே வருவதையும் பார்க்கின்றோம்.

அடுத்து, இந்தத் திட்டங்கள் வறுமைக்கோட்டுக்குக் கீழே உள்ளவர்களுக்கு மட்டுமல்லாமல், அனைவருக்கும் என வழங்கப்படும் போதுதான் இதன் உள்நோக்கத்தை உற்றுப்பார்க்க வேண்டிய கட்டாயம் வருகின்றது. அப் படிப் பார்க்கின்றபோதுதான் வாக்குக் கணக்கும், ஊழல் கணக்கும் நமக்குப் புலப்படுகின்றது.

தமிழகத்தில் பெருமளவில் ஊழலும், இந்தக் கவர்ச்சித் திட்டங்களும் ஒரே நேரத்தில் புகுந்தன என்பதை யாரும் மறுக்க இயலாது. ஊழலின் அளவு கூடக் கூட இந்தக் கவர்ச்சித் திட்டங்களின் எண்ணிக்கையும் கூட ஆரம்பித்தன. கவர்ச்சித் திட்டங்களுக்கும் ஊழலுக்கும் ஒரு வகையான தொடர்பு இருக்கிறது என்பது அனைவரும் அறிந்த உண்மை.

இந்த ஊழலில் சேர்த்த பணம் அவ்வளவும் அரசியல்வாதிகள் வீட்டுக்குச் சென்றுவிடுவது கிடையாது. அந்தப் பணம் மீண்டும் அரசியல் செயல்பாடுகளுக்கு வந்து விழுந்து கொண்டிருப்பதையும் நாம் பார்க்கின்றோம்.

அரசியல் செலவீனங்கள் கூடக் கூட ஊழலின் அளவும் அதிகரித்துள்ளது. ஏனென்றால், அரசியல் கட்சிகள் நடத்தும் ஆடம்பர மாநாடுகளுக்கும், கூட்டங்களுக்கும், கட்சியின் ஆடம்பரச் செலவினங்களுக்கும் மிகப் பெரிய அளவில் பணம் தேவைப்படுகிறது. அந்தப் பெரும்பணத்தை எங்கே இருந்து பெறுவது என்பதுதான் கேள்வி.

எனவேதான் ஆட்சிக் கட்டிலுக்கு வருகின்ற கட்சிகள், ஆட்சியில் இருந்த கட்சிகள் பெருமளவில் ஆட்சி அதிகாரத்தைப் பயன்படுத்திப் பணம் பெருக்கிக் கொள்கின்றன. பெருக்கிக் கொண்ட பணம் கட்சிச் செயல்பாடுகளுக்கும், தேர்தல் செயல்பாடுகளுக்கும், கட்சியின் ஏழைகள் மற்றும் கட்சிக்காரர்களின் நலத்திட்ட உதவிகளுக்கும் பயன்படுத்திக் கொள்கின்றனர். இவைபோக, தாங்களும் எடுத்துக்கொண்டு தங்கள் வசதிகளைப் பெருக்கிக் கொள்கின்றனர்.

அதன் அடிப்படையை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

உலகமயமான பொருளாதாரத்தில் பணம் அல்லது மூலதனம் முக்கிய இடத்தைப் பிடித்ததால், அரசியல் கட்சிகளுக்குப் பெரும்பணம் கம்பெனிகளால் வழங்கப்பட்டுக் கம் பெனிகள் பெரும் சலுகைகளைப் பெற்றுக் கொள்கின்றன. அதேபோல் மக்களுக்குச் செய்யும் அனைத்துச் சேவைகளுக்கும் கட்டணம் நிர்ணயம் செய்து, அவை முறைப்படுத்தப்பட்டுச் செயல்படுத்திப் பெரும்பணம் பார்த்துக் கொண்டிருப்பதையும் மக்கள் பார்த்துக் கொண்டுதான் இருக்கின்றனர்.

அரசாங்கம் சந்தைச் செயல்பாடு களுக்கும், கம்பெனிகளுக்கும் உழைப் பதைத்தான் பெரும் செயலாக வைத் துக் கொண்டுள்ளது என்ற தோற் றத்தை மக்களுக்குத் தந்துவிட்டது. அதேபோல் சந்தையிலிருந்து கிடைக் கும் வருவாயில்தான் இவ்வளவு திட் டங்களும் உதயமாகின்றன என்பதனையும் நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

ஆனால் கம்பெனிகளின் லாபம் என்பது யாராலும் கணக்கிட முடி யாத அளவுக்கு உயர்ந்துள்ளது என்ப தையும் நாம் புரிந்துகொள்ள வேண் டும். இந்த லாபம் எங்கேயிருந்து வரு கிறது என்றால், இயற்கை வளத்தை எல்லையில்லா அளவு அழித்ததன் மூலம்தான் என்பது அனைவருக்கும் தெரிந்த ரகசியம்.

இந்த வளங்கள் குறையக் குறைய மக்களின் – அதுவும் குறிப்பாக ஏழை மக்களின் வாழ்வாதாரப் பாதுகாப்பு என்பது குறைந்து வருகிறது என்பதும் நாம் புரிந்துகொள்ள வேண்டிய ஓர் உண்மை. அதுமட்டுமல்ல, அரசுப் பணிகளெல்லாம் அதாவது சத் துணவுக் கூடத்தில் ஆயா வேலையில் தொடங்கி துணைவேந்தர் பதவி வரை, பதவிகளுக்கு விலை நிர்ணயம் செய்து வசூலிப்பதையும் ஊடகங்கள் வெளிச்சம் போட்டுக் காட்டி விட்டன.

அதேபோல் பணி இடமாறுதல் வேண்டும் என்போர், சம்பளத்தின் அளவுக்குத் தக்க பணம் தராமல் கிடைக்காது என்பது எழுதப்படாத சட்டம்போல் உருவாகிவிட்டது என்ப தையும் அன்றாட வாழ்க்கையில் கண் கூடாகப் பாதிக்கப்பட்டவர்கள் – சாதாரணமாக ஊடகங்கள் வாயி லாகக் கூறுவதை நாம் கேட்டுள் ளோம்.

அரசு, மக்களுக்குத் தரும் எந்தச் சலுகையும் கையூட்டுப் பெறாமல்



சென்று சேராது என்பது நிர்வாகத் தில் எழுதப்படாத விதிமுறையாக உள்ளது என்பதையும் ஊடகங்கள் வெளிச்சம்போட்டுக் காட்டிக் கொண்டே உள்ளன. அது பொது மக்களுக்கு உருவாக்கும் வசதிகள் அனைத்தும் கட்டிங் இல்லாமல் நடை பெறாது என்பதும் நாம் அனைவரும் அறிந்த உண்மைதான்.

ஒட்டுமொத்தத்தில் இன்று அரசியல், ஆட்சி, ஆளுகை, நிர்வாகம் என்பதெல்லாம் மக்கள் சேவை என்ப திலிருந்து தரகுவேலை என்ற நிலைக் குக் கொண்டு வரப்பட்டுவிட்டன. ஆட்சிப் பணியில் இருப்போர் மக்

களுக்காக என்பதைத் தாண்டி வணிகத்திற்காகவும் சந்தைக்காகவும் தான் என்ற நிலைக்கு வந்துவிட்டனர். இதற்கு அரசியல்வாதிகள் மக்களிட மிருந்து வாக்குகளைப் பெற மிகப் பெரிய அளவில் பணம் செலவழிக் கின்றனர். இந்தப் பணிகளைச் செய் வதன்மூலம் அரசியலும் ஒரு வியாபாரமாக உருவெடுத்துவிட்டது. இந்த அரசியல் வணிகத்தில் குடி மக்கள் நுகர்வோராக மாற்றப்பட்டு விட்டனர்.

குடிமக்களின் செயல்பாடுகளைப் பெருமளவில் அரசுத் துறைகள்தான் கட்டுப்படுத்துகின்றன. எந்தப் பணி யையும், செயலையும் அரசுத் துறை யின் அனுமதியின்றிச் செய்ய முடி யாது என்ற நிலைமைக்கு வந்து விட்டது. எனவே மக்கள் தங்கள் தோளிலும், முதுகிலும், தலையிலும் அரசாங்கத்தைப் பொதி சுமப்பது போல் சுமந்த வண்ணம் இருக் கின்றனர்.

எனவே, மக்கள் இந்தச் சுமையைத் தாங்க இயலாமல் இருக்கின்ற சூழ லில், ஆட்சியைப் பிடிக்க வேண்டும் என்று எண்ணும் கட்சிகள் செய்ய வேண்டியது ஒன்றே ஒன்றுதான். நாங்கள் ஆட்சிக்கு வந்தால் என்ன செய்வோம் என்பதற்குப் பதிலாக, நாங்கள் ஆட்சிக்கு வந்தால் எவற்றை யெல்லாம் செய்யமாட்டோம் என்று சொன்னாலே போதுமானது. அந்த அளவுக்குச் சுமையாக மாறிவிட்டது அரசாங்கம்.

அரசுத் துறைப் பதவிகளுக்கு லஞ்சம் வாங்கமாட்டோம் என்றும், அரசு ஊழியர்கள் பணியிட மாற்றம் கோரும்போது அவர்களிடமிருந்து லஞ்சம் வாங்கமாட்டோம் என்று உறுதிகூற வேண்டும். பொதுப்பணித் துறை மூலம் கட்டப்படும் பாலங்கள், பள்ளிக்கூடங்கள் மற்றும் சாலைகள் அனைத்தும் தரமானதாக இருக்கும். அதில் 20% பணத்தை எடுக்க அனு மதிக்கமாட்டோம், பல வேலைகளில் வேலை செய்ததாக வேலை செய் யாமலே பில்போட ஒரு நாளும் இனி அனுமதிக்க மாட்டோம் என்று பிரகடனப்படுத்த வேண்டும்.

அரசுத்துறைப் பேருந்துகள் இயக் குவதில் எந்த ஊழலையும் அனுமதிக்க மாட்டோம், அதேபோல் அரசுக்கு வாகனங்கள் வாங்கும்போது உற்பத்தி நிறுவனங்களிலோ, விற்பனை நிறு வனங்களிலோ கமிசன் வாங்க அனு மதிக்க மாட்டோம், புதிய வாகனங் கள் வாங்கும்போது அதன் பதிவிற் காக யாரிடமும் லஞ்சம் வாங்க அனுமதிக்கமாட்டோம், பதிவுத்துறை அலுவலகங்களில் பத்திரப்பதிவிற்கு என யாரிடமும் லஞ்சம் வாங்க அனு மதிக்க மாட்டோம், நகரங்களில் கட்டு மானத் துறைகளிடம் சதுர அடிக்கு எவ்வளவு என்று வசூலிப்பதை முற்றிலுமாக நிறுத்திவிடுவோம், கோவில்களின் வருமானத்தில் அரசுத் துறை செலவுகளைச் செய்ய அனு மதிக்க மாட்டோம், பள்ளிகள் கல்லூரிகள் தொடங்கவும் தொடர வும் அனுமதியளிக்க லஞ்சம் வாங்க மாட்டோம், இயற்கை வளத்தைச் சந்தை நிறுவனங்கள் எடுத்துச் செல் வதற்கு லஞ்சம் வாங்கிக் கொண்டு அனுமதியளிக்க மாட்டோம் என்று நம் கட்சிகள் உறுதியளிக்க வேண்டும்.

பொது நிலங்களையோ, தனியார் நிலங்களையோ கட்சிக்காரர்களை ஆக்கிரமிக்க வைத்து அவர்களுக்குப் பட்டா போட்டுக் கொடுத்துவிட்டு மக்களை மிரட்ட மாட்டோம் என்று அறிவிக்க வேண்டும்.

எனவே, ஆட்சிக்கு வரவேண்டும் என்று எண்ணுகின்ற கட்சிகள் தற் போது சொல்ல வேண்டியது – மக் களுக்கு என்ன செய்யப் போகின் றோம் என்று கூற வேண்டியது கிடை யாது. மாறாக, நாங்கள் எவற்றையெல் லாம் செய்யமாட்டோம் என்று உறுதி யளித்தாலே மக்கள் அவர்களை ஆதரித்து விடுவார்கள். இந்தச் சூழ லுக்குத் திரும்புமா நம் அரசியல்?

●

# இம்மாதராசி பலன்

**"என்ன நடக்கலாம் என்பதை அனுமானிப்பவன் சோதிடன்**
**என்ன நடக்கும் என்பதைத் தீர்மானிப்பவன் இறைவன்!"**

**1.5.2019 அன்று கோள்கள் நிலை**

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் சுக்கிரன் புதன் | சூரியன் | செவ்வாய் | ராகு |
| | 03.5.2019 புதன்–மேஷம் 07.5.2019 செவ்.–மிதுனம் 10.5.2019 சுக். – மேஷம் 15.5.2019 சூரியன்–ரிஷபம் 18.5.2019 புதன் – ரிஷபம் | | |
| | | | |
| கேது சனி | குரு | | |


'ஜோதிடத் திலகம்'
**க. தில்லையம்பலம்**


## மேஷம்



**சூ**ரியன் 15–ஆம் தேதி வரை ராசி மீது சஞ்சரிப்பதால், எதிர்பாராத நன்மைகள் ஒரு சிலருக்கு ஏற்படும். மாதத்தின் பிற்பாதியில் தன லாபம் உண்டாகும். கண்களில் சிலருக்கு அற்ப உபத்திரவங்கள் ஏற்படலாம். 7–ஆம் தேதி வரை செவ்வாய் சில தண்டச் செலவுகளை ஏற்படுத்தினாலும், பின்னர் எக்காரியத்திலும் வெற்றியைக் கொடுக்கும். குரு 8–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் சில காரியங்கள், முயற்சிகள் காலதாமதம் ஆகலாம். சனி – கேது 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் தர்ம காரியங்கள், பொதுஜனத் தொடர்புடைய காரியங்களில் ஈடுபாடுகள் ஏற்படக்கூடும். ஆன்மீகத் துறையில் வெற்றியுண்டாகும்.

ராகு 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் பயணங்கள் நன்மையாக முடியும். பயணம் சம்பந்தப்பட்ட முயற்சிகளில் இறங்க நல்ல காலகட்டங்கள். 10–ஆம் தேதி வரை சுக்கிரன் விரயத்தை ஏற்படுத்தினாலும் பின்னர் மகிழ்ச்சியை ஏற்படுத்தும். நீங்கள் நல்ல தோற்றத்தை வெளிப்படுத்துவீர்கள். இனிமையான பேச்சாற்றலால் காரியங்களைச் சாதித்துக் கொள்ளலாம். புதன் 7–ஆம் தேதி முதல் ராசி மீது சஞ்சரிப்பதால் சில நேரங்களில் துரிதமாக முடிவெடுத்துச் செயல்படுவீர்கள்.

## ரிஷபம்



**சூ**ரியன் 12, 1–மிடங்களில் இம்மாதம் சஞ்சரிப்பதால் தொழில்துறை அனுகூலங்கள் குறைவு. மாதத்தின் முற்பாதியில் விரயஸ்தானத்தில் சஞ்சரிப்பதால் விரயம், அலைச்சலும், மாதத்தின் பிற்பாதியில் மனதில் சஞ்சலமும் சபலமும் ஏற்படக் கூடும். 7–ஆம் தேதி வரை செவ்வாய் ராசி மீது சஞ்சரிப்பதால் கோபதாபங்கள் உண்டாகும். வாக்குஸ்தானத்தில் செவ்வாய் சஞ்சரிப்பதால், உஷ்ணமான வேண்டத் தகாத வார்த்தைகளைப் பிரயோகம் செய்வீர்கள். தண்டச் செலவுகளும் நேரிடும். செவ்வாய் – சனி பார்வை ஏற்படுவதால், பொறியியல் துறையில் இருப்பவர்கள் கலக்கத்தை அடைவர். ஒருசிலர் போக்குவரத்துகளில் ஆபத்தை அடையக் கூடும். கவனம் தேவை.

குரு அனுகூலமாகச் சஞ்சரிப்பதால் சுப காரியங்கள் வரும் நவம்பர் மாதம் 2–ஆம் தேதி வரை ஈடேற வாய்ப்புள்ளதால் தொடர்ந்து முயற்சிக்கவும். 8–இல் சனி சஞ்சரிப்பதால் தடைகள் ஏற்பட்டாலும் முயற்சிகளைக் கைவிட வேண்டாம். 10–ஆம் தேதிவரை சுக்கிரன் 11–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் ஸ்திரீ மூலம் அல்லது கடன்கள், எதிராளிகள் மூலம் நன்மை ஏற்படலாம். 3–ஆம் தேதி முதல் குழந்தைகளால் செலவும், கவலையும் தோன்றும். 18–ஆம் தேதிக்குப் பின் கவலைகள்

அகன்றுவிடும். புதிய முயற்சிகளுக்கு ஏற்ற காலமல்ல.




**சூ**ரியன் மாதத்தின் முற்பாதியில் அனுகூலமான பலன்களை ஏற்படுத்தும் வாய்ப்புண்டு. தொழில் துறையில் முன்னேற்றம் ஏற்படும். தனம், பொருள் லாபமாகும். மாதத்தின் பிற்பாதியில் விரயம் ஏற்படும். செவ்வாய் 7–ஆம் தேதி வரை அசௌகரியமான சூழ்நிலையை ஏற்படுத்தினாலும் பின்னர் உங்கள் ராசி மீது சஞ்சரிப்பதால் தைரியம் பிறக்கும். ஆனால் செவ்வாய் உங்கள் ராசிக்குத் தீய கிரகம் என்பதால் மனக்குமுறலை ஏற்படுத்தும். வயதானவர்களுக்கு நோய் நொடிகளையும் இரத்த சம்பந்தமான பாதிப்புகளையும் ஏற்படுத்தக் கூடும். குரு 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் தொழில் தொடர்பாகவோ அல்லது வேறு காரணங்களுக்காகவோ கடன்பெற நேரலாம்.

சனி – கேது 7–இல் சஞ்சரிப்பதால் உடலைச் சுறுசுறுப்பாக வைத்துக் கொள்ள வேண்டும். கூட்டுத் தொழில் அல்லது கூட்டாளி மூலமாகக் குழப்பங்கள் நேரலாம். புதிய கூட்டுத் தொழில் செய்யக் கூடிய வாய்ப்பும் ஏற்படலாம். தகுதியுடையவர்களுடன் சேர்க்கை வைத்துக்கொள்வது நல்லது. ராசி மீது ராகு சஞ்சரிப்பதால் உங்கள் வாழ்க்கையில் அந்நியர்கள் குறுக்கிடக் கூடும். சுக்கிரன் 10–ஆம் தேதி முதல் பெண்களால் நன்மையை ஏற்படுத்தும். புது முயற்சிகளில் மாதத்தின் முற்பாதியில் தொடங்க நன்மை ஏற்படும்.




**சூ**ரியன் 10, 11–மிடங்களில் இம்மாதம் சஞ்சரிப்பதால் சகல காரிய அனுகூலம் ஏற்படும். முயற்சிகள் பலிதமாகும். தொழில் உத்யோகத் துறைகளில் ஏற்றம் உண்டாகும். நண்பர்களால் உதவியும் லாபமும் ஏற்படும். உத்தியோகஸ்தர்களால் 7–ஆம் தேதி வரை நன்மை ஏற்படவும் வாய்ப்புண்டு. 7–ஆம் தேதி முதல் செவ்வாய் விரயஸ்தானத்தில் சஞ்சரிப்பதால் ஞாபக மறதி ஏற்படும். எக்காரியத்தையும் ஒரு முறைக்கு இரு முறையாகச் சிந்தித்துச் செயல்பட வேண்டும். சனி – கேது 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் வசதிகள் கூடும். அதேசமயம் வாழ்க்கைத் துணைவரால் சிலர் அற்ப சங்கடங்களை அடைவர்.

குரு 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் பணத் தட்டுப்பாடுகள் ஏற்படாது. சுப காரியங்களிலும் அனுகூலமானப் போக்குத் தென்படும். சுக்கிரன் 10–ஆம் தேதி முதல் 10–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் ஆடை அணிகலன்கள் லாபமாகும். பெண்களால் சிலருக்குத் தொழில் ஸ்தலத்தில் மனஸ்தாபங்கள் ஏற்படலாம். ராகு 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் எதிரிகள் மூலம் சிலர் கலக்கத்தை அடைவர். 18–ஆம் தேதி முதல் புதன் லாபஸ்தானத்தில் சஞ்சரிப்பதால் கல்வி கேள்விகளிலும் உறவினர் வகையிலும் நன்மை ஏற்படும்.




**சூ**ரியன் மாதத்தின் முற்பாதியில் பற்பல தடைகளுக்குப் பின் வெற்றியை அளித்தாலும் மாதத்தின் பிற்பாதியில் யோக பலன்களை ஏற்படுத்தக் கூடும். எண்ணிய காரியம் நிறைவேறும். தொழில் உத்தியோகத் துறைகளில் எதிர்பார்ப்புகள் ஈடேறும். சுப காரியங்களில் ஈடுபடுவீர்கள். புதியதான முயற்சிகள், செயல் திட்டங்களுக்கு ஏற்ற காலமாகும். செவ்வாய் இம்மாதம் 7–ஆம் தேதி முதல் லாபஸ்தானத்தில் சஞ்சரிப்பதால் உத்தியோக உயர்வு ஏற்படும். சனி 5–ஆம் வீட்டில் கேது சேர்க்கை பெற்றுச் சஞ்சரிப்பதால் புத்திர வர்க்கத்தாரால் கவலையும் செலவும் தவிர்க்க இயலாது.

குரு 4–இல் சஞ்சரிப்பதால் சொந்த வியாபாரம் செய்பவர்கள் புதிய முதலீடுகளைச் செய்து தங்களது தொழிலை விருத்தி செய்யலாம். புதிய இடங்களுக்குக் குடிபெயர்ந்து செல்லக்கூடிய வாய்ப்பு சிலருக்கு ஏற்படும். சுக்கிரன் 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் விலையுயர்ந்த பொருள் வாங்கும் யோகம் கிட்டலாம். ராகு 11–இல் சஞ்சரிப்பதால் நூதனமானவர்களது நட்பு கிட்டலாம். தக்க சமயங்களில் உதவியும் கிடைக்கும். மிகவும் வயதானவர்களுக்குக் காதுகளில் கோளாறு ஏற்படக் கூடும். திருமணக் காரியங்கள் திசாபுத்தி அனுகூலம் பெற்றவர்களுக்கே சித்தியாகும்.

**சூ**ரியன் 8,9–மிடங்களில் இம்மாதம் சஞ்சரிப்பதால் நற்பலன்கள் குறைவு. மாதத்தின் முற்பாதியில் தடை தாமதமும் திடீர் செலவுகளும் தவிர்க்க இயலாதது. மாதத்தின் பிற்பாதியில் தொழில் உத்தியோகத் துறைகளிலும் பொரு

## கன்னி



ளாதார விஷயங்களிலும் இம் மாதம் பெரியதொரு எதிர்பார்ப்பு களை ஏற்படுத்திக் கொள்ள வேண்டாம். செவ்வாய் 7–ஆம் தேதி முதல் 10–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் தொழில் துறை யில் அதிகார வரம்புகளுக்கு உட்பட்டுச் செயல்பட்டு வருவது நல்லது. உத்தியோகத் துறையில் இருப்பவர்கள் தொழில் சங்கடங்களால் அவசரப்பட்டு வேலையை விட்டுவிட வேண்டாம்.

குரு 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் பிறர் மீது அதிருப்தி கொள்வதும் பொறாமைப்படுவதும் அவசர முடிவெடுப்பதும் கூடாத ஒன்றாகும். சனி – கேது 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் குடும்பத் தில் ஒற்றுமைக் குறைவு ஏற்படுவதும் வயது முதிர்ந்த பெரியவர்களுக்கு உபத்திரவங்கள் ஏற் படுவதும் தவிர்க்க இயலாத ஒன்றாகும். 10–ஆம் தேதி முதல் சுக்கிரன் 8–இல் சஞ்சரிப்பதால் கை யூட்டுக் கொடுப்பதும் வாங்குவதும் பிரச்சினை களில் முடியலாம். காரியம் ஆக வேண்டும் என்ப தற்காக எங்கும் எதிலும் அவ்வாறான காரியங் களில் இறங்க வேண்டாம். திருமணக் காரியங் கள் கைகூடுவது கடினம்.

## துலாம்



**சூ**ரியன் மாதத்தின் முற் பாதியில் எதிர்பாராத சம்பவங் கள், செலவுகளால் வருத் தத்தை ஏற்படுத்தலாம். நண்பர் கள் வழியிலோ, குடும்பத்திலோ திருப்தியற்ற நிகழ்ச்சிகளால் சங்கடங்கள் ஏற்பட வாய்ப் புண்டு. மாதத்தின் பிற்பாதியில் மிகவும் அத்தியாவசியமான செலவுகள் ஏற்படும். செவ்வாய் இம்மாதம் 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் வீண் பயம் ஏற்படும். குரு 2–இல் சஞ்சரிப்பதால் பொருள் வரவு, பணவரவு திருப்திகரமாகக் காணப்படும். உங்கள் சொல் லுக்கு மதிப்பு ஏற்படும். 3–ஆம் வீட்டில் சனி – கேது சஞ்சரிப்பதால் சகோதர வர்க்கத்தார் சிரமங்களை அடைவர்.

சுக்கிரன் 10–ஆம் தேதி முதல் 7–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் ஸ்திரீகளின் எதிர்ப்பு ஏற்படக் கூடும். புதனும் 18–ஆம் தேதி வரை உங்களுக்குக் குழப்பத்தை ஏற்படுத்தலாம். திருமணம் போன்ற சுப காரியங்கள் எதிர்வரும் நவம்பர் மாதம் 2–ஆம் தேதி வரை ஈடேற வாய்ப்புள்ளது. இதுவரையிலும் தடைப்பட்டவர்களுக்கு இவ்வருடம் திருமணம் நடைபெற வாய்ப்புள்ளது. புது முயற்சிகளில் இம் மாதம் இறங்க வேண்டாம். ஏதேனும் புதிய முயற்சி களில் இறங்க வேண்டிய சூழல் ஏற்பட்டால், மாதத் தின் முற்பாதியிலேயே தொடங்கி விடலாம். உங் களுக்கு வைகாசி மாதம் எப்பொழுதும் நல்லதல்ல.

## விருச்சிகம்



**சூ**ரியன் மாதத்தின் முற் பாதியில் சத்ரு ஜெயம், காரிய வெற்றி, தொழில்துறை நன்மை முதலியவற்றை வழங்கக் கூடும். மாதத்தின் பிற்பாதியில் தொழில்வழி நண்பர்கள் சந்திப்பு, சிறுசிறு பயணங்கள், சுபகாரியச் செலவுகள் முதலிய வற்றை ஏற்படுத்தக் கூடும். செவ்வாய் 8–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் பிறர்மீது சண்டை சச்சரவு கள் தேவையில்லாமலேயே ஏற்படக் கூடும். பொறுமை தேவை. குரு உங்கள் ராசி மீது சஞ் சரிப்பதால் உங்களது திறமை, அறிவு முழுமை யாகப் பயன்படாது. இளம் தம்பதியர்கள் தங்களுக் குள் கருத்து வேற்றுமைகள் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

இந்த ஆண்டு நவம்பர் 2–ஆம் தேதி வரை திருமண யோகம் சித்தியாக வாய்ப்பில்லை. ராகு – செவ்வாய் சேர்க்கை 8–இல் ஏற்படுவதால் விபத் துக்கள் ஏற்படலாம். ஒருசிலருக்குத் தொண்டை யில் நுண்கிருமிகள் தாக்கத்தால் பாதிப்பு ஏற்பட லாம். சனி – கேது 2–இல் சஞ்சரிப்பதால் பண வருவாய் உண்டு. ஆனால் சேமித்து வைப்பது என் பது கேள்விக்குரியானது. வாழ்க்கைத் துணைவர் அநாவசியச் செலவுகளுக்கு இம்மாதம் வித்திடு வார். பணத்தைச் செலவு செய்வதில் கவனம் தேவை.

## தனுசு



**சூ**ரியன் மாதத்தின் முற் பாதியில் புத்திக் குழப்பத்தை உண்டாக்கலாம். பெண்கள் மூலம் விரோதம் ஏற்படக் கூடும். எக்காரியத்திலும் தடை கள் ஏற்படக்கூடும். மாதத்தின் பிற்பாதியில் தொழில் உத்தி யோகத் துறைகளில் அனு கூலத்தை அடையலாம். சுப காரிய முயற்சிகள் வெற்றியாகும். எதிர்ப்புகள் அகன்றுவிடும். ஒருசிலர் தகப்பனார் வழியில் விரோதம் கொள்வர். குரு 12–ஆம் வீட்டில் சஞ் சரிப்பதால் நவம்பர் மாதம் 2–ஆம் தேதி வரை உங்களது அந்தஸ்தைத் தக்க வைத்துக்கொள்ளப் போராட வேண்டும். திருமணம் போன்ற சுப காரி யங்கள் உங்களது ஜனன ஜாதகத்தில் நடைபெறும் திசா புத்திக்கேற்ப நடைபெறும்.

சனி – கேது ராசி மீது சஞ்சரிப்பதால் லேசான உடல் நலிவுகள் இருந்து வரும். ஒரு சிலருக்கு உஷ்ணத்தால் பாதிப்பு வரக்கூடும். சிரசு வலி போன்றவை ஏற்படக்கூடும். ராகு 7–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் நூதனமானவர்களின் நட்பு கிட்டும். உல்லாசப் பயணம், வெளிதேசப் பயணம் சிலருக்கு வாய்க்கும். செவ்வாய் 7–ஆம் வீட்டில் ராகுவுடன் சேர்ந்து சஞ்சரிப்பதால் இல்லற வாழ்வில் சர்ச்சைகளுக்கு இடம் கொடுக்கலாகாது. போக்குவரத்துகளிலும் கவனம் தேவை. சுபகாரியங்களை மாதத்தின் பிற்பாதியில் தொடங்கலாம்.

## மகரம்



**சூ**ரியன் மாதத்தின் முற்பாதியில் சற்று அசௌகரியத்தை உடல் ரீதியாகவும் மன ரீதியாகவும் ஏற்படுத்தலாம். தேவையற்ற அலைச்சல் சிலருக்கு ஏற்படும். மாதத்தின் பிற்பாதியில் செலவும், காரியத் தடைகளும், முடிவெடுக்க இயலாத தன்மையையும் ஏற்படுத்தக்கூடும். செவ்வாய், ராகு இணைவு பெற்று 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் ஜாமீன் கையெழுத்துப் போடுவது, பிறருக்கு உபகாரம் செய்ய நினைப்பது ஆகாது. 6, 8, 12–ஆம் வீட்டிற்குரிய திசாபுத்திகள் நடைமுறையில் இருப்பின் மோசடிச் செயல்களில் சிலர் ஈடுபட்டுத் தண்டனை அனுபவிப்பர். சிலர் பிறரது உடமைகளை நூதனமான முறையில் அபகரிக்கவும் கூடும்.

குரு 11–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் சுப காரியங்கள் ஒருசிலருக்கு ஈடேறும். 12–இல் சனி சஞ்சரிப்பதால் அசையாச் சொத்துக்கள் வாங்கலாம். நீண்ட காலத் திட்டங்களில் முதலீடு செய்யலாம். கேது 12–இல் சனியுடன் சேர்ந்து சஞ்சரிப்பதால் ஆன்மீகத் துறைகளில் இயற்கையாகவே நாட்டம் செல்லும். ஒருசிலர் உலகப் பற்றைப் பற்றிய சிந்தனைவயப்படுவர். சுக்கிரன் 10–ஆம் தேதி முதல் 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் வாகன சுகம் உண்டு. ஒருசிலர் வசதி வாய்ப்புகளைக் கடன்பட்டாவது அதிகரித்துக் கொள்வர்.

## கும்பம்



**சூ**ரியன் மாதத்தின் முற்பாதியில் 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் காரியசித்தி, தொழில்துறை அனுகூலம், பொருளாதார அபிவிருத்தி, மனஉறுதி முதலிய நற்பலன்களை ஏற்படுத்தக் கூடும். மாதத்தின் பிற்பாதியில் 4–ஆம் வீட்டில் சூரியன் சஞ்சரிப்பதால் தேக நலம் பாதிக்கப்படலாம். சுபச் செலவுகளும், அலைச்சலும் ஏற்படலாம். செவ்வாய் 5–ஆம் வீட்டில் ராகுவுடன் சேர்ந்து சஞ்சரிப்பதால் கைகளில் பாதிப்பு ஏற்படலாம். ஆராய்ச்சித் துறையில் உள்ள மாணவர்களுக்கும் போட்டித் தேர்வுகள் எழுதுபவர்களுக்கும் நன்மை உண்டாகும்.

குரு 10–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் தொழில் வழியில் அபகீர்த்தி ஏற்படலாம். எதிர்வரும் நவம்பர் 2 தேதி வரை இந்தப் பலன் நடைபெறும். சனி – கேது 11–இல் சஞ்சரிப்பது உங்களுக்கு மிகவும் நன்மையானது. வசதி கூடும். முதியவர்கள் மூலம் ஆதரவு கிட்டும். ஆடம்பர வஸ்துகள் வாங்கலாம். சுக்கிரன் 3–ஆம் வீட்டில் 10–ஆம் தேதி முதல் சஞ்சரிப்பது சுகபோக இச்சைகளுக்குக் குறைவில்லை. திருமணம் முதலிய சுபகாரியங்கள் இந்த ஆண்டுக் கடைசியில் ஒருசிலருக்கு நிறைவேறும். ஜனன ஜாதகத்தில் ராசிக் கட்டத்தில் குரு ரிஷப ராசியில் அமையப் பெற்றவர்களுக்குக் குருபலன் உண்டு. புது முயற்சிகளை மாதத்தின் முற்பாதியில் தொடங்கலாம்.

## மீனம்



**சூ**ரியன் மாதத்தின் முற்பாதியில் பெரியதொரு நன்மையை ஏற்படுத்த இயலாது. மாறாக பணத் தேவைதான் மிகுதியாகும். சுக்கிரன் சேர்க்கையால் ஒருசிலருக்குக் கண்களில் உபாதை ஏற்படலாம். மாதத்தின் பிற்பாதியில் 3–ஆம் வீட்டில் சூரியன் சஞ்சரிப்பதால் தன்னம்பிக்கை கூடும். தொழில் உத்தியோகத் துறைகளிலும், பொருளாதார விஷயங்களிலும் எதிர்பார்ப்புகள் ஈடேறும். செவ்வாய் – ராகு 4–ஆம் வீட்டில் இம்மாதம் சேர்க்கை பெறுவதால், பிரயாணங்களிலும் வண்டி வாகனங்களைக் கையாள்வதிலும் எச்சரிக்கை தேவை.

குரு 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் செல்வ வளம் கூடும். கடந்த ஆண்டு அடைந்த துன்பங்கள் முற்றிலும் அகன்றுவிடும். திருமணக் காரியங்களும் ஈடேறும். தொலைதூரப் பயணங்களுக்கு ஏற்ற காலம். சனி – கேது 10–இல் சஞ்சரிப்பதால் சத் கர்மங்களில் ஈடுபடலாம். துர்க் கர்மங்களை விலக்க வேண்டும். நீதிமானாய் இருந்தால் தொழில் துறையில் வீழ்ச்சி ஏற்படாது. குறுக்கு வழியில் ஈடுபட்டால் உங்கள் தொழில் துறையில் கருநிழல் படரும். சூரியன் மாதத்தின் பிற்பாதியில் 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் புதிய திட்டங்கள் தீட்டிச் செயல்பட ஏற்ற காலம். நன்மை உண்டு. ●

கட்டுரை

# புதுவையின் கீழடி அரிக்கமேடு

அண்மையில் புதுச்சேரி சென்றிருந்த போது நண்பர் அமரநாதனுடன் தொல்லியல் துறையால் அகழாய்வு செய்யப்பட்ட இடமான அரிக்கமேட்டைக் காணச் சென்றேன். பலமுறை புதுவை சென்றபோதும் அரிக்கமேட்டின் தொன்மைச் சிறப்பை அறியாத காரணத்தால் அங்குச் சென்றதேயில்லை. பிப்ரவரி மாத 'தி இந்து' நாளேட்டின் ஞாயிறு சிறப்பிதழில் புகைப்படத்துடன் 1 1/2 பக்கக் கட்டுரை, அரிக்கமேட்டின் இன்றைய அவலநிலையைப் படம்பிடித்துக் காட்டியது. நாங்கள் அங்குச் சென்றபோதும் அந்த நிலை எள்ளவும் மாறவில்லை.

அரியாங்குப்பத்தின் தார் சாலையின் முடிவில் ஒரு குறுகிய மண்சாலை தொடங்குகிறது. இருபுறமும் குடிசைகள், சிறு வீடுகள். அங்கு நின்றிருந்த ஒருவரிடம் அரிக்கமேடு போக வழி கேட்டோம். எதுவும் பேசாமல் சாலையைக் காட்டி 'நேர போ...' என்று கை காட்டினார். அங்கிருந்து மெல்ல நகர்ந்தோம்.

சற்றுத் தொலைவு சென்றபின் புதரின் நடுவே 'இந்தியத் தொல்லியல் துறை' என்ற பச்சை வண்ணப் பலகை காணப்பட்டது. அதைத் தொடர்ந்து கம்பிவேலி தொடர்ந்தது. அதனுள்தான் ரோமாபுரியுடன் வணிகம் நடத்திய அன்றைய கார்பரேட்டுகளின் ஏற்றுமதி வணிக பூமி சிறைப்படுத்தப்பட்டிருந்தது.

உள்ளே செல்ல வழி இருக்குமா என்று பார்த்தபடி மெல்ல நகர்ந்தோம். சற்றுத் தொலைவில் முன்போலவே தொல்லியல் துறை இது எங்கள் உடமை என்று அறிவிக்கும் பலகை, பழைய இரும்புக் கதவு திறந்து கிடந்தது.

ஆள் அரவமற்ற அந்தப் புதர்க்காட்டுக்குள் சற்றுத் தொலைவில் ஒரு முன்னாள் பெரிய கட்டடத்தின் கரைந்த செங்கல் தூண்கள் பிரம்மாண்டமாக நின்றன. திடீரென இருவர் புதர்களின் நடுவிலிருந்து வெளிவந்தனர். எங்களைக் கடந்து சென்ற அவர்களிடம் ''உள்ளே பார்ப்பதற்கு எதுவுமிருக்கிறதா...'' என்று கேட்டோம். நாக்கைச் சப்பியபடி ''இங்கு மொட்டைக் கட்டடமும், குட்டை மரங்களும் தவிர வேறெதுமில்லை'' என்று சொன்னபடி மறைந்தனர்.

மேற்கூரையின்றி நீள்சதுர வடிவிலிருந்த கட்டடத்தின் கரைந்த பெரிய தூண்கள் மட்டுமே நின்றன. சுற்றி வந்தோம். உள்ளே சிலர் வட்டமாக அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். நடுவில் சில பாட்டில்கள், டம்ளர்கள். அவர்கள் நாங்கள் வந்ததைத் தொல்லையாகவே எடுத்துக்



ஈரோடு ஜீவா

கொள்ளாமல், தங்கள் வேலையை மகிழ்ச்சியாகத் தொடர்ந்தபடி இருந்தனர். இது என்ன கட்டடம்? என்னவாக இருந்தது? எந்தக் காலத்தியது? கேட்க எவருமில்லை.

சிறிது நேரம் பயனின்றி அலைந்து, எந்த அகழாய்வுப் பணியும் நடைபெற்றதற்கான அறி குறி எதையும் காணாமல் வெளியே வந்தோம். அந்த இடத்தின் முக்கியத்துவத்தை வருவோர்க்கு உணர்த்தும் எந்தப் பலகையுமில்லை. எங்களைப் போல எத்தனை பேர் ஏமாற்றத்துடன் திரும்பி யிருப்பார்களோ தெரியவில்லை.

பின் ஒற்றையடிப்பாதை வழியாக கழிமுக ஆறுவரை நடந்து செல்ல முற்பட்டோம். சற்றுத் தொலைவில் ஆறு தெரிந்தது. ஒரு படகு சென்று கொண்டிருந்தது. சிலர் மீன் பிடித்துக் கொண்டி ருந்தனர். கடலிலிருந்து இந்த ஆற்றின் வழியாகத் தான் ரோமானியர்கள் 2200 ஆண்டுகளுக்கு முன்பு தங்களது திராட்சை மதுக் குடங்களுடன் இந்தக் கரைக்கு வந்திருக்கக் கூடும். ‘பொன்னி யின் செல்வன்’ படிப்பவர்கள் நாகப்பட்டினத் திற்கும், வல்லத்திற்கும் செல்லும்போது பெறும் உணர்வுதான் மிஞ்சியது.

இனி ஆவணங்களையும், நண்பர்களையும், நூல்களையும் நாடுவதன்றி 2200 ஆண்டுக் காலத் தொன்மையை அறிய வேறு வழியில்லை. நண்பர் புதுச்சேரி அருங்காட்சியகம் அழைத்துச் சென் றார். பழைய பிரெஞ்சுக் கட்டடம் அருங்காட்சியக மாக மாற்றப்பட்டிருந்ததே பெரும் நிறைவு தந்தது.

ஆனால் உள்ளே சென்றபோது விளக்கும் நபர்களும், காட்சிப்படுத்தப்பட்ட பொருட்களும் ஈராயிரம் ஆண்டுக்காலப் பெருமைகளை விளக் குவதாக இல்லை. அரிக்க மேட்டிற்கே உரிய சிறிய மணிகள், சில ரோமானிய நாணயங்களும் காட்சிப்படுத்தப்பட்டிருந்தன. நாணயங்களுக்கான சில இடங்கள் காலியாக இருந்தன. என்னவா கினவோ? சில பெரிய ரோமானிய மதுக் குடங்கள் அழகிய வேலைப்பாட்டுடன் தூக்குவதற்கு வசதி யாக இருபுறமும் கைப்பிடிகள் வைக்கப்பட் டிருந்தன.

ரோமானிய மன்னர்கள் காலினஸ் ஆண்டோ னியானுஸ், டெட்ரிகஸ் ஆண்டோனியானுஸ் காலத்து அழகிய உருவங்கள் கொண்ட நாணயங் கள் தொன்மையின் சாட்சியாக இருந்தன. இதற்கு மேல் தெரிந்துகொள்ள எதுவுமில்லை என்ற முடிவுடன் புறப்பட்டோம்.

பின் கடற்கரையில் வந்தமர்ந்து ரோமானியப் பாய்மரப் படகுகள் வருவதையும், சிறு படகுகளில் மதுக் குடங்களை ஏற்றிக் கொண்டு ஆற்று வழி யாக அரிக்கமேடு புறப்படுவதையும் கற்பனையில் கண்டோம். ரோமானிய நாணயங்களைத் தந்து கடற்கரைக் கடைகளில் ஒளிரும் கொர்னீலி யக்கல் ஆரங்களை அவர்கள் வாங்குவதையும், ரோமானியர் தந்த திராட்சை மதுவில் மயங்கிக் கடற்கரை மணலில் காதலர்கள் மயங்கிக் குலாவு வதையும் மனக்கண்ணில் கண்டு ரசித்தேன்.



இரவு தொல்லியல் அறிஞர் நண்பர் மகேஷ்வ ரனுடன் நடத்திய நீண்ட தொலைபேசி உரையாடல் ‘பொன்னியின் செல்வன்’ படிப்பது போல சீசரின் காலத்திற்கே கூட்டிச் சென்றது.

1945-இல் மார்டிமர் வீலர் எனும் பிரிட்டிஷ் தொல்லியல் அறிஞர் அரிக்கமேட்டில் எவ்விதத் தொல்லியல் சான்றுகளும் மேற்புறத்தில் காணப் படாததால் அகழ் ஆய்வை மேற்கொண்டார். பல மெடிட்ரேனியன் மதுக்குடங்களும், நாணயங் களும், சாயம் போடும் தொட்டிகளையும் கண்டெ டுத்தார்.



பிக்லீ எனும் அறிஞர் இங்கு மண்பானை செய்யும் தொழில் சிறப்பாக இருந்ததற்கான சுவடுகளைக் கண்டார். இங்கிருந்து திராட்சை மதுவை நீண்டகாலம் சேமித்துப் பதப்படுத்தும் மதுக்குடங்களையும் தட்டுகளையும் வாங்கிச் சென்றிருக்க லாம் என்றார்.

அரிக்கமேடு ரோமானியப் பேரரசு உருவாகும் முன்னரே வணிகத்துறை முகமாக இருந்திருக்கக் கூடும். சங்கப் பாடல்களில் ரோமானிய ஆம்போரா திராட்சை மது பற்றிய குறிப்புகள் உள்ளன. ரோமாபுரியின் பாம்பி நகர அகழ் ஆய்வில் கிடைத்த லட்சுமி, யக்சி சிலைகள் இந்தியாவிலிருந்து வந்தனவே என் கின்றனர். குளுமை யான, சுவைமிக்க, மணக்கும் மதுரசம் பற்றிய பாடல் புறநானூற்றிலும், சமஸ் கிருதப் பாடல்களிலும் உள்ளன.



புதுச்சேரி பிரெஞ்சு இன்ஸ்டிட்யூட் அரிக்க மேட்டைப் பற்றிய விரிவான ஆய்வுகளை மேற் கொண்டு ஆவணப்படுத்திக் காத்து வருகிறது.

அகழ் ஆய்வில் இன்றைய பார்களுக்கு இணையாக மக்கள் கூடிக் குடித்து மகிழும் வகையில் பெரிய மது அரங்கங்கள் இருந்ததைக் கண்டுபிடித்துள்ளனர். ரோமானிய வணிகர்கள் குடித்து மகிழ்ந்ததன் தொடர்ச்சியே இன்றும் மதுப் பிரியர்கள் புதுச்சேரி தேடி வருவதும் சீனா, இந்தியா, எகிப்து ஆகியவற்றை இணைத்துப் பண்டைய பட்டுச்சாலையில் (Silk Road) அரிக்க மேடு ஒரு முக்கிய வணிகத்தளமாக இருந்தது.

தென்னகத்தில் சமணம் தழைத்திருந்த காலத்தில் 'அருகன்மேடு' எனும் சமணப் பெயர், பின் 'அரிக்கமேடு' என்று மாறியது என்றார் பேராசிரியர்.

இந்தத் தொன்மைப் பெருமைமிக்க அரிக்க மேடு தன்னுள் பழப்பெருமை மிக்க ரோமாபுரி வணிகத் தொடர்புகளை உணர்த்தும், விலை மதிப்பற்ற கல் ஆரங்களையும், ரோமாபுரி ராணி களுக்குப் பனித்திரை போன்ற மஸ்லின் ஆடைகளைத் தந்த சாயத் தொட்டிகளையும், ரோமாபுரியின் மணக்கும் திராட்சை ரசக் குடங் களையும், உலகின் தொன்மை மிக்க வணிகத் துறைமுகத்தையும், இத்தனை பெருமை களுக்கும் காரணமான மக்களையும், அவர்களின் வாழ்விடங்களையும் மண் ணின் அடியில் புதைத்து உறங்கிக் கொண்டுள்ளது.

இவற்றை அகழ்ந்தாயும் முயற்சி தொடங்கப்பட்டு ஏனோ தொடராமல் போனது. இனிவரும் காலத்தில் புதுச்சேரி தன் பெருமைகளை உணரத் துணைசெய்யும் அகழ் ஆய்வை மீண்டும் மேற் கொண்டு தென்னகத்தின் வரலாற்றுப் பெரு மையை நிலைநாட்டும் வாய்ப்பும் கடமையும் புதுவை ஆட்சியாளர்களுக்கு உண்டு. அரிக்க மேட்டில் குறைந்தபட்சம் அதன் தொன்மைப் பெருமைகளைத் தேடி வருவோருக்கு உணர்த்தும் காட்சிப் பலகைகளையாவது வைப்பது பயன் தருவதாகும்.

வங்கக் கடலில் பாய்மரப் படகுகளில் வந்து, மதுக்குடங்களையும், மதிப்பு நீக்கப்பட்ட அழகிய தங்க, வெள்ளி நாணயங்கள் கொண்ட பேழை களைச் சிறிய படகுகளில் ஏற்றிக் கொண்டு அரிக்கமேடு நோக்கி ஆற்றில் ரோமாபுரி வணிகர் பயணிப்பதையும், அவர்கள் அரிக்கமேடு வணிகச் சந்தையில் விற்றும், வாங்கியும் வணிகம் செய்த தையும், மாலையில் மதுக்கூடங்களில் ஆம்போரா திராட்சை மதுவை மாந்தி மகிழ்ந்ததையும் கற் பனை செய்தபடி, இன்றைய மதுப் பிரியர்கள் குடித்து வீசிய மது பாட்டில்களைக் கவனமாகக் கடந்து புறப்பட்டோம்.

2200 ஆண்டுகாலத் தொன்மை கொண்ட அரிக்கமேடு தன்னை மீட்டெடுக்கும் யாருக் காகவோ அகலிகை போலக் காத்துக் கிடக்கிறது. ●



சிலப்பதிகாரத்தைப் போல அதையும் வாசித்தவர். உதயணன் – வாசவதத்தை காதலை உலகக் காதல் உயரத்திற்கு உயர்த்திக் காட்டியவர் சிலம்பொலியார்.

திராவிட இயக்கத் தலைவர்களான அண்ணா, கலைஞர், எம்.ஜி.ஆர்., ஜெயலலிதா ஆகியோரோடு நல்ல தொடர்பில் இருந்தவர். உலகத் தமிழ் மாநாடுகளை முனைப்போடு நடத்திக் காட்டியவர்.

'ஓம் சக்தி' தீபாவளி மலர்களில் அவர் எழுதிய கட்டுரைகள் 100 ஆண்டுகளுக்குப் பிறகும் வாசித்து அனுபவிக்கத் தக்கவை. இலக்கியக் கடிதங்களில் மாதவி எழுதிய மடல் என்றைக்கும் தமிழாய் மணக்கும்.

# சிலம்பொலியாருக்கு கண்ணீர் அஞ்சலி!

**சா**ன்றோர் சிலம்பொலி செல்லப்பனார் மறைந்துவிட்டார். நான்கு வயது மூத்த அருட்செல்வரின் மிக நெருங்கிய நண்பர்.

அருட்செல்வருக்கு இவர் மேல் உள்ள ஆதங்கம் ஒன்றே ஒன்றுதான். இலக்கியப் புலமையும், சொல்லாற்றலுமுள்ள சிலம்பொலியார், தமது பாடு பொருளாகச் சங்க இலக்கியத்தைப் பிரச்சாரம் செய்திருந்தால், இன்றைய தமிழ்ச் சான்றோர்களின் தலைமைப் பதவியில் திகழ்ந்திருப்பார். ஆனால், அவர் பகுத்தறிவுப் பாதைக்கு மாறி, கடவுள் மறுப்பு இயக்கத்தோடு நெருக்கமாகிவிட்டதுதான் அருட்செல்வரின் ஆதங்கம்.

அருட்செல்வர் சொன்னதுபோல உயர்நிலைப் பள்ளிக் கணித ஆசிரியரான இவர் தமிழால் உயர்ந்தார். தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தராக ஆகியிருக்க வேண்டும். டாக்டர் மு.வ. ஆரம்பப் பாடசாலை ஆசிரியராக இருந்து, மதுரை பல்கலைக்கழகத்தின் துணைவேந்தரானவர்.

சிலம்பொலியார் ஆச்சரியப்படத்தக்க நினைவாற்றல் உள்ளவர். சங்க இலக்கியத்தை ஒப்பித்து விளக்கவுரை தருவதைப் போலவே, நவீன காலக் கவிஞர்களான நா. காமராசன், அப்துல் ரகுமான், மு. மேத்தா, சிற்பி, தமிழன்பன், தேனரசன், புவியரசு போன்றோரின் கவிதைகளை அட்சரம் பிசகாமல் ஒப்பிப்பார்.

தமிழ்நாட்டில் யாரும் அதிகமாக ஈடுபாடு காட்டாத மாக்கவிஞன் கொங்குவேள் பெருங்கதையின் பாத்திரங்களை அத்தனை அழகோடு பேசியவர்கள் அநேகமாகத் தமிழகத்தில் வேறு யாரும் இல்லை.

அவர் எல்லோருக்கும் உதவும் பண்புடையவர். சொற்பொழிவுகளுக்குச் சொந்தச் செலவில் சென்று திரும்பியவர். கோவையில் அருட்செல்வர் 20 ஆண்டுகளாக நடத்திவந்த தேவார திவ்யப் பிரபந்தத் தமிழிசைக் கலைவிழாவிற்கு அப்படித்தான் வந்து சென்றார்.

ஏனோ, வள்ளலாரைப் பற்றிய அவருடைய சொற்பொழிவுகள் பாவேந்தர் பற்றிய அளவுக்கு அதிகமாக இல்லை. காரணம், பாவேந்தரிடத்தில் தன்னைப் பறிகொடுத்துவிட்ட பிறகு மற்ற கவிஞர்களிடத்தில் பறிகொடுப்பதற்கு அவரிடம் மிச்சம் ஏதுமில்லை போலும்.

தமிழ்ச் சான்றோர் பேரவை இவரைப் போராளியாக அறிமுகப்படுத்தியதை நாடு அறியும். கலைஞரின் அன்றைய தமிழக அரசை முகத்திற்கு நேராகப் பார்த்துத் தமிழைப் பயிற்று மொழியாகக் கட்டாயப்படுத்த வருடத்தை அல்ல, தேதியை நிர்ணயித்தவர் இந்தப் போராளி. பிறகு அமைச்சர் தமிழ்க்குடிமகன் அவர்களால் சமரசப் படுத்தப்பட்டார்.

எங்கள் 'ஓம் சக்தி' அலுவலகத்திற்கு அத்திருமகனார் வந்து சென்றது பசுமை நினைவாக எங்களுக்குள் படமாக ஓடுகிறது. இடைவேளையே இல்லாமல் இறப்பு நிகழ்ந்து கொண்டே இருக்கிறது. இறப்பு என்பது இழப்பு என்று எண்ண வைக்குமானால், அதுவே போதும் அதன் சிறப்புக்கு. இந்தப் பட்டியலில் சிலம்பொலியார் இருக்கிறார்.

– இ.ஆர்.

# வள்ளலாரின் இலக்கணப் புலமை



வள்ளற்பெருமான் பள்ளியில் படித்தவர் என்பதற்கு எந்த ஆதாரமும் இல்லை. ஆனால், சங்க இலக்கியம் வரை அவருக்குத் தெரியும். அதனைச் சோதிப்பதற்காக ஒரு முறை பிரசிடென்சி கல்லூரிப் பேராசிரியர் தொழுவூர் வேலாயுத முதலியார் ஒரு தமிழ்ப் பாடலை எழுதி வந்து வள்ளற் பெருமானிடம் காட்டி, இந்தப் பாடல் சங்க இலக்கியத்தில் எந்தப் பிரிவைச் சார்ந்தது? என்று கேட்டார்.

வேலாயுத முதலியாரின் நோக்கம், வள்ளற்பெருமானின் புலமையைச் சோதிப்பதுதான். அந்தப் பாடலைப் படித்துப் பார்த்துவிட்டு, வேலாயுத முதலியாரிடம் பெருமான், 'இது சங்கப் பாடலே அல்ல' என்று அழுத்தமாகக் குறிப்பிட்டார்.

அதைக் கேட்டவுடன் வேலாயுத முதலியார், பெருமானுடைய திருப் பாதங்களில் விழுந்து வணங்கி எழுந்து, 'சந்தேகப்பட்டு இவ்வாறு சோதித்ததற்காக வருந்துகிறேன்' என்று சொன்னார்.

அவரோ, பேராசிரியர். பெருமானோ, பாடசாலைகூடப் போகாதவர். பெருமான் தமிழ் இலக்கியங்களை மட்டுமல்ல, இலக்கணத்தையும் படித்தவர்.

தொண்ணூறு, தொள்ளாயிரம் பற்றிப் பெருமான் சொன்ன திருத்தத்தைத் தமிழறிஞர் இரா. மதிவாணன் எழுதிய கட்டுரையை வாசித்துப் பாருங்கள், பெருமானின் தமிழ்ப் புலமையை அனுபவிக்க முடியும்.

பெருமான் பிரகடனப் படுத்திய கொள்கை "ஆருயிர்கட்கெல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்" என்ற அருட்பாவாக மலர்ந்துள்ளது. இதிலுள்ள சொல் 'அன்பு செயல்' என்பதைக் கவனியுங்கள். இலக்கணப் புணர்ச்சி விதிப்படி அன்புக்கும் செயலுக்கும் 'ச'கர ஒற்றாகிய 'ச்' எழுத்து இடம்பெற்றிருக்க வேண்டும். ஆனால், பெருமான் கவிதையில் 'அன்புச் செயல்' என்று இல்லை. 'அன்புசெயல்' என்றுதான் இருக்கிறது. ஏன்?

அன்பு என்பது காட்டுவதல்ல. காரியமாகச் செய்வது. அன்பு காட்டுவது வேறு, அன்பைச் செய்வது வேறு. பசியால் துடிப்பவனுக்காகப் பரிதாபப் படுவது அன்பு காட்டுவது மட்டும் தான். ஆனால் அவனுக்கு ஒரு பிடி சாதமாவது அளித்து அவன் பசியைத் தணிப்பதுதான் அன்புசெயல்.

அப்படியானால், அன்பு செயலாக வேண்டுமே தவிர, வெறும் குணாம்சமாக இருந்தால் போதாது. ஆகவேதான் அன்பு, செயல் என்ற இரு சொற்களையும் உருக்கி வார்ப்புச் செய்து 'அன்பு செயல்' என்று பெருமான் உருவாக்கிக் காட்டியுள்ளார்.

அதனால்தான் ஒற்றெழுத்தில்லை. இத்தகைய இலக்கியப் பின்புலத்தைக் கொண்ட வள்ளற்பெருமானைப் பற்றி 1893–இல் வெளியான நூலில் ஒரு குறிப்பு வந்துள்ளது. அந்நூல் **"தமிழ் இலக்கணத் தெளிவு."**



A GRAMMAR
OF
TAMIL GRAMMARS.

BY.
DAVID JOSEPH, B. A.,
(Author of Hints on the growth of Children.)

தமிழ் இலக்கணத் தெளிவு.

தாவீது யோசேப்பு உபாத்தியாயரால்
இயற்றப்பட்டது.

"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு." (குறள்.)

MADRAS:
PRINTED AT THE S. P. C. K. PRESS, VEPERY.
1893.
All Rights Reserved.

இந்த நூலின் முகவுரையில் டேவிட் ஜோசப் பி.ஏ. அவர்கள், "...இப்புஸ்தகம் எழுத வேண்டுமென்று யோசித்து 20 வருடங்களாகத் தமிழ் இலக்கணங்கள் பலவற்றையும் அச்சிலும், ஏட்டுப் பிரதியிலும் வாசித்து, அனந்த இலக்கியங்களையும், தீரப் பரிசோதிக்க வேண்டியதாயிற்று. ஆங்கிலேய இலக்கணத்தையும் லத்தீன், கிரேக்க இலக்கணங்களையும், சமஸ்கிருத வியாகரணத்தையும்... கற்றறிய வேண்டியதாயிற்று...

... இங்ஙனம் இலக்கணம் எழுதுவது நலம் என முதல் முதல் எனக்குப் போதித்தவர் யாழ்ப்பாணம் நல்லூர் ஆறுமுகநாவலர்; அதன்பின் அது நன்றென அநுகூலித்தவர்கள் **வடலூர் இராமலிங்கப் பரதேசியாரும்**, மாயவரம் மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்களுமே.

இது இலக்கணத்தை எளிதாகவும் பூரணமாகவும் விளக்க எழுதப்பட்ட முதல் நூலானதால், கல்விமான்களும், இலக்கணச் சிங்கங்களும் நாயினுங் கடையேனாய யான் எழுதிய இந்நூலிலுள்ள பிழைகளைப் பொறுத்து, அவற்றைத் திருத்தஞ் செய்ய வேண்டிய வழி வகைகளை அன்பாய் அடியேனுக்குப் போதிக்க மன்றாடுகிறேன்."

இப்படிக்கு
**தாவீது யோசேப்பு**
(DAVID JOSEPH, B.A.)

விசாகப்பட்டினம்
*3 ஜனவரி, 1893.*

இந்த இலக்கண நூலின் முன்னுரையைத் தற்செயலாகக் கண்டெடுத்த தென்காசிப் புலவர் ப. சோமசுந்தர வேலாயுதம் அவர்கள் 'ஓம் சக்தி'க்கு அனுப்பி வைத்துச் சன்மார்க்க அன்பர்களுக்கு இந்தச் செய்தி தெரிவிக்கப்படுமானால், பெருமானின் இலக்கணப் புலமை, இலக்கியப்புலமை, தத்துவப் புலமை அனைத்தையுமே இது தெரிவிக்கும் என்று கூறி அனுப்பியது, சன்மார்க்க அகிலத்திற்கு அவர் செய்துள்ள மிகப்பெரிய சேவையாகும். நன்றியறிதலோடு அவர் அனுப்பிய இந்தச் செய்தியை வெளியிடுகிறோம்.


ப. சோமசுந்தர வேலாயுதம்

**குறிப்பு** : 'காமம்' என்ற சொல் வள்ளுவர் காலத்தில் உயர்வான பொருள் தந்ததுபோல, 'பரதேசி' என்பதும் அன்றைக்கு உயர்வான பொருளுடையதாகக் கருதியே அப்படி எழுதப்பட்டுள்ளது.

**– ந.நி.**

# இயக்குநர் மகேந்திரன் இனி இல்லையே!

இயக்குநர் மகேந்திரன் முதலில் ஓர் இலக்கியவாதி. அதனால் இலக்கியத்திற்கும், சினிமாவிற்கும் பாலமாக இருந்தார். அதேபோல எழுத்தாளர்களின் நாவல்களை வாசித்து அசை போடுபவர். அதனால் நாவலுக்கும் சினிமாவிற்கும் நல்லுறவை ஏற்படுத்தியவர்.

தற்செயலாக *60* ஆண்டுகளுக்கு முன்பு மதுரையில் நாடோடி மன்னன் திரைப்படத்தின் வெற்றி விழாவில் எம்.ஜி.ஆர். முன்னிலையில் பேசிய மூன்று மாணவர்களில் ஒரு மாணவர் மகேந்திரன். அப்போதே அந்த மாணவர் அலெக்சாண்டர் எம்.ஜி.ஆரின் கவனத்தை ஈர்த்தார்.

கர்த்தாவாகத்தான் சினிமா என்ற வாசலுக்குள் பிரவேசித்திருக்கிறார். அதன் பின்னர்தான் அவருடைய ஆக்கப்பூர்வமான முயற்சிகள் சினிமாவில் ஒரு சிலிர்ப்பை உண்டாக்கின.

முள்ளும் மலரும், உதிரிப்பூக்கள், நெஞ்சத்தைக் கிள்ளாதே, மெட்டி, நண்டு, கை கொடுக்கும் கை, பூட்டாத பூட்டுக்கள் முதலியன அவருடைய பிரசித்தி பெற்ற படங்கள். தேவதாஸ் போல சாகாவரம் பெற்ற திரை இலக்கியங்கள் அவை என்றால் அது மிகையல்ல.

சத்யஜித் ரே யைப் போல, மிருணாள் சென் போலத் தமிழ்நாட்டின் பாலசந்தரைக் கடந்து வெற்றிபெறத் துணிந்த இயக்குநர்களில் இவர் ஒருவர். இவரிடமிருந்தே திரை ரசிகர்கள் அதிகமாக எதிர்பார்த்தனர். வாழ்ந்திருப்பாரானால் நிச்சயம் வழங்கியிருப்பார்.

தினமணி கதிரில் ஆசிரியர் கே. வைத்தியநாதன் இவரைப் பற்றி எழுதிய கட்டுரையில், அவரும் இவரும் பத்திரிகைத் துறையில் இருந்ததை அவர் சுட்டிக்காட்டிய அந்தப் பந்தத்தில், ஏதோ ஒரு சோகம் இழையோடுவதைக் காண முடிகிறது.

தமிழ் சினிமாவிற்கு இழப்புத்தான். ஏனெனில் அது பிழைப்பாகப் பலருக்கு



அவ்வாறு தொடர்ந்த உறவு, இவர் சிகரத்திற்குப் போவதற்குப் படிக்கட்டை அமைத்துக் கொடுத்தது. கடுமையான உழைப்பு. கவலை தோய்ந்த முகம் எப்போதும். கட்டுண்டு கிடந்த சினிமாவின் கட்டுகளை அவிழ்த்து அல்ல, வெட்டி விடுவிக்க முயற்சித்தவர்.

*78* ஆண்டுக்காலம் சென்னை வாழ்க்கையில் கலைஞர்களுக்கே உரிய வாழ்க்கையில் வாடியிருக்கிறார், அலைந்து திரிந்திருக்கிறார். வசன

இருக்கும்போது, இவரைப் போன்றவர்களுக்கு உழைப்பாகவும் இருந்து ரசிகர்களுக்கு மலைப்பாகவும் தொடர்ந்து இருந்த காரணத்தால்தான்.

தமிழ் சினிமா மகேந்திரனுக்குப் பிறகும் தொடர்கிறது. ஆனால், அந்தத் தொடர்ச்சி, காசு வசூல் பண்ணும் வணிகப் படங்களாக சினிமாத்துறை சாணி போடாமல் எப்போது அது புனுகு பூனை போல அந்த வாசனைத் திரவியத்தைத் தருமோ?

**– இ.ஆர்.**

சிறுகதை

**ஆட்டனத்தி**



மருத்துவர் தன் கணவரின் உடலைப் பரிசோதித்துவிட்டுத் திட்டவட்டமாகச் சொல்லி விட்டுப் போய்விட்டார். இவ்வளவு பெரிய தொகைக்கு எங்கே போவது? தன் கணவர், மருத்துவர் போட்டுவிட்டுச் சென்ற ஊசி மருந்தால் தூங்கிக் கொண்டிருந்தார்.

மகன் மருத்துவமனைக்கு வந்து தன் அப்பாவைப் பார்க்க வந்த நண்பர்களை வழியனுப்பச் சென்றிருந்தான். பார்க்க வந்தவர்கள் கொண்டு வந்திருந்த ஆப்பிள், ஆரஞ்சு, ஹார்லிக்ஸ் வகையறாக்களை மேஜையில் ஒழுங்குபடுத்திக் கொண்டு இருந்தாள்.

# கிருஷ்ணவேணியக்கா...



"தூங்கிக் கொண்டிருந்த சிவராமனையே பார்த்துக் கொண்டிருந்தாள். எப்படி இளைத்துப் போய் இருக்கிறான்? கண்களில் கண்ணீர் கோத்து நின்றது."

அது ஒரு பெரிய மருத்துவமனை. வராந்தாவில் எந்நேரமும் நர்ஸ்கள், பார்வையாளர்கள் எனப் போவதும் வருவதுமாய் இருந்தனர். அந்த வார்டு மூன்றாவது மாடியில் இருந்தது. ஜன்னல் வழியே கீழே எட்டிப் பார்த்தாள். பெரிய வளாகம். அதன் ஓரத்தில் கார்கள் வரிசையாக அணிவகுத்து நின்றிருந்தன. அங்குப் புதியதாக ஒரு கார் வந்திருந்ததையும், தன் மகன் அரவிந்த் அதன் அருகே செல்வதையும் பார்த்தாள். இவருடைய மச்சானும் அக்காவும்தான் காரிலிருந்து இறங்கி அரவிந்தோடு பேசுவதும் தெரிந்தது.

அரவிந்த் கல்லூரியில் பொறியியல் முடித்துவிட்டுச் சரியான வேலை அமையாமல் இந்த நான்கு வருடமாய் அங்கு மிங்குமாய் அலைந்து கொண்டிருக்கிறான். அப்பாவிற்கு உடல்நலம் குன்றியதிலிருந்து உற்சாகம் இல்லாமல் இருக்கிறான்.

வெளியூரில் சிவராமன் தனியார் பயிற்சிப் பள்ளியில் வார்டனாக இருந்தான். மனைவி மனோன்மணி செகண்டரி கிரேடு ஆசிரியையாகப் பணியிலிருந்தாள். இருவருமே பணியிலிருந்தாலும் அரசு ஊதியம் வாங்குகிறவர்கள் என்று சொல்லிவிட முடியாது.

சிவராமன் பணிநிறைவு பெற்றதும் தனக்குக் கிடைத்த பணத்தில் வீட்டைக் கட்டியிருந்தான். தன் மகள் பர்வதவர்த்தினிக்கு நல்ல வரன் வந்ததும் திருமணம் செய்துவிடலாம் என்ற நோக்கில் கையில் பணம் இல்லாத நிலையில், வீட்டின் மீது கடன் வாங்கிப் பர்வதவர்த்தினியின் திருமணத்தை நல்லபடியே முடித்துவிட்டான்.

"ஈச்சனாரி கோயிலுக்குப் போய்ட்டு வர்றோம். அதனாலே லேட்டாயிடுச்சு" என்று சொல்லிக் கொண்டே கோயில் பிரசாதத்தை எடுத்து மனோன்மணி கையில் கொடுத்தாள் கிருஷ்ண வேணி... சிவராமனின் அக்கா.

"ஆகா... தன் தம்பி நல்லாகணும்கறதுக்காகக் கோவிலில் போய் வேண்டிக் கொண்டு வந்திருக்கிறார்களே அக்கா..."

"பழைய காரைக் குடுத்துட்டுப் புதுக்கார் வாங்கினெ... ஈச்சனாரி போய் கார் பெயருக்கு அர்ச்சனைப் பண்ணீட்டு வந்தோம்."

அக்காவுக்குத் தன் தம்பி மீதுதான் எவ்வளவு பாசம் என்று நினைத்து முடிப்பதற்குள் ஈடு தேங்காய் போட்டுத் தன் புதுக் காருக்காகச் சாமி கும்பிடப் போனோம் என்று பச்சையப்பன் வெட்ட வெளிச்சமாக்கிட்டாரே... ஆமாம் சிவராமனின் மச்சான்.

இரண்டு, மூன்று மணி நேரம் நன்கு தூங்கட்டும் என்று மருத்துவர் சொல்லிவிட்டுப் போனதையும், யாரும் தொந்தரவு செய்யக் கூடாது என்று மனோன்மணி சொன்னதைக் கூடக் காதில் வாங்கிக் கொள்ளாமல், காரின் விலை பன்னிரண்டு லட்சம் என்பதையும் சுகமான பயணம் என்றும் தொடர்ந்து பச்சையப்பன் சொல்லிக் கொண்டேயிருந்தார்.

கிருஷ்ணவேணி தூங்கிக் கொண்டிருந்த சிவராமனையே பார்த்துக் கொண்டிருந்தாள். எப்படி இளைத்துப் போய் இருக்கிறான்? கண்களில் கண்ணீர் கோத்து நின்றது.

நான்கு மணி நேரம் கடந்து விட்டிருந்தது. சிவராமன் திரும்பிப் படுத்தவன் இலேசாய்க் கண் விழித்துப் பார்த்தான். கண்களிலும் கன்னங்களிலும் குழி விழுந்திருந்தன. ஒரு வாரமாய் முகச்சவரம் பண்ணாத நிலையில் வெள்ளை முடிகள் கன்னங்களில், முகவாய்க் கட்டையில் முளைத்திருந்தன. முதலில் விழித்ததும் தன் மனைவி எங்கே என்றுதான் தேடின.

"ஏனுங்க ஏதாச்சும் சாப்டுறீங்களா..." என்று வந்தவள் அவனின் அக்கா, மச்சான் வந்துவிட்டுப் போனதையும், சிகிச்சைக்காகப் பணத்திற்கு என்ன பண்ணி வச்சிருக்கீங்க என்று நக்கலாகச் சிரிச்சுகிட்டே போகிற போக்கில் கேட்டுவிட்டுப் போனதையும் ஹார்லிக்ஸ் கலந்துகொண்டே சொல்லி வைத்தாள் மனோன்மணி.

"ஆத்த வேண்டாம்..." என்றவாறே சூடாய் இருந்த ஹார்லிக்ஸை வாங்கிக் கொஞ்சம் கொஞ்சமாய்க் குடிக்க ஆரம்பித்தான்.

"கொஞ்ச நேரம் இருந்து பார்த்துவிட்டுப் போய் இருக்கலாமே..."

"ஏதோ அவசரமாம்..."

சிவராமனும் மனோன்மணியும் இருவரும் உத்தியோகஸ்தர்கள். எனினும் சொற்ப ஊதியம் வாங்குகிறவர்கள். பச்சையப்பனும் கிருஷ்ண வேணியும் கொழுத்த சம்பளம் பெறுகிறார்கள்.

இப்படித்தான் இருபதாண்டுகளுக்கு முன்பு சிவராமனுக்குத் தான் பார்த்த பணியில் சில சங்கடங்களைச் சந்திக்க நேர்ந்தது. பச்சையப்பனிடம் இதற்காக வாங்கிய கடனை அடைக்க முடியாமல் திண்டாடினான். மகள் படிப்பு, மகன் படிப்பு என்றும், வீட்டுக் கடன், அது இது என்று செலவுகளைச் சந்திக்கவே போதுமானதாக இருந்தது.

திடீரென்று பச்சையப்பன், தான் வேறொருவரிடமிருந்து வாங்கித் தனக்குக் கடனாகக் கொடுத்ததாகவும் இப்போது அவன் தன்னை நெருக்குகிறான் என்று அதனுடன் வட்டியையும் சேர்த்து ஒரு பெரிய தொகையையும் சேர்த்துச் சொன்னபோது இதயமே நின்றுவிடும் போல் இருந்தது.

எப்படித் திருப்பிச் செலுத்துவது?

எப்பவோ வாங்கிப் போட்ட வீட்டுமனை ஐந்தரை சென்ட் இடம்தான் கண் முன்னால் வந்து நின்றது.

விற்ற பணத்தில் அசலும் வட்டியும் சேர்த்துக் கொடுத்தது போக டூ-வீலர் ஒன்று வாங்கத்தான் ஆயிற்று.

அசையாச் சொத்தை விற்று அசையும் சொத்தை வாங்கியது போலாயிற்று.

அக்கா கிருஷ்ணவேணி, நடக்கும் சம்பவத்தைப் பார்த்துக் கொண்டு இருப்பாளே ஒழிய வேறு எந்த வார்த்தையையும் உதிர்த்துவிட முடியாது. தன் தம்பிக்குச் சாதகமாய் ஏதாவது பேசினால் ‘உன் தம்பிதான் காக்கும் கடவுள்... இங்கிருக்காதே போய்விடு...’ என்று பச்சையப்பன் தடாலடியாகச் சொல்லி விடுவான்.

சிவராமன் பயிற்சிப் பள்ளியில் பணியாற்றிக் கொண்டிருக்கிறபோது, பயிற்சியாளர்களை அழைத்துக் கொண்டு கல்விச் சுற்றுலாச் சென்று வரும் பொறுப்பு வந்து சேர்ந்தது. ஒரு மாதம் சுற்றுலா. பயிற்சியாளர்கள் ஐம்பது பேர். அவர்களுக்குத் தேவையான உணவு, கல்விச் சுற்றுலாப் பேருந்துக்கான எரிபொருள் செலவு, ஓட்டுனருக்கான செலவு பயிற்சியாளர்களிடமிருந்து பாதித் தொகையும், மீதியைப் பயிற்சிப் பள்ளி நிர்வாகத்திடமிருந்தும் பெறப்பட வேண்டும். சுற்றுலாச் செல்வதற்கு இன்னும் பத்து நாள்கள் இருக்கின்றன.

இடையில் வெளியூரில் நடைபெறும் திருமணத்திற்குப் போயாக வேண்டும். இரண்டு நாள்கள் விடுப்பு எடுக்க வேண்டிய நிலை. விடுப்பிற்குப் பின் நீங்கள் திரும்பி வரும்போது அரசு விடுமுறை. எனவே பணத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள் என்று பயிற்சிப் பள்ளி சுற்றுலாவிற்கான பணத்தை விடுவித்துவிட்டது. பயிற்சியாளர்களிடமிருந்தும் மீதிப் பணமும் வசூலாகி விட்டது.

பணத்தை எங்கு வைப்பது? விடுப்புப் பெற்றவன் மொத்தப் பணத்துடன் திருமணத்திற்குப் புறப்பட்டுவிட்டான். அப்போது சிவராமன் கையில் மொத்தம் முப்பதாயிரம் இருந்தது. அன்றைய சூழலில் பெருந்தொகை.

திருமணத்திற்குப் பச்சையப்பனும் வந்திருந்தான். இரவு முழுக்கத் திருமண நிகழ்ச்சியில் கலந்துகொள்ள வேண்டியிருந்ததால், பணம் தன்னிடம் இருப்பதைவிடத் தன் மச்சான் கொண்டு வந்திருந்த சூட்கேஸில் பத்திரமாக இருக்கட்டும் என்று அவரிடம் கொடுத்து “வைத்திருங்கள்” என்று சொல்லிவிட்டான். இரண்டு நாள்கள் அங்கே இங்கே என்று இருக்க வேண்டியது ஆகிவிட்டது. மூன்றாம் நாள் புறப்படும் போது “மச்சான் பணம்...” என்றான்.

“இதோ...” என்று சொல்லி சூட்கேசைத் திறந்து பணத்தை எடுத்தவன், கூடவே ஏதோ ஒரு வெள்ளைத் தாளையும் எடுத்தான். அதில் ஏதேதோ எழுதப்பட்டிருந்தன.

பணத்தைச் சிவராமனிடம் கொடுத்தான் பச்சையப்பன். பணத்தை வாங்கிக் கொண்ட சிவராமன் எண்ணிப் பார்த்துவிட்டுப் பச்சையப்பனைப் பார்த்தான். “ஏதேதோ பழைய கணக்கிருக்கிறது. நீ கொடுக்க வேண்டியது வட்டியுடன் சேர்த்து பதினொரு ஆயிரம்” என்றவன், அந்த வெள்ளைத் தாளை எடுத்து வாசிக்க ஆரம்பித்தான்.

சிவராமனால் வேறு எதையும் பேச முடியவில்லை. வாய் அடைத்துப் போய் நின்றான்.

‘டூர் இன்சார்ஜ்... டூரிங் ஆபீசர்...’ எல்லாம் கந்தலாகிவிட்டதே!

பல ஆண்டுகளுக்கு முன்பு நடந்த சம்பவங்களை இப்போது நினைத்தாலும் துயரம் சூழ்ந்து கொள்ளும்.

துண்டு விழும் பதினொரு ஆயிரத்தைச் சரி பண்ணிக் கொள்ளலாம் என்று தள்ளிவைக்கக் கூடியதா. டூர் ஆரம்பிப்பதற்குள் சரி பண்ணியாக வேண்டியிருக்கிறதே. இதைச் சரிக்கட்ட வேறு எங்கெங்கோ அலைந்து கொண்டு இருந்த போது தான் தன்னோடு படித்த சிநேகிதன் புஷ்பாகரன் “பயப்படாதே!” என்று சொல்லி மூன்று மாதத்திற்குள் பணத்தைத் திருப்பி விடு என்றும், அதற்கு வட்டி வேண்டாம் என்றும் சொல்லி விட்டான். கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது போல. அது அவன் பணம் அல்ல. வேறொருவரிடம் வாங்கியது.

தன் தம்பி என்ன கஷ்டப்படுகிறானோ அவனிடம் எதற்கு இப்படிப் பணத்தைக் கறக்கிறீர்கள். எத்தனை பணம் வாங்கி வைத்தீர்களோ அத்தனையையும் கொடுத்து விடுங்கள் என்று சொல்ல மாட்டாளா என்று சிவராமன் எதிர்பார்த்தான். அவளும்தான் திருமணத்திற்கு வந்திருந்தாள். எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டுதானே இருந்தாள்.

என்ன செய்வது... சொல்லிவிட்டால் அடி உதைக்கு ஆளாக வேண்டி வருமே...

“உனக்கென்ன வசதியான அக்கா, மச்சான் இருக்காங்க. பணம் முடைன்னா தீர்த்துவைக்க மாட்டாங்களா...”

நண்பர்கள் வட்டாரம் ஆர்ப்பரிக்கும் போது

அவனும் மனதிற்குள் நினைத்துக் கொள்வான்.

அப்துல் கலாமிற்குச் சகோதரி ஜோஹரா உதவியதுபோல், இந்தச் சிவராமனுக்குச் சகோதரி கிருஷ்ணவேணி உதவுகிறவள்தானே என்று நினைத்தவாறே சிரித்துக் கொள்வான்.

சிவராமன் முழுசாய்க் குணமடைந்து வீடு திரும்ப ஆறு லட்சம் ரூபாய் செலவாகுமாம்.

மாலை நேரம் –

"என்ன சிவராமன்..." என்று சொல்லிக் கொண்டே டாக்டர் உள்ளே வந்தார். பின்னா லேயே நர்ஸ்கள்.

"நல்லாத் தூங்கினீர்களா..." சிவராமனின் பதிலை எதிர்பாராமப் பேசிக் கொண்டே போனார்.

டாக்டர் பேசியது எதுவும் அவன் காதில் விழவில்லை. கட்ட வேண்டிய பணம் பற்றியே சிந்தித்துக் கொண்டு இருக்கிறான்.

மனோன்மணியிடம் நர்ஸ் சிவராமனுக்கு எந் தெந்த மாத்திரை எந்தெந்த நேரத்தில் கொடுக்க வேண்டும், காப்ஸ்யூல் எப்போது கொடுக்க வேண்டும் என்று சொல்லியவாறு இருந்தார்.

வந்தவர்கள் அனைவரும் வெளியேறவும் உள்ளே மகளும் மருமகனும் வந்தார்கள்.

தனக்குச் சீதனமாய்ப் போட்ட நகைகளை விற்றுக் கிடைத்த பணத்தை மருத்துவத்திற்குக் கட்டிவிடாலம் என்று இருவரும் சேர்ந்து முடி வெடுத்துள்ளதைச் சொன்னபோது, சிவராமனும் மனோன்மணியும் அழுதே விட்டார்கள். அவர்கள் அதை ஏற்றுக் கொள்வார்களா என்ன?

சிவராமன் தன் மச்சான் பச்சையப்பனிடம் ஒருவேளை பணம் பெற வேண்டிய சூழ்நிலை வந் தால்... மச்சான் பணம் எல்லாம் கட்டி விடுவான். ஆனால் ஒரு மாதத்திற்குள் வந்து சொல்வான் கட்ட வேண்டிய வட்டி இவ்வளவு, ஒவ்வொரு மாதமும் இத்தனாம் தேதிக்குள் கொடுக்க வேண்டும் என்று கறார் பண்ணுவான். பச்சையப் பனிடம் பணம் பெறும் பட்சத்தில் நெஞ்சுக்குள் வந்த அடைப்புகள் நீக்கிச் சீராக்கி விடலாம். ஆனால், அதற்குப் பின் பச்சையப்பன் கொடுக்கிற டார்ச்சரில், இலங்கை வேந்தன் கலங்கி நிற்பதற்கு உதாரணம் காட்டுவார்களே, கடன் பட்டார் நெஞ்சம் போல என்று... மச்சான் பச்சையப்பனிடம் கடன்பெற்று நெஞ்சுக்குள் வந்த அடைப்புகளை நீக்கிச் சீராக்குவதைக் காட்டிலும் எவ்வளவு கொடியது கடன்பட்ட நெஞ்சு வேதனைப்படுவது... ஆனால் அடைப்புகள் இருக்கும்போது நெஞ்சு படும் வேதனையைவிட, அடைப்பு நீக்கப்பட்ட பிறகு பட்ட கடனுக்கு வட்டி செலுத்துவதற்குக் கஷ்டப்படுகிற வேதனை இன்னும் அதிகம்... என்று பலவாறாகச் சிந்தித்தவாறே தூங்கிப் போனான்.

அடுத்த நாள் –

மருத்துவமனை... பார்வையாளர்களுக்கான பகுதியில் கூட்டம் நிரம்பி வழிந்தது.

"உன் தங்கச்சி வீட்டுக்காரரை எந்த வார்டில் அட்மிட் பண்ணிருக்காங்க... அவருக்கென்ன?" கேட்டாள் கிருஷ்ணவேணி.

கிருஷ்ணவேணியின் கேள்விகளுக்குப் பதில் சொன்னவள் தங்கள் இருவருக்குமிடையே இருந்த நட்பைப் பெருமை பொங்க நினைவு கூர்ந்தாள் அமுதவல்லி.

"ஆமாம்... கல்லூரியில் படிக்கும்போது ஆணாதிக்கத்தை எதிர்த்துப் போர்க்கொடி தூக்கியும் 'ஆரோக்கியம் தருமா ஆணாதிக்கம்' என்ற தலைப்பில் நடந்த பேச்சுப் போட்டியில் நீ முதல் பரிசு பெற்றதும் இன்னும் பசுமையா மனசிலே இருக்கு."

"அதெல்லாம் பேச்சோடு சரி... செயல்பாடு களில் சரி வருமா... வருதா சொல் அமுதா... இன்னிக்கு உன்னைப் பார்த்ததுகூட பழைய கிருஷ்ணவேணியா என்னைப் பாத்துகிட்டு வந்திருக்கிற நேரத்துலதா..." என்றவள் கர்ச் சீப்பை எடுத்து முகத்தைத் துடைத்துவிட்டு மூக்கைச் சிந்தியவாறே தொடர்ந்தாள்.

"என் தம்பி சிவராமனுக்கு பைபாஸ் சர்ஜரி நடக்கப் போகுது... அது விசயமாத்தா வந்தெ... பண முடையால் தவிக்கிறான். என் ஆத்துக்காரர் கொடுத்தார்னா வட்டி வட்டின்னு ஆளையே முடிச்சுப் போடுவார். என்னோட பொறந்தவனுக்கு இந்தச் சமயத்துலெ உதவலீனா... நா மனுஷி யில்லெ... அவன் நல்லா குணமடைஞ்சு வரட்டும். நா இருக்குறெ, கவலைப்படாதீடான்னு சொல்லப் போறேன்" என்று கண்கள் பனிக்கச் சொன்னவள் எழுந்தாள்.

டாக்டர்கள் மூலமும், மருத்துவமனை மூலமும் விபரம் தெரிந்து கொண்டிருந்த கிருஷ்ணவேணி, தன் தம்பிக்காகப் பணம் கட்டு



வதற்காகக் கவுண்ட்டரை நோக்கி வேகமாய்ச் செல்வதை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந் தாள் அமுதவல்லி.

புருஷன் இவளைக் கொத்தடிமையாய் வைத் திருக்கிறான் என்கிறார்களே... ஒரு செல்போன் கூடத் தனக்காக வாங்கி வைத்துக்கொள்ளத் தைரியம் இல்லாதவள் என்கிறார்களே... அவள் புருஷனுக்கு அடிமைச் சாசனம் எழுதிக் கொடுத்து விட்டு வாழ்க்கை நடத்துகிறாள் என்றும் சொன் னார்களே. இப்போ இவள் செய்கை... அப்படி நானில்லை என்றல்லவா காட்டுகிறது. 'ஆரோக் கியம் தருமா ஆணாதிக்கம்' என்று தான் பேசிய பேச்சைச் செயல்படுத்தியிருக்கிறாள் என்று மேலும் வியந்து அவள் செல்வதையே பார்த்துக் கொண்டு இருந்தாள் அமுதவல்லி.

●

இந்த ஏப்ரலில் இனியவனுக்கு 77 வயது. இலக்கிய வயது 60. அவரது 'இலக்கிய வீதி'க்கு வயது 42.

65 ஆண்டுக்கால எழுத்தனுபவம், 50 ஆண்டுக்கால இலக்கிய அனுபவம் கொண்ட இனியவன், இயல் தமிழுக்கு இன்னொரு 'பாரதி' எனலாம். இலக்கிய வீதி, சென்னை கம்பன் கழகம் எனும் இரட்டைத் தேரின் ஒற்றைச் சாரதி யாக உலா வருகிறார். ஒவ்வொரு கூட்டத்தையும் உற்சவமாகவே நடத்துகிறார்.

**இனியவன் :** உலகப் பறவைகளின் புகலிடம் 'வேடந்தாங்கல்' (விநாயக நல்லூர்) இவரது பிறப் பிடம். இவர் இலக்கியப் பறவைகளின் வேடந் தாங்கல் என்பது இவரது புகழ்த்தடம்.



# 'கலைமாமணி' இலக்கிய வீதி இனியவன் உலா : 77

விவசாயக் குடும்பம். எனினும், ஏர்க்கோல் பிடிக்காமல் எழுதுகோல் பிடித்தவர். பள்ளிப் பருவத்திலேயே தமது பதின்ம வயதிலேயே சிறு கதை எழுத்தாளராக அறிமுகமாகி, 30 – 35 வய திற்குள் நாவல், குறுநாவல், கட்டுரை, நடைச் சித்திரம் எனப் பன்முகப் படைப்பாளராகப் பிரபல மானவர் இனியவன்.

அப்போது 18 வயது. 1960–இல் மதுராந்தகத் தில் நாரண துரைக்கண்ணன் (ஜீவா) தலைமை யில் 'தமிழ் எழுத்தாளர் மாநாடு' நடத்தி, பேரறிஞர் அண்ணா, புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர். பாராட்டு களைப் பெற்றவர். அடுத்து, ஓரிரு ஆண்டுகளில் தமது சொந்த ஊர் வேடந்தாங்கலில் அழ. வள்ளி யப்பா தலைமையில் 'குழந்தை எழுத்தாளர் சிறப்புக் கருத்தரங்கம்' நிகழ்த்திய சாதனையாளர் இனியவன். 250–க்கு மேற்பட்ட சிறுகதைகள், 17 குறுநாவல்கள், 15 நாவல்கள், 2 பயண இலக்கியங் கள் என எழுதிக் குவித்தவர். 35 வயதிலேயே தமது எழுத்துப் பணிக்கு முற்றுப்புள்ளி வைத்துக் கொண்டார். 'இலக்கிய வீதி' என்றோர் அமைப் பினைத் தொடங்கி, இளம் படைப்பாளிகளின் நடைபாதை யாக்கிப் பரவசப்பட்டார்.

**இலக்கிய வீதி :** 1977 ஜூன் 10, இந்த அமைப்புத் தோன்றியது. வீடுதோறும் கலையின் விளக்கம் இதன் முழக்கமானது. 'அன்னம்' அதன் சின்னம் ஆனது. இளைய தலைமுறை எழுத்தாளர்களைப் பயிற்சிகள், போட்டிகள் மூலம் உருவாக்குவதும், முதிய படைப்பாளிகளை விருது, விழாக்கள் மூலம் ஊக்குவிப்பதும் நோக்கமாகக் கொண்டு இயங்கி வருகிறார். அந்த வகையில் 60–க்கும் மேற்பட்டவரின் நூல்களை இலக்கிய வீதி மூலம் இனியவன் பதிப்பித்ததோடு, நூற்றுக்கணக்கான தமிழறிஞர், எழுத்தாளர், கவிஞர்களைப் பாராட்டியிருக்கிறார்.

இலக்கிய வீதி, கவனகக்கலை, பொம்மலாட் டம், வில்லுப்பாட்டு, தெருக்கூத்து, நடனம், நாட் டுப்புற இசைக் கலைகளையும் அவற்றின் ஆகச் சிறந்த கலைஞர்களையும் போற்றி விழாக்கள் எடுத்துள்ளது. தற்போதைய இளைய தலைமுறை யிடம் அக்கறை கொண்டுள்ள இனியவன், நிகழ்ச்சிகளிலேயே அவர்களுக்கு வாய்ப்பளிப்ப தோடு அமுதசுரபி, மஞ்சரி, கவனகர் முழக்கம் ஆகிய இதழ்களுடன் இணைந்து இலக்கியம், அறிவியல், சமூக விழிப்புணர்வுக் கட்டுரைப் போட்டிகள் நிகழ்த்தி இளம் படைப்பாளர்களையும் உருவாக்கி, ஊக்குவித்து வருகிறார்.

தமிழறிஞர் அவ்வை ஆற்றுப்படுத்த, தலைவர் அருளாளர் ஆர்எம்.வீ. அவர்கள் அழைப்பினை ஏற்று, 2005–இல் சென்னை கம்பன் கழகத்தின் செயலாளர் ஆனார் இனியவன். கம்பன் கழகத் தின் ஆண்டு விழாக்களை (3 நாள்கள்) ஆண் டுக்கு ஆண்டு விஞ்சும்படி நடத்தி வருகிறார்.

'இலக்கிய வீதி', 'சென்னை கம்பன் கழகம்' இரண்டும் தம் இரு விழிகளெனக் கருதிச் செயல் படுபவர் இனியவன். தம் நலம் குறைந்தபோதும், தமிழ் நலம் குறையாமல் பார்த்துக் கொள்கிறார். தம் இயக்கம் சற்று தளர்ந்தபோதும், 'தமிழியக்க' மாகவே வலம் வருகிறார். வாழ்த்துவோம்!

**– மலர்மகன்**

# செவித்திறனற்றோரைப் பேச வைக்கும் சாதனைப் பள்ளி!




இயற்கை நமக்கு ஐந்து புலன்களைக் கொடுத்திருக்கிறது. மெய், வாய், கண், செவி, மூக்கு ஆகியவை இந்த ஐந்து புலன்கள். இவற்றில் எந்த ஒரு புலன் பழுதடைந்தாலும் அல்லது பிறவியிலேயே குறைபாட்டுடன் பிறந்தாலும் அந்தக் குறைபாடு வாழ்நாள் முழுதும் நம்மைத் தொடரும். புலன்களின் குறைபாடுகளால் பாதிக்கப்பட்டோர் மிகுந்த தொல்லைகளுக்கு ஆளாவதை நாம் நடைமுறையில் பார்க்கிறோம்.

மனிதர்களுக்கு உள்ள புலன் குறைபாடுகளுள் ஒன்று காது கேளாமை. இங்குக் குறிப்பிடும் காது கேளாமை என்பது இயல்பாகக் கேட்டுக் கொண்டிருந்து நாளடைவில் ஏற்படும் கேளாமை அல்ல. பிறவியிலேயே காது கேளாதிருக்கும் குறைபாடாகும்.

இப்படிக் காது கேளாமல் பிறப்பவர்களுக்குக் கேட்கும் திறன் முழுமையாக இல்லாததால், மற்றவர் கூறுவதை அறியாத நிலையில் அவர்கள் எதுவும் பேசிப் பழக இயலாது. எனவே, அவர்கள் **காது கேளாதவர்கள் என்பதோடு, பேசவும் இயலாதவர்களாக ஆகிவிடுகின்றனர்.**

இந்தக் குறைபாட்டினை நீக்க, நமது அரசாங்கம் 'காக்ளியர் இம்ப்ளாண்ட்' என்கிற அறுவைச் சிகிச்சையைச் செய்து உதவுகிறது. இந்தச் சிகிச்சை செய்வதற்கு ரூ. 10 லட்சம் செலவாகும். இது எல்லோருக்கும் சாத்தியமில்லை என்கிற நிலையில், அரசாங்கமே இதனை இலவசமாகச் செய்து உதவுவதால், இந்தக் குறைபாட்டுடன் பிறக்கும் குழந்தைகளுக்குக் காதுகள் கேட்கும் திறன் தற்காலத்தில் கிடைக்கப் பெறுகிறது.

முன்பெல்லாம், இந்தக் குறைபாட்டை அறிந்து கொள்வதற்குச் சில ஆண்டுகள் பொறுத்திருக்க வேண்டியிருந்தது. காது கேளாத குழந்தை பேசாத நிலையில், சில ஆண்டுகளில் பேசிவிடும் எனப் பெற்றோர் காத்திருந்து, பின்னர் பேசவே இயலாத நிலையிலிருப்பதைத் தாமதமாக அறிந்தனர். ஆனால், தற்போது குழந்தைகள் பிறந்த உடனேயே, மருத்துவமனைகளில் இந்தத் திறன்களையெல்லாம் கருவிகள் மூலம் சோதித்து அறிந்து விடுகின்றனர்.

எனவே, கேட்கும் திறன், பேசும் திறன், பார்க்கும் திறன் முதலியவற்றில் குறைபாடுகள் இருந்தால், குழந்தைகள் பிறந்த உடனே அவற்றை அறிந்து, அதற்கான உரிய


பள்ளியின் புதிய கட்டடத் திறப்புவிழாவில் அருட்செல்வர், மாவட்ட ஆட்சியர் திரு. முருகானந்தம், டாக்டர் எஸ்.வி. பாலசுப்பிரமணியம், டாக்டர் ம. மாணிக்கம்.

சிகிச்சைகள் செய்து கொள்ள முடியும்.

பார்க்கும் திறன் இல்லாதவர்கள்கூடத் தற்போது பிரெய்லி முறையில் கற்றுக் கொள்கின்றனர். முற்காலத்தில் அவர்களுக்கு வாய்மொழியில் கல்வி கற்பிக்கப்பட்டு, அவர்கள் புலவர்களாகக்கூட விளங்கியதை நாம் இரட்டைப் புலவர்கள், வரகவி வீரராகவன் முதலியோர் பற்றிய செய்திகளின் வாயிலாக அறிகிறோம்.

ஆனால், காது கேளாமல், அதனால் வாய்மொழிப் பேச்சும் இல்லாமல் இருக்கும் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிப்பது மிகவும் கடினம்.

இந்த வாய்மொழிப் பயிற்சி தரும் பள்ளி ஒன்று கோவையில் 23 ஆண்டுகளாகச் செயல்பட்டு வருகிறது. அது, 'பத்மபூஷண்' அருட்செல்வர் ஐயாவின் 'மகாலிங்கம் மாரியம்மாள் மணி விழா அறக்கட்டளை'யின் சார்பில் நடத்தப்படும் "கஸ்தூர்பா காந்தி காதுகேளாதோர் வாய்மொழிப் பயிற்சிப் பள்ளி." இது கோவை வரதராஜபுரத்தில் உள்ளது.

கஸ்தூர்பா காந்தி காதுகேளாதோர் வாய்மொழிப்பயிற்சிப் பள்ளி, 1996–ஆம் ஆண்டு அக்டோபர் 2–ஆம் தேதி 5 குழந்தைகளுடன்




*காந்தியடிகள் பிறந்த நாள் விழாவில் பள்ளியின் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம், திருமதி கௌரி மாணிக்கம், திருமதி விஜயவல்லி மாரிமுத்து, தலைமையாசிரியை திருமதி சி.கே. அமிர்தவல்லி.*

எனவே, சைகை மொழியின் மூலம் அவர்களுக்குக் கல்வி கற்பிக்கப்பட்டு வந்தது. இப்போதும் அப்படிக் கற்பிக்கப்படுகிறது. இவர்களுக்காகவே தொலைக்காட்சிச் செய்திகளில் சைகையில் செய்தி தெரிவிக்கப்படுவதைப் பார்க்கிறோம்.

ஆனால், அவர்களுக்குக் 'காக்ளியர் இம்ப்பிளாண்ட்' அறுவைச் சிகிச்சை செய்து, கேட்கும் திறனை உண்டாக்குவதால், வாய்மொழிப் பயிற்சியும் கொடுத்து, இயல்பான மாணவர்களாக, இயல்பான மனிதர்களாக அவர்களை மேம்படுத்த முடிகிறது.

அருட்செல்வர் ஐயா அவர்களால் தொடங்கப்பட்டது. தற்போது 40 குழந்தைகள் இங்குப் பயின்று வருகிறார்கள்.

அருட்செல்வர் இதைத் தொடங்குவதற்கு முக்கியக் காரணமாக இருந்தவர் சக்தி குழுமங்களின் தற்போதைய தலைவர் டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள் ஆவார்.

கோவையில் உள்ள காது கேளாதோருக்கான பிற பள்ளிகளில் சைகை மொழியின் மூலமாகத்தான் கல்வி கற்பிக்கிறார்கள். கஸ்தூர்பா காந்தி

பள்ளிக் குழந்தைகளின் கலைநிகழ்ச்சி

காது கேளாதோர் வாய்மொழிப் பயிற்சிப் பள்ளியில்தான் சைகை மொழியில் இல்லாமல், வாய்மொழியில் பேசுவதற்குப் பயிற்சி தந்து கற்பிக்கப்படுகிறது.

இதுவரை சுமார் ஆயிரம் குழந்தைகள் இங்குப் பயிற்சி பெற்று, இயல்பாகப் பேசும் மாணவர்கள் பயிலும் மற்ற பள்ளிகளில் சேர்ந்து பயில்கிறார்கள். பலர் பட்டப்படிப்பை முடித்து நல்ல பணிகளுக்கும் சென்றுள்ளனர்.

தொடக்கத்தில் 10–ஆம் வகுப்பு வரையிலும் கூட இந்தப் பள்ளி செயல்பட்டு வந்துள்ளது. அப்போது, இப்பள்ளி மாணவர்கள் காது கேளாதோருக்கான பிரிவில் மாநிலத்திலேயே முதலிடம் பெற்றுள்ளனர்.

தற்போது, மாணவர்கள் இங்குப் பெறும் பயிற்சியினால் 5–ஆம் வகுப்புப் பயில்வதற்குள் இயல்பான நிலைக்கு வந்து விடுவதால், குறைபாடற்றோர் பயிலும் மற்ற பள்ளிகளில் சேர்ந்து நன்குப் படித்து வருகின்றனர். எனவே, உயர்நிலைப்பள்ளி தேவைப்படவில்லை. இப்போதும் 6–ஆம் வகுப்பிற்கு மாணவர்கள் சேர்க்கை ஏற்பட்டால் தொடர்ந்து நடத்தப்படும்.

நாகர்கோவிலில் கிறிஸ்டோபர் என்பவர் இதுபோன்ற பள்ளியை நடத்தி வருகிறார். அவர்தான் தொடக்கத்தில் இந்தப் பள்ளிக்கும் வந்து எப்படிக் கற்பிப்பது என்பதைக் கற்றுத் தந்த வழிகாட்டியாவார். முன்னர் அடிக்கடி இங்கு வந்து கற்பித்தல் தொடர்பான ஆலோசனைகளை வழங்கி ஆசிரியைகளுக்குப் பயிற்சி கொடுத்தார். இங்குள்ள ஆசிரியைகள் அங்கு சென்று பார்த்த போதுதான், இக்குழந்தைகள் இயல்பாகப் பேசுவதைக் கண்டு, இங்கும் இக்கற்பித்தல் முறையை நன்கு செயல்படுத்தினர்.

தற்போதும் டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள் இந்தப் பள்ளியை நிர்வாகம் செய்து வருகிறார். அவருடன் அவரது மனைவியார் திருமதி கௌரி மாணிக்கம் அவர்கள் மிகுந்த ஈடுபாட்டுடன் செயல்பட்டு வருகிறார். அடிக்கடி பள்ளிக்கு வந்து நேரடியாகக் குழந்தைகளின் கற்றல், பேச்சுப் பயிற்சி முதலியவற்றைக் கவனிக்கிறார்.

பொதுவாக, இம்மாதிரிச் சிறப்புப் பள்ளிகள் எவற்றிலும் பள்ளியின் உள்ளே பெற்றோர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. ஆனால், இந்தப் பள்ளியில் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுடன் காலை முதல் மாலை வரை வகுப்பறையிலேயே இருந்து, அவர்கள் கற்பித்தலைக் கவனிக்கின்றனர். இதனால், வகுப்பறையில் மட்டுமின்றி, வீட்டிலும் இக்குழந்தைகளுக்குப் பேச்சுப் பயிற்சி தருவது எப்படி என அவர்கள் அறிந்து கொள்கின்றனர். எனவே, இக்குழந்தைகள் விரைவாகப் பேசப் பழகிக் கொள்கின்றனர்.

ஒரு வகுப்பறையில் 7 குழந்தைகள்தான் இருப்பர். ஒரு குழந்தைக்கு ஆசிரியர் கற்பித்தால், அதைப் பார்த்துப் பிற குழந்தைகளுடன் இருக்கும் பெற்றோர் தங்கள் குழந்தைகளுக்குக் கற்பிக்கிறார்கள். இதனால், குழந்தைகள் இயல்பாகவே விரைவாக முன்னேறுகின்றனர்.

இந்தப் பள்ளியில் கட்டணம் மாதத்திற்கு ரூ. 150 மட்டும்தான். அதுவும்கூடத் தர இயலாத குழந்தைகளுக்கு, ‘மகாலிங்கம் மாரியம்மாள்




மணிவிழா அறக்கட்டளை' நிர்வாகமே செலவை ஏற்றுக்கொண்டு இலவசமாகக் கல்வி கற்பிக்கப் படுகிறது. மற்ற பல பள்ளிகளில் மணிக்கு இவ்வளவு ரூபாய் என்ற அளவில் கட்டணம் பெறுவதாகக் கூறப்படுகிறது.

இப்பள்ளியில் படிப்புத் தவிர, கைத்தொழி லாகப் பரிசுப் பொருள்கள் தயாரித்தல், பொம் மைகள் செய்தல், தையல், விளையாட்டு, தோட்டக் கலை, ஆடல் முதலியனவும் கற்பிக்கப்பட்டுக் குழந்தைகள் சிறந்த முறையில் உருவாக்கப்படு கின்றனர்.

காது கேளாத குழந்தைகளுக்கு ஏதேனும் ஒரு மொழியில்தான் கற்பிக்க வேண்டும். ஏனெ னில், மற்றொரு மொழியைக் கூடுதலாகக் கற்கத் தொடங்கினால், போதிய திறன் இல்லாமையால் அவர்களுக்குக் குழப்பங்கள் ஏற்படும். எனவே, தமிழ்நாடு அரசு பாடநூல் நிறுவனத்தின் பாடநூல் களே தமிழ் வழியில் கற்பிக்கப்படுகின்றன.

ஒரு மொழியில் இவர்கள் நன்கு தேறி இயல்பான நிலைக்கு வந்தபின் வேறு பள்ளிகளில் சேர்ந்து ஆங்கிலமும், தேவைப்படும் பிற மொழி களும் கற்றுக் கொள்ளலாம். இங்கே படிப்பதற்கு ஆங்கிலம் தேவையில்லை என அரசு ஆணை உள்ளது. இதனால் ஆங்கிலம் படிக்க விதி விலக்குக் கிடைக்கிறது.

3 – 4 ஆம் வகுப்புகளுக்கு வரும்போது இயல் பாகப் பேசத் தொடங்கி விடுகின்றனர். அதற்கு நாம் வீட்டிலும் பேச்சுப் பயிற்சி கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும்.

இந்தப் பள்ளியில் விடுதி வசதி இல்லை. வெளியூரிலிருந்து இங்கே குழந்தைகளைச் சேர்க்க வருபவர்கள் இந்தப் பகுதியிலேயே வந்து தங்கி விடுகின்றனர். விடுதியில் இருந்தால் பள்ளிப் பயிற்சி மட்டுமே கிடைக்கும். வீட்டி லிருந்து பள்ளிக்கு வந்தால், வீட்டிலும் பெற்றோர் களோடு இருந்து பேசப் பழகிக் கொள்வார்கள். இது கூடுதல் பயிற்சியாக இருக்கும்.

இதனால், விரைவாக, இப்பள்ளியிலிருந்து குறைபாடற்ற மாணவர்கள் படிக்கும் பள்ளி களுக்குச் சென்று சேர்ந்து பயில முடிகிறது. கிருஷ்ணகிரி, உடுமலைப்பேட்டை, சேலம் எனப் பல பகுதிகளிலிருந்து வந்து இங்கே படிக்கும் குழந்தைகளின் பெற்றோர்கள் இப்பகுதியிலேயே தங்கிப் படிக்க வைக்கின்றனர்.

இங்கு 7 ஆசிரியைகள் இருக்கின்றனர். இந்த ஆசிரியைகள், காது கேளாத குழந்தை களுக்குக் கற்பிக்கும் கல்வியியல் சிறப்புப் பட்டப்படிப்புப் (Special B.Ed.) படித்தவர்கள்.

அருட்செல்வர் இருந்தபோது, நேரம் கிடைக்கும் போதெல்லாம் இந்தப் பள்ளிக்கு வந்து பார்த்துச் செல்வார். டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள் அடிக்கடி வந்து பார்த்துச் செல்வார். வெளிநாட்டுப் பிரதிநிதிகளை அழைத்து வந்து காட்டுவார்.

திருமதி கௌரி மாணிக்கம் அவர்கள் ஒவ்வொரு குழந்தையிடமும் தனிப்பட்ட அக்கறை எடுத்துக் கவனித்துக் கொள்கிறார். அவர்களை எப்படி முன்னேற்றலாம்? என்னென்ன வழியில் தனிக்கவனம் எடுத்துக் குழந்தைகளுக்குக் கற்பிக்கலாம் என்றெல்லாம் நேரடியாகக் கவ னித்து ஆலோசனைகள் கூறுவதோடு, குழந்தை களின் தாய், தந்தை இருவரையும் வரவழைத்து

அவர்களிடமும் ஆலோசனைகள் கூறுவார்.

பள்ளியில் கற்பிப்பதோடு, எல்லா வெளியிடங்களுக்கும் அக்குழந்தைகளை அழைத்துச் சென்று கற்பிக்கின்றனர். சான்றாக, மளிகைக் கடைக்கு அழைத்துச் சென்று, என்னென்ன பொருள்கள் அங்கு இருக்கின்றன என்பதைக் காட்டிக் காட்டி, அவற்றை வாங்குவதற்குக் கற்றுத் தருகின்றனர். இப்படியே உணவகங்கள், பேருந்து நிலையங்கள், தொடர்வண்டி நிலையம், மருத்துவ மனை முதலிய இடங்களுக்கு அழைத்துச் சென்று,


தலைமையாசிரியை
திருமதி சி.கே. அமிர்தவல்லி

கோயில்களுக்கு அழைத்துச் சென்று, கொடி மரம், பலிபீடம், அர்த்தமண்டபம் முதலிய கோயில்களின் அமைப்பு, கடவுளின் வடிவங்கள், வழிபாட்டு முறைகள் முதலியன நேரடியாகக் கற்பிக்கப்படுகின்றன. இவற்றில் பல செய்திகள் பெற்றோர்களே தங்கள் குழந்தைகளுடன் சேர்ந்து தான் அறிந்து கொள்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

மாணவர்களே இங்குத் தோட்ட வேலைகளும் செய்கின்றனர். அவர்கள் நட்ட பூச்செடிகள்தான் பள்ளியில் இன்று மலர்களையும், நறு மணத்தையும் தந்து கொண்டிருக்கின்றன.


வகுப்பறையில் குழந்தைகளுடன் பெற்றோர்கள்.

இந்தப் பள்ளியைப் பொறுத்தவரை இங்கே தச்சு வேலை செய்பவர், மின்சார வேலை செய்பவர் முதலியோர் வருகின்றனர். மருத்துவமனை, தோட்டம் முதலிய எல்லா வசதிகளும் உள்ளன. எனவே, குழந்தைகளுக்குப் பல செய்திகளையும் கற்பிப்பது இங்கே எளிதாக உள்ளது.

நாள்தோறும் பகல் உணவுக்கு முன்னர் யோகாசனப் பயிற்சி அளிக்கப்படுகிறது. இந்தப் பயிற்சியில் குழந்தைகளோடு பெற்றோர்களும் சேர்ந்து கலந்து கொள்வது குறிப்பிடத்தக்கது.

அங்குப் பணி செய்யும் பலதரப்பட்டவர்கள், பல தரப்பட்ட பணிகள், நடைமுறைகள் முதலியவற்றைக் கற்பிக்கின்றனர்.

தீபாவளிப் பண்டிகை என்றால், பட்டாசுக் கடைக்கு அழைத்துச் சென்று அவற்றை வாங்கக் கற்பித்துப் பள்ளியில் தீபாவளி கொண்டாடப்படுகிறது. இதேபோல், பொங்கல் பண்டிகையின் போது, பண்டிகை பற்றிய செய்திகளை எடுத்துக் கூறி, பள்ளியிலேயே பொங்கல் வைத்துக் கொண்டாடப்படுகிறது. கிறிஸ்துமஸ் பண்டிகை பற்றியும் சொல்லிக் கொடுத்து, அரிமா சங்கத்திலிருந்து கிறிஸ்துமஸ் தாத்தா வேடத்தில் வருபவர்கள் மூலமாகப் பரிசுப் பொருள்கள் தரப்படுகின்றன.

தலைமை ஆசிரியை திருமதி அமிர்தவல்லி அவர்கள் தலைமையிலான ஆசிரியைகள் மிகுந்த அர்ப்பணிப்போடும் சேவை மனப்பான்மையுடனும் இங்குள்ள குழந்தைகளைக் கவனித்துக் கற்பிக்கின்றனர். அவர்களின் சேவை மிகவும் போற்றத்தக்கது.

காது கேளாத குறைபாடுள்ள குழந்தைகள் வாய்மொழிப்பயிற்சியும், கல்வியும் பெறுவதற்கு இப்பள்ளியில் சேர்க்க, 0422-2591825 என்ற தொலைபேசி எண்ணிலும், 96593 76480 என்ற செல்லிடப்பேசி எண்ணிலும் தொடர்பு கொள்ளலாம். ●

LED, கலர் டி.வி, ரெஃப்ரிஜிரேட்டர், ஏர்கண்டிஷ்னர், வாஷிங் மெஷின், மற்றும் அனைத்து தரமான வீட்டு உபயோக பொருட்களை குறைந்த விலையில் வாங்க சிறந்த இடம்.

Easy Finance Options BAJAJ Finance

Exchange offer

Gift Coupons Available

*Free gift with every purchase

*Free delivery with in city Limits

Open on Sundays






| | | | | | |
|---|---|---|---|---|---|
| LG | SAMSUNG | SONY | PHILIPS | VIDEOCON | ONIDA |
| Godrej | Whirlpool | SIEMENS | IFB | | Prestige |
| ELGI ULTRA | Preethi | V-GUARD | BOSCH | Micromax nothing like anything | HAVELLS |
| VOLTAS LIMITED | Butterfly® | TATA Sky | CG Crompton Greaves | USHA | |
| BPL EMERGENCY LIGHT | Preethi INDUCTION COOK TOP | EUREKA FORBES Your friend for life | | CASCADE | VENUS® WATER HEATER |

*For purchase above RS.8000/- condition apply




# நா. மகாலிங்கம் & கம்பெனி

68, Dr, Nanjappa Road, Near Central Bus Stand
Coimbatore - 641 018.
Ph: 2239834 / 2239841 / 2239803 / 2239811

D by sr printers 9843110277

Registered with Registrar of Newspapers for India No. 42582/83
Licensed to post without Pre-payment under Regn. No. TN/WR/CBE/016/WPP/2018-20

Date of Publication
28.4.2019

Regd.No.CB/016/2018-20
OM SAKTHI - MAY - 2019




An Autonomous Institution

# Dr. MAHALINGAM
## COLLEGE OF ENGINEERING AND TECHNOLOGY

Affiliated to Anna University, Chennai; Approved by AICTE ; Accredited by NAAC with Grade 'A++'
Udumalai Road, Pollachi - 642 003. Tel: 04259-236030/40/50 Fax: 04259-236070 www.mcet.in




COUNSELLING CODE
**2706**




MCET has been recognised by MHRD to establish "Institution Innovation Council (IIC)"






TIER 1 ACCREDITED COURSES*



RANK BAND OF 151-200 in Engineering India Ranking 2018



## Empowering Students to accomplish their dreams

*Dr. Mahalingam College of Engineering & Technology (MCET), an engineering institution with two decades of service offers quality education and training.*




**PROGRAMMES**

(*Tier 1 - Accredited by NBA)

### B.E. / B.Tech
- Mechanical Engg.*
- Automobile Engg.*
- Civil Engg.*
- Electrical & Electronics Engg.*
- Electronics & Communication Engg.*
- Electronics & Instrumentation Engg.*
- Computer Science & Engg. *
- Information Technology
- Mechatronics Engg.
- Production Engg.

### M.E. / MCA
- CAD / CAM
- Applied Electronics
- Computer Science & Engg.
- Communication Systems
- Structural Engg.
- Master of Computer Application

### Ph.D
- Mechanical Engg.
- Electrical & Electronics Engg.
- Electronics & Communication Engg.
- Computer Science & Engg.
- Civil Engg.

MCET has the unique position of being the only Autonomous Engineering College in Tamil Nadu till date to have been conferred with the **highest grade of A++** by National Assessment and Accreditation Council (NAAC).









**MCET has obtained Platinum Rating for the year 2018 in the AICTE - CII Survey of Industry Linked Technical Institutions 2018.**

**15** CENTERS OF EXCELLENCE
**90%** STUDENTS OFFERED PLACEMENTS
**1309** STUDENTS UNDERWENT INTERNSHIP
**MCET CONNECT –** INTERACTIVE LEARNING EXPERIENCE THROUGH TABLETS



On Campus Techno-Commercial Ventures (Caresoft Global Pvt. Ltd., VVDN Technologies, ABT Info.net - An Internet Data Centre, ABT Maruti Ltd.)



International Collaboration with Canadian & Australian University

DIAMOND JUBILEE YEAR 1957 - 2017

